


# லைப்பாய் இருக்குமிடம்
## அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்

எல்லாம் இன்ப மயம் -- லைப்பாய் தேய்த்துக்
குளிக்கும் நயம்! ஆஹாஹா ... கிளுகிளுக்கும்
ஆரோக்கிய சுகம்! அன்றாட அழுக்கிலிருந்து நாம்
தப்பமுடியாது; அழுக்கிலுள்ள கிருமிகளைக்
கழுவிக் களைவது லைப்பாய் -- குடும்ப
முழுமைக்கும் குன்றாத ஆரோக்கிய சுகம்!

L. 23-X29 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு



பக்கத்திலே நானிருக்க,
பறந்துசெல்வீர்
பி.ஓ.ஏ.ஸி.ரோல்ஸ்-ராய்ஸ்
மற்றும் காமெட்
ஜெட்லைனர் மூலம்
"...தருவேன் உங்கள் ருசிக்கேற்ற உணவு."
தவணை முறைப்படி டிக்கட் வழங்கும் பி ஓ ஏ ஸி திட்டத்தைப் பயன்படுத்திக்கொள்ளுங்கள்.
பயணம் முந்தி-பணம் பிந்தி!
B·O·A·C
உலகம் முழுவதும் பி. ஓ. ஏ. ஸி.
உங்களை நன்கு பேணுகிறது
ஏர் இந்தியா மற்றும் க்வான்டாஸ் அவர்களோடு கூட்டமைந்த பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பொரேஷன்.



# கல்கி பொருளடக்கம்

பிலவ, ஆடி 15 ❁ ஜூலை 30, 1961



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 53

# மந்திரி கண்ட விநோதம்

மத்திய தொழில்-வர்த்தக மந்திரி கே. வி. ரெட்டி அவர்கள் தாம் ஒரு விநோதத்தைக் கண்டு வருவதாகச் சென்றவாரம் ஹைதராபாத்தில் தெரிவித்திருக்கிறார். அதாவது 'பஞ்சாபில் சின்னஞ்சிறு குடிசைத் தொழில்கள்தான் உண்டு, பெரும் தொழிற்சாலைகள் பஞ்சாபில் ஏதும் நடத்தப்படவில்லை. இரும்புத் தொழிற்சாலை, நிலக்கரிச் சுரங்கங்கள் முதலியவை பீகாரில்தான் இருக்கின்றன. ஆனால் இதில் விந்தையென்னவெனில், சிறு தொழில்கள் நிறைந்துள்ள பஞ்சாபில் தனிமனிதனின் சராசரி வருமானம், பெருந் தொழில்கள் நிறைந்துள்ள பீகாரில் உள்ளதை விட மிக அதிகமாக இருக்கிறது' என்று கூறியிருக்கிறார்.

இதைத்தான் சுதந்திரக் கட்சி பல காலமாக வற்புறுத்தி வருகிறது. இதை மந்திரி திரு கே. வி. ரெட்டி எடுத்துக் காட்டியதற்கு நன்றி செலுத்துகிறோம்.

இன்றைய காங்கிரஸ் சர்க்கார், தவறான முறையில் திட்டங்கள் வகுக்கிறது. படாடோபத்துக்காகவும், மேனாட்டு யாத்திரீகர்களுக்கும், மந்திரிகளுக்கும் இந்தியாவும் முன்னேறுகிறது என்பதைக் காண்பிப்பதற்காகவும், பெரிய இயந்திரத் தொழிற் கூடங்களை நடத்துகிறது. இவற்றினால் இந்தியப் பாமர மக்கள் பயனடையப் போவதில்லை என்று சுதந்திரக்கட்சி ஆதிநாளிலிருந்தே சொல்லி வந்தது. இந்தப் படாடோபத் திட்டங்களுக்குப் பதில் கிராமந்தோறும் சிறு கைத்தொழில்களை நாட்டு மக்களே தோற்றுவித்து நடத்த ஊக்கமும் உற்சாகமும் அளிக்கும் வகையில் திட்டம் அமைத்தால் தேசம் விரைவில் சுபிட்சமடையும் என்று சொல்லி வருகிறது.

ஆனால் பிரதமர் முதல் பாமரக் காங்கிரஸ்காரர் வரையில், சுதந்திரக்கட்சி, திட்டமே வேண்டாம் என்றும் நாட்டில் தொழில் வளம் கொழிக்கக் கூடாது என்றும் நினைப்பது போலப் பேசியும் காரியங்கள் செய்தும் வருகின்றனர்.

மந்திரி திரு கே. வி. ரெட்டி ஒப்புக் கொண்டாற்போல், சண்டிகர் என்ற விகாரமான நகரைச் சிருஷ்டிக்கக் கோடிக்கணக்கான ரூபாயைச் செலவிட்டதன்றி, பஞ்சாபில் விசேஷமாகத் தொழிற்கூடங்கள் ஏற்படுத்தச் சர்க்கார் பண முதலீடு செய்யவில்லை. இவ்வளவுக்கும் பஞ்சாப் தேசப் பிரிவினை காரணமாக மிகவும் பாதிக்கப்பட்ட பகுதி. லட்சக்கணக்கான மக்கள் பாகிஸ்தானிலிருந்து வீடு வாசல் நிலபுலன்களைத் துறந்து அகதிகளாக வந்தார்கள். அப்படிப்பட்ட பகுதியில் இன்று அகதிப் பிரச்னை கிடையாது. பிச்சைக்காரர் பிரச்னை கிடையாது. கிராமந்தோறும் சிறு சிறு யந்திரத் தொழில்கள் இயங்குகின்றன. தையல் இயந்திரங்கள் போல் சிறு சிறு யந்திரங்கள் உற்பத்தி செய்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து தாங்கள் சந்தோஷமாக இருப்பதோடன்றி, சர்க்காரின் விரயம் செய்வதற்கும் அன்னியச் செலாவணி சம்பாதித்துத் தருகின்றனர்.

இருநூறு கோடி ரூபாய், முந்நூறு கோடி ரூபாய் போட்டுச் சர்க்கார் நடத்தும் தொழில்கள் எப்படி இயங்குகின்றன என்பது நாடறிந்த விஷயம். ரூர்கேலாவில் நடைபெறும் சர்க்கார் எஃகுத் தொழிற்கூடத்தின் மானேஜர் திரு சாம்பசிவம் அவர்கள், அழாதகுறையாகத் தாம் அனுபவித்து வரும் பல்வேறு கஷ்டங்களையெல்லாம் விவரித்திருக்கிறார்.

முதலில் இந்தத் தொழிற் கூடத்துக்கு மூலப்பொருளாக வரும் இரும்புச் சத்துள்ள மண்ணில், எதிர்பார்த்ததைவிட மிகக் குறைவான இரும்புச் சத்து இருப்பதாகக் குறைப்பட்டிருக்கிறார். 58 சதவிகிதம் இரும்புதான் இருக்கிறதாம். இந்தத் தொழிற்கூடத்துக்குத் தரப்படும் நிலக்கரியில் 25 சதவிகிதம் சாம்பல் இருக்கிறதாம். இவை எஃகு உற்பத்தியைப் பாதித்திருக்கிறது என்கிறார்.

இந்த ரூர்கேலா யந்திரக்கூடம் ஜெர்மன் மூலதன உதவியுடனும் தொழில் நுட்ப நிபுணர்கள் உதவியுடனும் நிர்மாணிக்கப்பட்டது. ஜெர்மன் நிபுணர்கள் இந்திய சர்க்காரிடம் இதை ஒப்படைத்த போது, மாதத்துக்கு 60,000 டன் எடையுள்ள இரும்பை உற்பத்தி செய்யும் என்பதை நிரூபித்துக் காண்பித்து ஒப்படைத்தார்கள். ஆனால் இன்று சுமார் 33,000 டன் இரும்புதான் பொதுவாக உற்பத்தியாகிறதாம்.

நிலைமை இப்படியிருக்க, மந்திரி திரு கே. வி. ரெட்டி விரைவில் நமது எஃகை வெளிநாடுகளுக்குக் கூட ஏற்றுமதி செய்யக் கூடும் என்று அதே ஹைதராபாத் கூட்டத்தில் பேசியிருக்கிறார்! எந்த ஆதாரத்தின்மேல் இம்மாதிரி பேசுகிறார் என்று தெரியவில்லை.

அரசாங்க தொழிற் ஸ்தாபனங்கள் திறமையாகச் செயலாற்ற முடியாமற் போவதற்குக் காரணம் அதிகாரப் பொறுப்பு முழுதும் ஒரே இடத்தில் மையமாகக் குவிந்திருப்பதுதான் என்ற ஞானோதயம் சர்க்காருக்கே ஏற்பட்டிருக்கிறது! இதுவும் நீண்ட நாட்களாகச் சுதந்திரக் கட்சி சொல்லி வருவதுதான்.

ஆக, இப்பொழுதெல்லாம் மந்திரிகள், தங்கள் நிர்வாகத் தவற்றை உணர்கிறார்கள். ஒவ்வொரு சமயம் மறந்து வெளிப்படையாகவும் சொல்லி விடுகிறார்கள். இப்படிச் சொல்லி விடுவதால் இந்தத் தவறுகள் திருத்தப்படுமோ என்று பொது மக்கள் எதிர்பார்த்தால் ஏமாற்றப் படுவார்கள். காங்கிரஸின் சோஷலிஸக் கொள்கை, இந்தத் தவற்றை அதிகப்படுத்தத்தான் செய்யுமே தவிரக் குறைக்கப் போவதில்லை!

## கல்கி ஆண்டு மலர்

மூஷிக வாகனருடைய ஆசியுடன் ஆரம்பமாகி இன்று வரை அமோகமாக நடைபெற்று வரும் 'கல்கி' பத்திரிகைக்கு இந்த இதழுடன் இருபதாண்டுகள் பூர்த்தியாகின்றன. ஆரம்ப முதல் இன்று வரை இப்பத்திரிகைக்கு ஒரே நோக்கம் தான்: அதுதான் தேச நலன்.

இந்த இருபதாண்டுகளில் தமிழ்கூறும் நல்லுலகமெங்கிலும் உள்ள மக்களுக்கு 'கல்கி' புரிந்துள்ள பணி அளப்பரியது.

மக்கள் எதை விரும்புகிறார்களோ அதை மட்டும் பிரசுரிக்காமல் அவர்கள் எதை விரும்ப வேண்டுமோ அதையும் பிரசுரித்து வந்துள்ளது குறித்துத் தயக்கம் ஏதுமின்றிப் பெருமைப் படுகிறோம்.

பற்பல விஷயங்களிலும் மக்களின் அபிப்பிராயங்களை உருவாக்குவதில் பெரும் பங்கு உங்கள் அபிமானப் பத்திரிகையான 'கல்கி'க்கு உண்டு.

உங்கள் அபிமானத்துக்குப் பாத்திரமான குடும்பப் பத்திரிகை கல்கியின் அடுத்த இதழ் ஆண்டு மலராக வெளிவருகிறது. நாற்றுநாற்பத்திநாலு பக்கங்களைக் கொண்ட இம்மலரில் பல புதிய அம்சங்கள் இடம் பெறுகின்றன.

ராஜாஜியின் சிறுகதை ஒன்று மலருக்கு மணம் கூட்டுகிறது.

விந்தன், கோமதி ஸ்வாமிநாதன், ஸ்ரீ வேணுகோபாலன், பிலஹரி, வாசவன் ஆகியோரது சிறுகதைகளும் கட்டுரைகளும் இடம் பெறுகின்றன.

நேயர்களது நெஞ்சங்களில் நிலையானதொரு இடம் பெற்றுவிட்ட அகிலனது புதிய தொடர்கதையான புது வெள்ளமும் இவ்விதழிலிருந்து பெருக்கெடுக்கப் போகிறது. அன்பர்கள் ஆண்டு மலரை ஆவலுடன் எதிர்நோக்கி இருப்பதில் ஆச்சரியமென்ன?

## விரோதிக்கு உபதேசம்

நமது ராஜ்ய போலீஸ் மந்திரி அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பாதுகாக்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டிருக்கிறார்! 'நீங்கள் சோஷலிஸத்தை ஒத்துக் கொள்பவர்களாயிற்றே! சுதந்திரக் கட்சியுடன் கூட்டுச் சேராதீர்கள்' என்று தி. மு. க. வுக்கு உபதேசிக்கிறார்.

எதிரி யாருடன் சேரலாம், யாருடன் சேரலாகாது என்று எதிரிக்கே உபதேசம்

செய்வது விசித்திரம். 'ரஷ்யர்கள் கம்யூனிஸ்டுகளாயிற்றே: நீங்கள் அவர்களுடன் சேரலாமா?' என்று ஹிட்லர் அமெரிக்கர்களைக் கேட்டிருந்தால் எப்படியிருக்கும்? அதைப் போலவே இருக்கிறது இதுவும்.

ஆழ்ந்து கவனித்தால் இதிலுள்ள தந்திரோபாயம் புரியும். காங்கிரஸுக்குச் சாதகமாக வோட்டுக்கள் பல முனைகளில் சிதறிப் போக வேண்டும் என்பதே இன்று காங்கிரஸ் அரசாங்கத்தின் கவலையாகிவிட்டது. எதிர்க் கட்சிகள் ஒன்றுசேர விடாமல் செய்வதற்காகவே 'உபதேசங்கள்' வழங்கப்படுகின்றன.

சோஷலிஸத்தைப் பற்றி மந்திரி சொல்லியிருக்கிறார். இந்த சோஷலிஸம் என்பதில் எத்தனை எத்தனையோ வகைகள். காங்கிரஸின் தனி மோஸ்தரானது வேண்டியவர்களுக்கு லைசன்சுகளும் பர்மிட்டுகளும் கொடுத்து அதன் மூலம் ஏகபோக உரிமைகளை அளித்துத் தன்னைப் பலப்படுத்திக் கொள்வதுதான். இந்த ஏதேச்சாதிகாரத்தை ஒழித்துக் கட்டுவதில் முனைந்து போராட, வாழ்வானாலும் சாவானாலும் உறுதியோடு நிற்க வேண்டியது மற்றக் கட்சிகளின் கடமை. காங்கிரஸின் சோஷலிஸம் எப்பேர்ப்பட்ட மோசவலை என்பதைப் புரிந்துகொண்டு திரு அண்ணாதுரை அவர்களும் வெகு சமீபத்தில்தான் பேசியிருக்கிறார். அதை ஏனோ மந்திரி அவர்கள் மறந்து விட்டார். ஆனால் இன்னது செய்ய வேண்டும் என்பதை நிர்ணயிப்பதற்கு, எதிரி எது வேண்டாம் என்கிறாரோ அதுதான் சிறந்த சாதனம் என்பதை தி. மு. க. வினர் மறக்கமாட்டார்களென நம்புகிறோம்.

# என்ன சேதி?

## சுதந்திரக் கட்சிக்கு நிதி

கோவை லட்சுமி மில்ஸ் பதினாறாயிரம் ரூபாய் சுதந்திரக் கட்சிக்குத் தேர்தல் நிதியாகக் கொடுத்திருப்பதை, 'தினத்தந்தி' பத்திரிகை ஆறு பத்தி தலைப்புக் கொடுத்துக் கண்ணைப் பறிக்கும் பெரிய எழுத்துக்களில் பிரசுரித்திருக்கிறது. தலைப்புக்குக் கீழுள்ள செய்தியைப் பார்த்தால் காங்கிரசுக்கும் அதே அளவுத் தொகையை லட்சுமி மில்ஸ் கொடுத்திருக்கிறது என்பது தெரிய வருகிறது. சுதந்திரக் கட்சிக்குக் கொடுத்ததைக் கொட்டை எழுத்துக்களில் பிரசுரிப்பானேன், காங்கிரஸ் கட்சிக்குக் கொடுத்ததைச் சிறிய எழுத்துக்களில் பிரசுரிப்பானேன், என்று யோசித்தோம். சுதந்திரக் கட்சிக்குக் கொடுத்த பணம், மனதாரக் கொடுத்ததும், பயமின்றி வழங்கியதுமான பணம்; காங்கிரசுக்குக் கொடுத்த பணம் பயந்து கொடுத்த பணம். லட்சுமி மில்ஸாரின் தைரியத்தைப் பாராட்டவே 'தினத்தந்தி' இப்படிப் பெரிய எழுத்துக்களில் பிரசுரித்திருக்க வேண்டும். லட்சுமி மில்ஸாரின் தைரியம் கோவையிலும், மதுரையிலும், அகமதாபாத்திலும் உள்ள ஆலைமுதலாளிகளுக்கு உண்டானால் நாட்டில் ஜனநாயகத்தை நிலைநாட்டப் பெருந்தொண்டு செய்தவர்களாவார்கள்.

## தி. மு. க.வின் தீர்மானம்

மதுரையில் நடைபெற்ற தி. மு. க. மகாநாட்டில் வடநாட்டு வியாபாரிகளின் கடைகள் முன்னால் ஒரு நாள் அடையாளபூர்வமான மறியல் நடத்தப் போவதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது. இந்தத் தீர்மானம் வேண்டிய அளவு தி.மு.க. வுக்குக் கண்டனங்களைத் தேடித் தந்துள்ளது. ஆனால் மற்றத் தீர்மானங்களையும் பொதுவாகத் தி. மு. க. வின் போக்கையும் பார்த்தால், இந்தத் தீர்மானத்துக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்று தோன்றுகிறது.

தென்னகம் தொழில் துறையில் புறக்கணிக்கப்படுகிறது என்று சொல்லும் போதெல்லாம் அவர்கள் குற்றம் சாட்டுவது தில்லி மத்திய சர்க்காரைத்தான். இது ஒன்றே அவர்கள் தில்லி ஆட்சியை ஒப்புக் கொள்ளுகிறார்கள் என்று ஆகிறது. தொழில்வளம் பெருக, தென்னாட்டு மூலதனம் மட்டும் போதாது; வடநாட்டு மூலதனமும் வேண்டும் என்பது தி. மு. க. தலைவர்கள் அறியாததல்ல. மேலும் தென்னகத்தில் உற்பத்தியாகும் பொருளை விற்பனை செய்யப் பெரிய வடநாட்டு மார்க்கெட் இருப்பது பெரும் லாபம் என்பதைப் பொருளாதாரம் படித்த பல தலைவர்கள் கொண்ட தி. மு. கழகம் உணராமல் போய் விடாது. பிரான்ஸ், ஹாலந்து, மேற்கு ஜெர்மனி, இத்தாலி, லக்ஸம்பர்க் முதலிய நாடுகள் கூடும் சுங்கவரிக் கட்டுப்பாடு இல்லாமல் சுதந்திரமாகப் பரஸ்பர வியாபாரம் நடத்திக்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்ததாலேயே இன்று

தொழில்வளம் கொழித்து மிகப் பெரிய பலம் பொருந்தியதாகத் திகழ்கின்றன என்பதைத் தி. மு. க.வினர் அறியமாட்டார்கள் என்று நினைப்பதற்கில்லை. இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, வடநாட்டு வியாபாரிகள் சென்னையில் தர்ம கைங்கரியம் செய்தபோது, அதனைத் திறந்து வைக்க திரு அண்ணாதுரையைத்தான் அழைத்தார்கள். திரு அண்ணா மகிழ்ச்சியோடு திறந்து வைத்தார். இவையெல்லாம் தி. மு. கழகம் அகில இந்திய உணர்ச்சி அடைந்து வருகிறது என்பதையே எடுத்துக்காட்டுகின்றன. வடநாடின்றித் தென்னாடும், தென்னாடின்றி வடநாடும் பிழைக்க முடியாது. அரசாங்கம் என்னவாயினும் வியாபாரம் இந்தியா முழுமைக்கும் ஒன்றே. பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியாவில் எல்லாப் பாகங்களிலும் வியாபார ஒற்றுமையும் சுதந்திரமும் இருந்ததைச் சரித்திரம் படித்த அனைவரும் அறிவார்கள். இந்த ஒற்றுமையைக் குலைப்பதும் சுதந்திரத்தைத் தடுப்பதும் தவறாகும். ஆகவே தி.மு.க. மகாநாட்டில், பாமர தி. மு. க. அன்பர்களைத் திருப்தி செய்வதற்காக ஒரு தீர்மானம் செய்தால் அதனைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. இந்தத் தீர்மானம் உடனடியாக வரும் தேர்தலில் ஒரு பிரச்னையாகப் போவதுமில்லை.

## ராமநாதபுரம் ஜில்லாவில் ராஜாஜி

1-8-61 - மாலை சென்னையை விட்டு ராமநாதபுரம் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்யப் புறப்படுகிறார்.

2-8-61 — காரைக்குடி, திருவயல், குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, நெற்குப்பை, கண்டரமாணிக்கம், பட்டமங்கலம், எரியூர், திருப்பத்தூர்.

3-8-61—கோவிலூர், கானக்காலூர், கல்லல், பாகனேரி, காளையார் கோயில், கொல்லங்குடி, நாட்டரசன் கோட்டை, சிவகங்கை, மானமதுரை.

4-8-61—திருப்புவனம், திருப்பாச்சேத்தி, முத்தனேந்தல், பார்த்திபனூர், இளையங்குடி, பரமக்குடி, நயினார் கோயில்.

5-8-61 — ஆலங்குளம், உச்சிபுளி, மண்டபம், பாம்பன், ராமேசுவரம்.

6-8-61 — ராமநாதபுரம், திருப்புல்லாணி, கீழக்கரை, தேவிபட்டணம், ராஜசிங்கமங்கலம், தம்புதலை.

7-8-61 — திருவாடானை, சண்முகநாதபுரம், தேவகோட்டை.

8-8-61 — சென்னை திரும்புகிறார்.

## வேங்கடாசலத்தின் மறைவு

ஹரிஜனக் குலத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் சர்க்காரிடமிருந்தாவது வேறு யாரிடமிருந்தாவது ஒரு சலுகையும் பெறாமல் அரசியல் முறையில் எவ்வித நிர்ப்பந்தங்களும் புனைசுருட்டுகளும் கையாளாமல் மிகவும் நல்ல ஸ்திதியில் மூன்று தலைமுறையாக வாழ்ந்து வருகின்றனர். தம் குலத்தினருக்கும் மற்றவர்களுக்கும் வழி காட்டும்வகையில் மிக மேன்மையாக



தேவியின் கடாட்சம் பெற்று வாழ்ந்து வந்த பி. வேங்கடாசலம் குடும்பத்தில் பெருத்த துக்க சம்பவம் ஏற்பட்டு விட்டது. சாலைகளில் வரம்பு கடந்த வேகத்துடன் பாரம் ஏற்றிய மோட்டார் வண்டிகள் ஓட்டப்படுவது மக்களுக்குப் பெரிய ஆபத்து.

திரு. பி. வேங்கடாசலம் அவர்கள் லாரி மோதியதால் துர்மரணம் எய்தினாரென்ற செய்தியைக்கேட்டு வருந்தாதவர் இல்லை. தமது பாட்டன்மார்கள் ஏற்படுத்திய உணவுவகை வியாபாரத் தொழிலை வெகு திறமையாக நடத்திவந்தார். இவர்கள் கம்பெனி உணவுப் பண்டங்கள் கடல் கடந்த நாடுகளிலெல்லாம் புகழ் பெற்று விளங்குகின்றன. வெள்ளைக்காரர்கள் 'பி. வி. ஸாஸ்' விரும்பிக் கேட்டு உண்பார்கள்.

அப்படி வியாபாரத் துறையில் பெருந் திரவியம் ஈட்டிய போதிலும் அடக்கமே உருவமாகவும், தெய்வ பக்தி கொண்டவராகவும் அவர் வாழ்ந்தார். நீறணிந்த நெற்றியராய் எப்பொழுதும் துலங்குவார். அவரைப் போலவே அவரது மனைவியார் ஸ்ரீமதி ஜோதி வேங்கடாசலம் அவர்களும் அன்பும் அறனும் நிறைந்தவர். ராஜாஜியின் இரண்டாவது மந்திரி சபையில் சொற்ப காலம் மந்திரி பதவி வகித்தார். எனினும் அச்சொற்ப காலத்தில் அவரது செயல் திறமை அவருக்குப் பெரும் புகழை ஈட்டியது. கனவிலும் எதிர் பாராத முறையில், கணவரை இழந்த ஸ்ரீமதி ஜோதி அம்மாளுக்கும் அவருடைய புதல்வர்களுக்கும் புதல்விக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.



"உங்கள் இருவருக்குமே ஆண் குழந்தை பிறக்க வேண்டும் என்று தானே ஆசை?" என் கேள்விக்கு ஜயராமனோ, ராஜாராமனோ "இல்லை" என்று பதில் சொல்வார்கள் என்று நான் நினைக்கவில்லை.

"ஆமாம், ராமு! ஆண் குழந்தை எனக்கு வேண்டும்" என்றான் ஜயராமன்.

"இல்லை. எனக்குப் பெண் குழந்தை வேண்டும்" என்றான் ராஜாராமன்.

"இதென்னப்பா? உலக நியதிக்கே விரோதமாக இருக்கிறதே உன்னுடைய ஆசை!" நான் கேட்க வாயெடுத்ததை ஜயராமன் தான் கேட்டான்.

"இதில் நியதி என்ன இருக்கிறது? ஒவ்வொரு மனிதனின் ஆசை ஒவ்வொரு மாதிரி இருக்கும். இதற்கெல்லாம் காரணம் சொல்ல முடியுமா?" என்றான் ராஜாராமன்.

ஜயராமன் அவ்வளவு எளிதில் விவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்பவில்லை. "ஆண் குழந்தை பிறந்தால் நம் கடைசிக் காலத்தில் அவனிடம் போய் அண்டி வாழலாம்" என்றான்.

"என் கடைசிக் காலத்தில் நான் யாரையும் அண்ட விரும்பவில்லை. 'பென்ஷனை' வைத்துக் கொண்டு காலத்தைக் கழித்து விடலாம் என்றிருக்கிறேன். பெண் குழந்தை பிறந்தால் அவள் சுகமாக வாழ்வதைக் கண்குளிரப் பார்க்கலாம். தகப்பனுக்குப் பெண் மேல்தான் அன்பு அதிகமிருக்கும் என்று நீ படித்ததில்லையா?" என்றான் ராஜாராமன்.

ஜயராமன் பதில் சொல்ல வாயெடுத்தான். எனக்கென்னவோ விவாதத்தை வளர விடுவதில் விருப்பமில்லை. "எதுவானாலும் சரி, உங்கள் விருப்பம் நிறைவேறினால் எனக்கு இருவரும் சிற்றுண்டி விருந்து அளிக்க வேண்டும்" என்று கூறினேன்.

உற்சாகத்தோடு அவர்கள் இருவருமே அதற்கு ஒப்புக் கொண்டார்கள்.



நாங்கள் மூவருமாக ஆபீஸை விட்டு வீட்டை நோக்கி நடந்தோம். ஆம்; ஒரே வீட்டை நோக்கித்தான். வீட்டை அடைந்ததும் ஜயராமனும் ராஜாராமனும் அவரவர்களுடைய 'போர்ஷ'னுக்குச் சென்றார்கள்.

நான் என் அறையைத் திறந்துவேலைக்காரப் பையன் ஹோட்டலிலிருந்து 'பிளாஸ்கில்' வாங்கி வந்து கதவுக்கருகே வைத்திருந்த காப்பியை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றேன்.

ஜயராமன் இருந்த பக்கத்திலிருந்து தோசை சுடும் சத்தம் கேட்டது. ராஜாராமன் இருந்த பக்கத்திலிருந்து வெங்காய வடையின் மணம் மூக்கைத் துளைத்தது.

# ஆணா? பெண்ணா?



## ருக்மிணி பார்த்தசாரதி

நாக்கில் ஊறிய ஜலத்தை மறக்க எண்ணி, 'பிளாஸ்கி'லிருந்த காப்பியை ஊற்றி வேகமாகக் குடித்தேன்.

கணவன்மாருக்குச் சிற்றுண்டி அளிக்கும் படலம் முடியவே, ஸ்ரீமதி கமலா ஜயராம

> பர்மிட் — லைசென்ஸ் — கோட்டா ராஜ்யம் வேண்டாம் என்போரும், பணத்தைக்கொண்டு தேர்தலில் வெற்றி பெற்று நிரந்தர ஏகாதிபத்தியம் நடத்தும் காங்கிரஸ் வேண்டாம் என்போரும் ஒன்று சேரவேண்டும். — ராஜாஜி

னும் ஸ்ரீமதி விமலா ராஜாராமனும் கோபினுக்குக் கிளம்பி விட்டார்கள்.

நான் அலுப்புடன் சாய்வு நாற்காலியில் விழுந்தேன். இரு சம்சாரிகள் ஒரே வீட்டில் ஒன்றுக் குடித்தனம் செய்தால் எப்படி இருக்குமோ, தெரியாது. ஆனால் என்னைப் போன்ற தனிக் கட்டை அதே வீட்டில் ஓர் அறையில் வாழ வேண்டி வந்தால் ருசியான உணவைப் பற்றிய கனவுகள் திரள் திரளாக வந்து உயிரைப் பிழிந்தெடுத்து விடுமல்லவா?

நாங்கள் மூவருமே ஒரே குமாஸ்தா வேலை தான் பார்த்து வந்தோம். ஆனால் ஜயராமனோ, ராஜாராமனோ என்னைத் தங்கள் ஆப்த நண்பனாக மதிக்கவில்லை என்பது நான் அறிந்த விஷயமே. அவர்கள் இருவரிடையே எல்லா விஷயங்களிலும் சமத்துவம் இருந்தது. அவர்களுடைய வாழ்க்கைத் துணைவியரோ விண்டால் விரியமாட்டார்கள். சினிமாவுக்குக் கிளம்பினாலும் சரி. துணிக்கடைக்கு விஜயம் செய்து தங்கள் கணவன்மாருக்குத் தீராத தலைவலியை உண்டாக்கினாலும் சரி, எதையுமே ஒன்றாகத்தான் அவர்கள் செய்வார்கள்.

இந்த ஒற்றுமை போதாதென்று இருவரும் ஒரே சமயத்தில் தாய்மை நிலை எய்தினார்கள். அதற்குமேல் கேட்க வேண்டுமா? ஸ்ரீமதி விமலா கடைக்குச் சென்று மாங்காய் வாங்கினால் ஸ்ரீமதி கமலாவுக்கும் இரண்டு கொடுக்காமல் இருக்க மாட்டாள். ஸ்ரீமதி கமலா புளியங்காய்த் துவையலை 'ஸ்பெஷ'லாகச் செய்தால் ஸ்ரீமதி விமலாவுக்கென்று சிறிது எடுத்து வைக்க மறக்கவேமாட்டாள்.

கடைசியில் இருவரும் பேறுக்காகப் பிறந்தகம் சென்றார்கள். இதில் இன்னொரு விசேஷம் என்னவென்றால் இருவருடைய பிறந்தகமும் திருச்சியில்தான் இருந்தது.

ஜயராமனும் ராஜாராமனும் ஹோட்டல் சாப்பாட்டை நம்பவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. எனவே, அவர்கள் என் கூட்டாளிகளானார்கள்.

இப்படியே மாதங்கள் சென்றன. ஒரு நாள் மாலை நாங்கள் மூவரும் ஆபீஸிலிருந்து வீடுவந்தபோது தந்திச் சேவகன் எங்கள் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தான். ஜயராமனிடம் ஒரு தந்தியையும் ராஜாராமனிடம் மற்றொரு தந்தியையும் கொடுத்துச் சென்றான்.

என் நண்பர்கள் இருவருமே அவசரம் அவசரமாகத் தந்தியைப் பிரித்துப் படித்தார்கள். இருவர் முகத்திலும் புன்னகை மலர்ந்தது.

"கமலாவுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறதாம்!" என்றான் ஜயராமன்.

"விமலாவுக்குப் பெண் குழந்தை!" என்றான் ராஜாராமன்.

என் நண்பர்களின் மனத்தைப் போலவே என் மனத்திலும் மகிழ்ச்சி பொங்கியது.

அடுத்த நாளே இருவரும் என்னை விருந்துக்கு அழைத்துச் சென்றார்கள். பாதாம் அல்வா, ரசகுல்லா, வெஜிடபிள் சோமாசி, மசாலா தோசை, ஸ்பெஷல் ஐஸ்கிரீம்,— இவற்றைச் சாப்பிட முடியாமல் திணறினேன்.

இரண்டு நாட்கள் கழிந்தன. அன்று நான் குளியலறையில் நீராடிக் கொண்டிருந்தேன். வாசலில் தபால்காரர் வந்து போன சத்தம் கேட்டது. ராஜாராமனுக்கோ, ஜயராமனுக்கோ கடிதம் வந்திருக்க வேண்டும் என்று ஊகித்தேன்.

நான் குளித்து விட்டு வந்தபோது 'ஹாலி'ல் ஒரு மூலையில் ஜயராமனும் மற்றொரு மூலையில் ராஜாராமனும் உட்கார்ந்திருந்தார்கள். இருவர் முகங்களும் வாடியிருந்தன.

"என்ன விஷயம்?" என்றேன் கவலையோடு.

"கமலா கடிதம் போட்டிருக்கிறாள். எங்களுக்குப் பிறந்திருப்பது பெண் குழந்தையாம்!" என்றான் ஜயராமன்.

ராஜாராமன் "என்ன! விமலா எங்களுக்குப் பிள்ளை பிறந்திருப்பதாக எழுதியிருக்கிறாளே!" என்றான் எரிச்சலுடன்.

ஜயராமனுக்குக் கோபம் பற்றிக்கொண்டு வந்தது. "எதற்காகத் தந்தியை இப்படி மாற்றிக் கொடுத்திருக்கிறார்கள்?" என்று இரைந்தான்.

என் மனத்திலும் அதே கேள்விதான் எழுந்தது... ஒருவேளை ஆம்.... அப்படித்தான் இருக்க வேண்டும். ஒரே சமயத்தில் ஒரே விலாசத்துக்கு இரண்டு தந்திகள் தந்தியாபீஸுக்கு வந்திருக்க வேண்டும். ஒன்று 'கமலாவுக்குப் பெண் குழந்தை பிறந்திருக்கிறது' என்பது. மற்றொன்று 'விமலாவுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது' என்பது. தந்தி ஆபீஸில் வேலை செய்பவனும் மனிதன் தானே? ஏதோ மறதியாகத் தந்தியை மாற்றிக் கமலாவுக்கு ஆண் குழந்தை என்றும், விமலாவுக்குப் பெண் குழந்தை என்றும் கொடுத்திருக்க வேண்டும்.

தந்தி கொடுத்தவன் சரியாகக் கொடுத்திருந்தாலும் உறையிலிட்டவன் ஒருவேளை தவறியிருக்கலாம் அல்லவா? அல்லது இந்த இரண்டு பிரகிருதிகளுமே தந்தி வந்த மகிழ்ச்சியில், ஒருவர் தந்தியை மற்றவர் வாங்கிப் படித்திருக்கலாம் அல்லவா?

இப்படி எண்ணிய பின் என் நண்பர்கள் இருவருக்கும் சமாதானம் கூற வாயெடுத்தேன். இரண்டு நாட்களுக்கு முன் நான் அவர்கள் செலவில் சாப்பிட்ட அல்வாவும் ஐஸ்கிரீமும் திடீரென்று முள்ளாக மாறி என் இதயத்தைத் தைப்பது போன்ற பிரமை ஏற்படவே வார்த்தைகள் எழவில்லை. நான் என் நண்பர்களைப் பரிதாபமாகப் பார்த்தேன். நடந்த தவறுக்கு நான்தான் பொறுப்பாளிபோல் கண்களில் குற்றச்சாட்டோடு அவர்கள் என்னை முறைத்துப் பார்த்தார்கள். விருப்பம் நிறைவேறினால் விருந்து வைக்க வேண்டும் என்று நிபந்தனை வைத்தவனாயிற்றே நான்! ஒருவேளை நானே இப்படியொரு சூழ்ச்சி செய்திருப்பேன் என்று அவர்கள் எண்ணியிருப்பார்களோ, என்னவோ?


படம் என்கிறார் சிலர்!
பாடம் என்கிறார் பலர்!!
பாசத் தேன் குடம் இது
என பல்லோரின் வாழ்த்துடன்
சிவாஜி கணேசன்
அளிக்கும்
ராஜாமணி பிக்சர்ஸ்
பாசமலர்
வெற்றிகரமாக நடைபெறுகிறது!
சித்ரா
கிரவுன்
சயானி
மற்ற நகரங்களிலும்
தயாரிப்பு
M.R. சந்தானம்
K. மோஹன்
(MOHAN ARTS)
டைரக்ஷன்
A. பீம்சிங்
SS
ELEGANT
MOHAN ARTS

# சுவையான....

சுக்லாம்பரதரம் சொல்லிக் குட்டிக் கொண்டு இந்தப் பகுதியை எழுத ஆரம்பிக்கலாம் என்றால் அதற்குக்கூட யோசிக்க வேண்டியதாயிருக்கிறது. 'மின்சார மந்திரி ராமய்யா பேசிய ஒரு கூட்டத்தின் இறுதியில் தேசிய கீதத்துக்குப் பதில் சுக்லாம்பரதரம் சொன்னார் ஒருவர்' என்ற செய்தியைப் படித்ததும் மின்சாரம் தாக்கியது போலத்தான் இருந்திருக்கும் பலருக்கும். அந்த அப்பாவிக்குத் தேசிய கீதம் தெரியாமலே போகட்டும்; சுக்லாம்பரதரத்தை ஆரம்பத்தில்தான் கூறுவார்கள் என்பது கூடவா புரியாமல் போயிற்று? கூட்டத்தின் முடிவில் போய் அந்த மந்திரத்தை ஜபிப்பானேன்?



அது எப்படியானாலும் தேர்தல் பிரசாரத்துக்குச் சுக்லாம்பரதரம் சொல்லிக் குட்டிக் கொண்டாயிற்று என்பதை, அமோகமாகத் தமிழ் நாடெங்கிலும் நடைபெற்ற காமராஜருடைய பிறந்த நாள் கொண்டாட்டங்கள் பறைசாற்றுகின்றன. அவர் பல்லாண்டு பல்லாண்டு வாழ இறைவனை இந்த நன்னாளில் பிரார்த்திக்கிறோம். ஆனால் இந்த விசேஷத்தைப் பற்றி ஒரு சிறு சந்தேகம். ஐம்பதாண்டு, அறுபதாண்டு, எண்பதாண்டு நிறைவு விழாக்கள் பலருக்கும் நடைபெற்றிருக்கின்றன. அடுத்த வருஷம் அறுபது வயது நிறைகையில் ஒரு வருஷம் காத்திருக்க முடியாமல் இந்த ஐம்பத்தொன்பதுக்கு என்ன அவ்வளவு முக்கியத்துவம் என்பது புரியவில்லை. ஐம்பத்தொன்பது தேர்தலுக்கு முன்னும்; அறுபது தேர்தலுக்குப் பின்னும் வருகின்றன என்பதைத் தவிர வேறு காரணம் ஏதேனும் உண்டோ? ஒவ்வொரு பிறந்த நாளுமே விசேஷம்தான் என்றால் ஐம்பத்தெட்டுக்கும் ஐம்பத்தேழுக்கும் இத்தனை கோலாகலத்தைக் கண்டதாக நினைவில்லையே நமக்கு?

பிறந்த நாள் விழாவன்று கூடக் காமராஜர் வெள்ளத்தில் அவதியுற்றவர்களிடையே இருக்கிறார், உழைக்கிறார் என்று பிரசங்கத்தில் புகழ்ந்தவர்கள், கூடவே அவரது அரசியல் விவேகத்தைப் பாராட்டியதில் ஏதேனும் உட்கருத்து உண்டோ என்னவோ, நமக்குத் தெரியாது! ஆனால் பாருங்கள், தமிழ் நாட்டைவிட வெள்ளத்தால் அதிக சேதம் அடைந்துள்ளது மகாராஷ்டிரம். அதன் முதல் மந்திரி திரு சாவன் பூனாவிலேயே முகாம் போடாமல் சென்னைக்கு வந்து காமராஜரின் பிறந்த நாள் விழாவில் கலந்துகொண்டார். திரு சாவனுக்கு வெள்ளத்தில் பரிதவிக்கும் தமது பிரதேச மக்களைப் பற்றி அக்கறையில்லையா? அல்லது வருகிற தேர்தலைக் குறித்துக் கவலையில்லையா?




ஆகக் கூடி வெள்ளம் ஆளும் கட்சியினருக்கு ஒரு வரப்பிரசாதம் என்ற கருத்து நிலவுவது உண்மை. மந்திரிமார்களுடைய அனுதாப வார்த்தைகளும், வீடிழந்து வருந்துபவர்களுக்கு வரிப் பணத்திலிருந்து அளிக்கப்பட்ட தொகைகளும் நன்றியுணர்ச்சியைப் பெருக்கியிருக்கும் மக்களிடையே. 'வெள்ளம் வாழ்க' என்று கூட இனிமேல் ஆளும் கட்சியினர் முழக்கலாம்!

ஆளும் கட்சியினர் என்றதும் ஈ. வெ. ரா. ஞாபகம் வருகிறது. ஏன் வரக் கூடாது? 'இன்று தமிழ் நாட்டை ஆள்வது திராவிடக் கழகத்தினரே' என்றிருக்கிறாரே பெரியார்! அது மட்டுமா? 'என் நிதிக்கு ஐந்து பத்து என்று தருகிறீர்களே' என்று கண்ணீர் விடாத குறையாக அழுதவர், 'கண்ணீர்த் துளிகளுக்கு ஆயிரம் இரண்டாயிரம் என்று அவர்கள் கட்சிக்காரர்கள் தருகிறார்களே' என்றும் சிரமப்படுகிறார். ஏன், திராவிடக் கழகம்தான் தமிழ் நாட்டை ஆளுகிறதென்றால் ஆளும் கட்சியினர் ஏராளமாகச் சேர்த்திருக்கும் தேர்தல் நிதியையும் தம்முடையதாகப் பாவித்துக் கொள்ளட்டுமே!



* * * இன்னும் சில நாட்களில் இந்தியாவிலேயே தயாரிக்கப்பட்ட மூன்றுவிதக் கடிகாரங்கள் கடைகளில் விற்பனையாகுமாம். குறித்த நேரத்தில் இந்தியர்கள் எதையுமே செய்வதில்லை என்பது உலகப் பிரசித்தி. 'இண்டியன் பங்சுவாலிடி' என்ற சொற்றொடரே உருவாகியிருக்கிறது. இந்தத் தனிக் கௌரவத்துக்குப் பங்கம் உண்டாகாத முறையில் இப்போது உற்பத்தியாகும் கடிகாரங்கள் மெல்லவே ஓடும் என்று எதிர்பார்ப்போமாக! அதுவும் சர்க்கார் துறையிலேயே இவை செய்யப்படுவதால் நிச்சயம் நிதானமாகவே ஓடும்!

* * * சீன டாக்டர் ஒருவர், கட்டை விரலை இழந்தவருக்கு ஆள் காட்டி விரல் ஒன்றை ஒட்ட வைத்தாராம். இந்தச் சிகிச்சை முறையில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. கண் பார்வை இழந்தவர்களுக்கு வேறு கண், ரத்தக் குழாய் பழுதானவர்களுக்கு வேறு ரத்தக்குழாய் சோகை பிடித்தவர்களுக்குப் புது ரத்தம். இப்போது விரல் இழந்தவர்களுக்கு விரல்! ரத்த தானம், கண்தானம் போல இனி 'விரல் தானம்' என்றும் அடிக்கடி கேள்விப்படலாம். ஆனால் நான், ஒரு நண்பன் சார்பில் எதிர்நோக்கியிருப்பது மூளை தானம் பற்றிய செய்தியை! — குட்டிகிருஷ்ணன்

# ....செய்திகள்



"நான் குடை எடுத்துக் கொண்டு வந்தால் மழை வராது, சார்!"

"அப்ப ஒன்னு பண்ணுங்கோ. குடையைக் கையில் எடுத்துக்கொண்டு 'மெர்க்காரா'வுக்குப் போங்கோ. தமிழ் நாட்டில் மழை பெய்து அடைத்தவுடன் திரும்பி வரலாம்!"

★

சலூன்காரர்: முகத்தில் ஏதேனும் விட்டு விட்டேனா? நன்றாகத் தடவிப் பார்த்துச் சொல்லுங்கள். எடுத்து விடுகிறேன்!

க்ஷவரம் செய்து கொண்டவர்: (நன்றாக முகத்தை ஒருதடவை தடவிப் பார்த்து விட்டு) ஒன்றும் விட்டு வைக்கவில்லை. மூக்குத்தான் இருக்கிறது...அது அங்கேயே இருக்கட்டும்!

★

உபாத்தியாயர்: எட்டுப் பேர்கள் ஒரு காரியத்தை இரண்டு நாட்களில் செய்து முடித்து விடுகிறார்கள். அப்படி என்றால் இரண்டு பேர்கள் அந்தக் காரியத்தை எவ்வளவு நாட்களில் செய்து முடிப்பார்கள்?



மாணவன்: அதுதான் எட்டுப் பேர்கள் காரியத்தை முடித்து விட்டார்களே: பிறகு அங்கு செய்வதற்கு காரியம் ஏது, ஸார்.

★

"அந்தப் பயல் படுகெட்டிக் காரன். படித்துக் கொண்டிருக்கும் போதே எழுதி எழுதிச் சம்பாதித்துக் கொண்டிருந்தான்."

"பத்திரிகைகளுக்கா?"

"இல்லே ஐயா பணம் அனுப்பச் சொல்லித் தன் தகப்பனுக்கு அடிக்கடி கடிதம் எழுதுவான்!"



"பாட்டி பல்லைச் செட்டாகக் கட்டிண்டிருக்கா, பார்த்தாயா?"

"எப்பவுமே பாட்டி செட்டு; பல்லையும் செட்டாக் கட்டிண்டிருக்கா!"

★

பத்திரிகையில் விளம்பரம்:

பிரபலமாக இருந்த சங்கீத வித்வான் தருந்த தம் பக்க வாத்தியங்களுடன் தவிக்கிறார். உதவி செய்ய முன் வருவோர் வரவேற்கப்படுகிறார்கள்.

போஸ்ட்பாக்ஸ் 20, தினசனி

★

பல் டாக்டர்: சார்!, உங்களுக்கு மயக்க மருந்து கொடுத்து உங்கள் பல்லைப் பிடுங்கப் போகிறேன்!



வந்த ஆசாமி: அதே மாதிரி மயக்க மருந்து கொடுத்தே என்னிடமிருந்து பீஸையும் வாங்கிக் கொள்ளுங்கள்!

★

மனைவி: யாரோ ஒருவன் ஏராளமான நகைகளைத் திருடிக் கொண்டு பத்தடிச் சுவரை ஒரு கம்பை வைத்துத் தாண்டி, ஒரு வாய்க்காலையும் ஒரே தாண்டாகத் தாண்டி ஒரே ஓட்டமா ஓடியிருக்கானுமே? அது பேப்பர்லே வந்திருக்கா?

கணவன்: இரு. நான் இன்னும் ஸ்போர்ட்ஸ்' பக்கத்தைப் பார்க்கவில்லை. பார்த்துச் சொல்லுகிறேன்!

# சிரிக்காதே!



**நேர்த்தியாக**
**உடையணிய இன்றியமையாதவை**

**நில்லுங்கள்!** நீங்கள் செலவுசெய்யும் பணத்திற்கு மதிப்பு வாய்ந்த நல்ல கோட்டிங்குகள் மற்றும் ஸூட்டிங்குகள் வாங்க வேண்டுமென்று விரும்பினால், மபத்லால் துணிகளைப் பார்த்தவுடன் நில்லுங்கள்!

**பாருங்கள்!** ஆம், அழகிய தன்மை, நேர்த்தியான நெசவுத் தன்மை, கவர்ச்சியான கலர்கள் முதலானவைகளைக் கொண்ட மபத்லால் துணிகளைப் பாருங்கள்!

**கவனியுங்கள்!** உங்களது கோட்டுகள் மற்றும் ஸூட்டுகள் நாள்பட நன்றாக உழைக்கவேண்டுமென்று நீங்கள் விரும்பினால் (யார்தான் விரும்பமாட்டார்கள்?) இந்த ஆலோசனையைக் கேளுங்கள். மபத்லால் ஸூட்டிங் நாள்பட உழைக்கக்கூடியது, உறுதியானது. சலவை செய்து அழகாக இஸ்திரி செய்யலாம்!

புளு மவுண்டன் • சான்ஸலர் • ரஷ்ஷியன் ப்யூடி ஸ்டார் க்ளோரி • அட்மிரல் • கோல்டன் ஸ்டார் அக்பர் • விக்டர் • சம்மர் ஸ்டார் • 5153 • திவ்ய மஹால் • ஸைலான் ஸ்டார் • மதர் இந்தியா

# மபத்லால்
## க்ரூப் ஸூட்டிங்குகள்




தலை வலியா?
உடனே சிறிதளவு
அமிர்தாஞ்சனம்
தடவுங்கள்
அது விரைவில் குணமளிக்கும்
ஜலதோஷம், ஜுரம், வாயுப் பிடிப்பு போன்ற உபாதைகளிலிருந்து உங்கள் குடும்பத்தை காப்பாற்றுங்கள். ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்க வேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடுநாள் வரை நீடிக்கிறது.
அமிர்தாஞ்சனம் லிமிடெட், மதராஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புதுடெல்லி-1
AMRUTANJAN
Pain Balm
JWT-AM-1429a



# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் பதினேழு

சீர்ர்ர் கீவ்—விர்ர்ர் கீவ்......

வலியன் குருவி கத்தியது. ஒவ்வொரு கத்தலும் கரகரத்துத் தொடங்கி, இனிய குழைவாக நீண்டது. திருப்பித் திருப்பி இந்தக் குழைவு ஒலித்தது. மடாச் சேவல் ஒன்று நாலைந்து வீடுகள் தள்ளிக் கத்தியது.

தூக்கம் வரவில்லை. தூங்கவும் மன மில்லை. ஆனால் மறுநாள் பகல் பொழுதில் உடல் தூங்கி வழியப் போகிறதே என்ற பயத்தில் சிறிதாவது தூங்கலாம் என்று கண்ணை மூடிக் கொண்டான் ருக்மிணி. கொஞ்சம் கொஞ்சமாக நினைவுகளை மடக்கி மடக்கி உறக்கம் ஓங்கிக் கொண்டே வந்தது. சுப்புசாமி எழுந்து பாய்லரில் கன்னிகளைப் போட்டு எரித்து வெந்நீர் போடத் தொடங்கிய பொழுது அவன் நன்றாக உறங்கி விட்டான். அடுத்த அறையில் சந்திராவும் ஹாலில் நாகம்மாளும் உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்தார்கள்.

கிழக்கில் வெளுப்பு காண்பதற்குள் சுப்புசாமி வெந்நீர் போட்டுக் குளித்தும் விட்டார். இன்னும் நாகம்மாள் எழுந்திருக்காததைக் கண்டு, தாமே கும்மட்டியை மூட்டிக் காப்பியைப் போட்டார். வெந்நீர் கொதித்து பில்டரில் விடுவதற்கும் மாடு கறக்கிறவன் வருவதற்கும் சரியாயிருந்தது. அவசரம் அவசரமாக ஓர் ஆழாக்குப் பாலைக் கறந்து தரச்சொல்லி, காய்ச்சிக் கலந்து குடித்து விட்டு,சட்டையை மாட்டிக்கொண்டார்.

"நாகம்மா! நாகம்மா!" என்று கத்தினார் சுப்புசாமி.

"ம்" என்று நாகம்மாள் வெளிச் சத்தைக் கண்டு மிரண்டு எழுந்தாள்.

"நான் காப்பி சாப்பிட்டாச்சு. டிகாக்ஷன் போட்டு வச்சிருக்கேன், வெளியே போய்விட்டு வருகிறேன்."

அவள் பதிலுக்குக்கூடக் காத்திராமல் அவர் வெளியே நடந்தார்.

"வெளியிலே புறப்பட்டாச்சா, அண்ணா!"

"ஆமாம்."

"ராத்திரியே சொல்லியிருந்தால் சற்று முன்னால் எழுந்து தோசை, இட்டிலி ஏதாவது வார்த்திருப்பேனே."

"வார்த்து வையேன். கல்லூரி யெல்லாம் திறக்கிறதுக்கு ஆச்சே. ருக்மிணிக்கு எங்காவது இடமிருக்குமான்னு பார்த்து வரலாம்னு கிளம்பினேன்" என்று சொல்லிக் கொண்டே தாமே காரை எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டார்.

தெருவில் காரை ஓட்டிச் செல்லும் போது, ருக்மிணி, அவனுடைய காலஞ் சென்ற சிறிய தகப்பனார், தாயார், அந்தப் பேராசிரியர் பதவி, அனந்தசாமி என்று என்னென்னமோ அவர் நினைவில் வந்து கொண்டிருந்தன.

அனந்தசாமியும் அப்பொழுது நடந்து கொண்டுதானிருந்தார். ராயப்பேட்டை சந்துகளில் நாலைந்தைக் கடந்து லாய்ட்ஸ் ரோட்டில் ஏறி நடந்து கொண்டிருந்தார் அவர். பஸ்ஸுக்காகக் காத்துக்கொண்டு ஓர் இடத்தில் நிற்பது அவருக்கு முடியாத காரியம். ஆகவே முதல் பதின் மூன்றும் நம்பர், பஸ் அவரைக் கடந்து சென்றபொழுது அது நிற்கிற இடம் கூப்பிடு தொலைவில் இருந்தது. பேசாமல் நடந்தார் அவர். அப்படியே நடந்து நடந்தே பழைய மாம்பலம் பாகவதர் வீட்டுப் படியும் ஏறிவிட்டார்.

உள்ளே பாட்டு பாடுகிறது கேட்டது. பாகவதர் யாரோ பெண்ணுக்குச் சிட்சை



தி. ஜானகிராமன்



சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த சமயம். நடுவில் கரடிவிட மனமில்லாமல் வாசலிலேயே உட்கார்ந்து விட்டார் அனந்தசாமி.

காம்பவுண்டில் இருந்த செடிகளின் மீது வெய்யில் விழுந்திருந்தது. நடந்து வரும்போது தியாகராயநகர் சாலையில் குளுகுளு வென்று வீசிய காலைக் காற்று இப்பொழுது ஒரு தேக்கம் கண்டு விட்டது. இறுக்கம் இல்லாவிட்டாலும், நடந்து வந்தவருக்கு உடல் சூடேறித் திணறியது. துடைத்துக் கொண்டார்.

கவிரோரமாக, செம்பருத்திச் செடியில் ரத்தச் சிவப்பாக மலர்கள் நாக்கைத் தொங்கவிட்டு மலர்ந்திருந்தன. ஒன்று, இரண்டு, மூன்று....முப்பது பூக்களுக்கு மேல் எண்ணினார் அவர். அடுத்து பன்னீர் மரம் இலேசாக மணம் வீசிற்று. நடையின் இருமருங்கிலும் நீலமும்,இளம் சிவப்பும்,வெள்ளைப் பொட்டுக்களுமாகப் பூத்திருந்த காசித் தும்பைச் செடிகள், விபூதிப் பச்சை. இந்த மணங்கள், செம்பருத்தியின் சிவப்பு, பாட்டு—மூன்றிலும் தோய்ந்து விட்ட அனந்தசாமிக்கு ஒரு நிமிஷம் எதற்காக வந்திருக்கிறோம் என்ற ஞாபகமே அற்று விட்டது.

பாட்டு நின்றதுகூட அவர் காதில் விழவில்லை. செம்பருத்தி நிறத்தைப் பார்த்துத் திளைத்துக் கொண்டிருந்தார் அவர். எழுந்து செடியின் அருகே நின்றுபார்த்தார். 'ஐயோ, ஐயோ' என்று நெஞ்சு தோய்ந்தது. 'எப்படியடா செய்தாய்?' என்று அவருக்குள்ளேயே ஒரு குரல் கேட்டது. வானின் நெடும் பரப்பில் முகில்களுக்குச் செந்நிறம் ஏற்றிய அவனே இப்படிப் பூப்பூவாகப் பூத்திருப்பது போலிருந்தது அவருக்கு. இவ்வளவு அழகாக இருக்கிறானே என்று இதயம் பூரித்தது. ஒரு பூவைத் தொட்டுத் தடவிக் கொடுத்தார். உடல் ஒரு தடவை சிலிர்த்தது.

"என்ன ஸ்வாமி இது! உள்ளே வரப்படாதா? வாசலிலேயே நின்று கொண்டு......என்ன இது? எப்பொழுது வந்தீர்கள்?"

"இப்பொழுதுதான் வந்தேன்."

"பாட்டு நடந்தால் என்ன, நீங்கள் பாட்டுக்கு உள்ளே வரப்படாதா?"

"பரவாயில்லை" என்று கூறிக் கொண்டே அருகில் வந்தார் அனந்தசாமி. "ஆமாம், இந்தச்செம்பரத்தையை வைத்துப் பயிராக்க வேண்டும் என்று எப்படித் தோன்றிற்று உங்களுக்கு?" —வியப்புடன் கேட்டார். அனந்தசாமி.

"ஏன்?" என்றார் பாகவதர்.

"அதைப் பாருங்களேன்...அது என்ன இப்படி யிருக்கிறது!" என்று அதையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டு நின்றார் அனந்தசாமி.

பாகவதரும் சிறிது நேரம் பேசாமல் பார்த்துக் கொண்டு நின்றார். "ஆகா!" என்று சொல்வதுபோல் தலையசைத்தார்.



உடனே வாசலுக்குப்போய்ப் புகையிலையைத் துப்பிவிட்டு வந்தார். அதற்குள் வாசலுக்கே காப்பி வந்துவிட்டது.

"சாப்பிடுங்கள் ..... பார்த்தியா?"

ஏதோ சொல்வது போல் "என்னம்மா!" என்று பாகவதரின் மனைவியைப் பார்த்தார் அனந்தசாமி.

"காப்பி சாப்பிடுங்கள்" என்றாள் அந்த அம்மாள்.

"அது இருக்கட்டும். ஏம்மா, நான் ஒன்று சொல்கிறேன். ஒன்றும் நினைத்துக் கொள்ள மாட்டீர்களே."

"என்ன?"

"நல்ல அழகான பூ. ரொம்ப வாசனையான பூ...இதையெல்லாம் மனுஷர்கள் தலையில் வைத்துக் கொள்ளலாமோ?... அதெல்லாம் சுவாமிக்குத்தானே சொந்தம். இல்லையா? எனக்கு என்னமோ யாராவது இந்தமாதிரி அழகான பூக்களைத் தலையிலே வைத்துக் கொண்டால், எனக்கு வருத்தமா யிருக்கிறது. அவர்கள் சுவாமியை மறந்து விட்டாற்போல் தோன்றுகிறது. யாருக்கோ சேரவேண்டியதை யெல்லாம் வழிமறித்துப் பிடுங்கி, தன் தலையில் வைத்துக் கொண்டாற் போலிருக்கிறது."

"அப்படியானால் இந்த லோகத்தில் ஒன்றையும் நாம் ஆண்டு அனுபவிக்க முடியாது."

"அப்படியா?" என்று சற்றுத் தயங்கினார் அனந்தசாமி.

"இந்த உலகத்திலே எல்லாமே அழகான வஸ்து என்று சொல்கிறீர்கள்!.... ஆமாம். அதுவும் வாஸ்தவம் தான்."

"அதுக்குத்தான், எல்லாம் உலக்குத் தான் என்று சொல்லிவிட்டு நாம் ஆள வேண்டியிருக்கிறது. நாம் ஆண்டு அனுபவித்தால்தானே அதுகளோட பெருமையும் தெரியும் நமக்கு."

"ஸ்வாமி! பொம்மனாட்டிகளிடம் போய்ப் பேச்சைக் கொடுத்து ஜயிக்க முடியும் என்று நினைக்கிறீர்களா!"

"ஜயிக்கிறது, தோற்கிறது என்றில்லை. அம்மா சொல்வதும் சரியாகத்தானிருக்கிறது" என்றார் அனந்தசாமி.

"அம்மா, தனக்கு, எனக்கு, குடும்பம் நடத்துகிற கோடானுகோடி ஜனங்கள்-எல்லாருக்குமாகச் சேர்த்து நியாயம் பேசுகிறாள். நீங்கள் பேசுகிறது உங்களுக்குச் சரி, ஆண்டிக்கு...அதிருக்கட்டும், எங்கே ஒருநாளும் இல்லாத திருநாளாக இப்படிக் காலையில் புறப்பட்டு வந்தீர்கள்?" என்று கேட்டார் பாகவதர்.

"நேற்று ராத்திரி வந்தீர்களாமே, இன்னும் யாரையோ அழைத்துக் கொண்டு?...சீடப்பிள்ளையை அழைத்துக் கொண்டு வந்தீர்களாம்."

"அப்படிச் சொன்னேன், அந்த அம்மாவிடம். சீடப்பிள்ளையின் சம்சாரம் திடீரென்று வந்து உங்களைப் பார்க்க வேண்டும் என்றாள். அழைத்து வந்தேன்."

"என்ன சமாசாரம்?"

"இப்போது இதைக் கேட்கவா நடந்து வந்தீர்கள், ராயப் பேட்டையிலிருந்து?"

"என்ன அவசரமோ என்று வந்தேன்."

"நல்ல சன்யாசி ஐயா நீங்கள்!..... நாங்கள் வந்தால்தான் என்ன? இப்படியா 'வெகு வெகு' என்று நீங்கள் நடந்து வர வேண்டும்?"

"குழந்தைக்கு ஏதாவது உடம்பு சரியில்லையோ என்னமோ என்று நினைத்தேன். பிறகு காலையில் பார்த்துக்



கொள்ளலாம் என்று சொன்னதாகச் சொன்னாள் அந்தப் பாட்டி."

"குழந்தைக்கு ஒன்றுமில்லை. உள்ளே வாருங்கள்."

வந்திருந்த சிடப் பெண்ணுக்கு விடை கொடுத்து விட்டுச் சுப்பராம பாகவதர் சொல்ல ஆரம்பித்தார்:

"ஸ்வாமி, எனக்குக் கலியாணமாகி என் சம்சாரம் வீட்டுக்கு வந்து நாற்பது வருஷங்கள் ஆகின்றன. எனக்கு ரொம்பக் குறைதான்."

"என்ன?"

"ஒரு நாலுநாள் எங்கேயாவது பிறந்த வீடு என்று போய் இருந்துவிட்டு வரக் கூடாதோ? கிடையாது. சுவாமி! இத்தனைக்கும் கலியாணமாகிப் பத்து வருஷங்களுக்குப் பிறகுதான் என் மாமனார் மாமியார் காலமானார்கள். அப்பொழுதும் நானும் சேர்ந்து போனேன்."

பாகவதர் வழக்கம்போல் சுற்றி வளைக்க ஆரம்பித்து விட்டார். நேற்று காசிலிங்கத்தின் மனைவியோடு இவர் தம் வீடு தேடி வந்ததற்கும் இவர் சுய சரித்திரத்துக்கும் என்ன சம்பந்தம் என்று அலமலங்கினார் அனந்தசாமி. கடைசியில் 'நமக்குத்தான் என்ன அவசரம்? பொறுத்துக் கேட்டு விடுவோம்' என்று அமர்ந்து விட்டார்.

"எதற்குச் சொல்கிறேன் என்று சொன்னால் கவிகள் சொல்கிறாற்போல் பிரிவு என்பது கணவன் மனைவிகளுக்குள் இருக்க வேண்டியதுதான். இயந்திரத்தில் எத்தனையோ பகுதிகள் இருக்கின்றன. சேர்ந்து ஒட்டிக் கொண்டிருக்கின்றன. ஒரு வருஷத்துக்கு ஒரு தடவையாவது எல்லாவற்றையும் பிரித்துப் போட்டுத் துடைத்து மறுபடியும் சேர்க்க வேண்டும். இயந்திரமே இப்படி யிருக்கிறபோது. மனிதர்களுக்கு இது அவசியம். ஆனால் தினந்தோறும் கழற்றிப் போட்டுக் கொண்டே யிருந்தால் அது ஓடுமோ? அப்படி யிருக்கிறது நம்ம சிஷ்யப் பிள்ளையின் நிலைமை...நேற்று உங்களிடம் சொன்னாளாமே, அவரை இன்று வீட்டிலேயே இருக்கச் சொல்லுங்கள் என்று."

"ஆமாம்....நான்கூட இது ஏதடா,' கணவன் மனைவி தகராறில் வந்து மாட்டிக் கொண்டு விட்டோமே என்று விழித்தேன்."

"நேற்று அவள் நல்ல நிலைமையில் இல்லை. அதை நீங்களும் புரிந்துகொள்ளவில்லை. அவனும் புரிந்து கொள்ளவில்லை. நீங்கள் ஒன்றும் சொல்லாமல் போய் விட்டீர்களாம். அவன் சாயங்காலம் ஐந்து மணிக்கு வெளியே கிளம்பிப் போய் விட்டானும். குழந்தை 'அப்பா அப்பா' என்று அரற்றி யிருக்கிறது. பிரமை பிடித்தாற் போல உட்கார்ந்திருக்கிறாள். ஏழு மணியானதும் குழந்தையையும் வண்டியில் போட்டுக் கொண்டு அவனுக்குத் தெரிந்த நாலைந்து வீடுகளில் போய் விசாரித்திருக்கிறாள். எங்கேயும் இல்லை. கடைசியில் நேற்று மத்தியானம் ஒரு பையன் வந்து பேசிக் கொண்டிருந்தானே — அவன் பெயர் ரங்கனும். அவன் வீட்டில் போய் விசாரித்திருக்கிறாள். அவன் வீட்டில் இருந்தானும். அவனுக்குச் சற்றுத் திகைப்பாக இருந்திருக்கிறது. அவனோடு தானே அவன் அதிகமாகச் சுற்றுகிறான்? அவனும் வீட்டில் இருக்கவே ஒன்றும் புரியவில்லை அவனுக்கு. கடைசியில் டிரைவரை விசாரிக்கச் சொல்லி,மயிலாப்பூரில் யார் வீட்டுக்கோ போய்த் தேடியிருக்கிறாள். பாடுவாளாம், அங்கே ஒரு பெண். 'ஷூட்டிங்' என்று சொல்லி அழைத்துக்கொண்டு போனானும். படம் பிடிக்கிற இடங்களில் எல்லாம் போய்ப் பார்த்திருக்கிறாள். ஆளைக் காணவில்லை. கடைசியில் இங்கே வந்தாள். எல்லாவற்றையும் சொன்னாள். 'சரி, அங்கேயே போய் மறுபடியும் விசாரிப்போமே' என்றேன். மயிலாப்பூருக்கு மறுபடியும் போனோம். அங்கே போனால், இந்த ரங்கன் யாரோ கிழவரோடு உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்திருக்கிறான். அவர்தான் அந்தப் பெண்ணின் தகப்பனாராம். ரங்கனை அங்கே பார்த்ததும் அவளுக்கு ஆத்திரம் வந்து விட்டது. 'பணமும் பெருமா இருந்தா இப்படிப் பாழா அடிக்கப் பதினாயிரம் பேர்கள் சேர்ந்துகிறீங்களே, குடியைக் கெடுக்கிற மக்களா வந்து இப்படி வந்தா, சாமி இப்படியே உங்களை விட்டு வைப்பார்னு நெனைச்சீங்களா?' என்று ஏகதேசமாக இரையத் தொடங்கிவிட்டாள். 'என்மேல் எதற்காக எரிந்து விழுகிறீர்கள்?' என்று கேட்டான் அந்த ரங்கன். அவளுக்கும் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அவளைச் சமாதானப்படுத்தி அழைத்து வந்தேன். 'சாமியார் வீட்டுக்கு விடுங்க, எனக்கு அவரைப் பார்க்கணும் போலிருக்கு' என்றாள். அப்புறம்தான் உங்களைப் பார்க்க வந்தோம். நீங்கள் இல்லை" என்று முடித்தார் பாகவதர்.

"நானும் அவன் புருஷனைப் பார்க்கத்தான் போயிருந்தேன்" என்று சிரித்தார் அனந்தசாமி.

"காசியையா! நீங்களா? எங்கே?"

சினிமாவுக்குப் போன விவரத்தைச் சொன்னார் அனந்தசாமி.

"உங்களிடம் எதையாவது சொல்லி அழவேண்டும் என்றுதான் வந்தாள்.

அவரைப் பார்த்தால் நிம்மதியாயிருக்கும் என்று என்னிடம் சொல்லிக் கொண்டேயிருந்தாள். நீங்கள் இல்லையா! சரி என்று அவளை வீட்டில் கொண்டு விட்டு, வெகு நேரம் வரை பேசி ஆறுதல் சொல்லிவிட்டு, அவன் ஒரு நிறுசாகத் தணிந்த பிறகுதான் வீடு வந்தேன் ஸ்வாமி. வருகிற பொழுது ராத்திரி மூன்று மணி இருக்கும்."

அனந்தசாமியின் ஆவல் கொள்ளி போட்ட கணைப்பு மாதிரி கொழுந்து விட்டு எரிந்தது.

"இந்த ரங்கனுக்குத் தெரிந்தவர்களா அந்தப் பெண், அவளுடைய தகப்பனார் எல்லாரும்?" என்று தம் ஆவலை அடக்க முடியாமல் கேட்டார் அவர்.

"அது என்னமோ யார் நின்று விசாரித்தார்கள்? இவன்தான் அவளைப் பார்த்ததுமே பொரிய ஆரம்பித்துவிட்டானே. அவளைச் சமாதானப்படுத்தி அழைத்துப் போகத்தானே எனக்குப் பொழுதிருந்தது" என்றார் பாகவதர்.

"அது சரி, இப்பொழுது யார் யாரைக் கெடுக்கிறார்கள்? ரங்கன் காசியைக் கெடுக்கிறானா? அல்லது காசி ரங்கனைக் கெடுக்கிறானா?" என்று கேட்டார் அனந்தசாமி.

"பகவான்தான் எல்லாரையும் கெடுக்கிறான். எனக்கு என்ன சாமி தெரியும்? யார் யாரைக் கெடுக்க முடியும்? அது கெடுகிறவனையல்லவா பொறுத்திருக்கிறது? கெடுகிற போக்குள்ளவனை யார்தான் கெடுக்க முடியாது? கெட்டியாக இருப்பவனை யார் கெடுக்க முடியும்?"

பாகவதர் இப்படியேதான் பேசிக் கொண்டிருப்பார். அவரிடம் எதையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியாது என்று உணர்ந்து மேலே பேசாமல் இருந்து விட்டார் அனந்தசாமி.

"அது கிடக்கட்டும். அது பொறுத்து ஆலோசிக்க வேண்டிய விஷயம். அதற்கு முன்னால் செய்ய வேண்டியது சௌபாக்கியத்தைப் பார்க்க வேண்டிய காரியம். உங்களைப் பார்த்தால்தான் அவன் மனசு ஆசுவாசப்படும் என்கிறான்" என்றார் பாகவதர்.

"பார்ப்போமே!"

ஐந்து நிமிஷங்கள் கழித்து இருவரும் புது மாம்பலத்துக்கு வந்து பஸ்ஸில் ஏறிக் கொண்டார்கள். இருபது நிமிஷப் பிரயாணத்துக்குப் பிறகு இறங்கினார்கள். கடற்கரைச் சாலையில் நடந்து காசிலிங்கத்தின் வீட்டை அடைந்தார்கள். மாடிக்குப் போனார்கள். மாடிக்கு அவர்களை அழைத்துப் போன காரியஸ்தர் ஹாலில் அவர்களை இருத்தி



> மக்கள் புதுப்புதுத் தொழில்களில் ஈடுபட ஊக்கமும் உற்சாகமும் அளிக்கும் நாடுதான் நாடாகும். காங்கிரஸ் அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் அந்த ஊற்றுக் கண்களையே அடைத்து விடுகின்றன. — ராஜாஜி

விட்டு உள்ளே சொல்லி விட்டு வந்தார். "உள்ளே போங்கள்" என்று சொல்லி விட்டுக் கீழே போய் விட்டார்.

கட்டிலில் உட்கார்ந்திருந்த பையனுக்கு இட்டிலியை விண்டு வாயில் ஊட்டிக் கொண்டிருந்தாள் சிவபாக்கியம்.

"வாங்க."

"ராத்திரி பாகவதரோடு வந்திருந்தீர்களாமே....நான் உங்கள் வீட்டுக்காரரைத்தான் பார்க்கப் போயிருந்தேன்" என்றார் அனந்தசாமி.

சிவபாக்கியம் திகைத்துப் போய்த் திரும்பினாள். "எங்கே?"

அனந்தசாமி சிரித்துக் கொண்டே தாம் சினிமா பார்த்துவிட்டு வந்த கதையையும், அதற்குப் பாகவதர் தான் காரணம் என்பதையும் கூறி, "ரொம்பப் பிரமாதமாகத்தான் நடிக்கிறார் உங்கள் வீட்டுக்காரர்" என்று நாலைந்து இடங்களை மேற்கோள் காட்டி முடித்தார். "நான் பழைய காலத்தில் நாடகம் பார்த்திருக்கிறேன், சின்னப் பையனாக இருந்தபோது — கலியாண ராமையர் நடிப்பைப் பார்த்ததில்லை. அப்புறம் வந்தவர்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் அதெல்லாம் இவருக்கு உறைபோடக் காணாது" என்றார்.

"பிரமாதமாக வாழ்கிறார் என்று யாருமே சொல்ல மாட்டேங்கறாங்களே" என்றாள் சிவபாக்கியம். சொல்லும் பொழுது அவளுக்கு நெஞ்சைக் கட்டிக் கொண்டு தடுமாறிற்று. அவள் வெறுமனே இதைச் சொல்லவில்லை. கணவனுக்குத் தந்த அவ்வளவு புகழ்ச்சியையும் தனக்குத் தந்தது போலப் பூரித்துக் கொண்டேயிருந்தாள். அதுவும் ஒரு 'சன்னாஸி' யிடமிருந்து அந்தப் புகழ்ச்சி வந்ததை இன்னும் பெருமையாக நினைப்பதுபோல் நெஞ்சு நிரம்பக் கேட்டு விம்மினாள். அந்தப் பூரிப்புக்குக் கடைசியில் இப்படி ஒரு முத்தாய்ப்பாக வந்தது இந்தக் கர்ப்பலை. தளதளவென்று, முருமுருவென்று பூக்கிற பூக்கள் கடைசியில் பிஞ்சு கட்டுகிற சமயத்தில் கருகி உதிர்வது போலிருந்தது அது.

"கவலைப்படாதேம்மா. அவர் இப்போது பிரமாதமாகத்தானே வாழ்கிறார். நேற்று பாகவதர் விஸ்தாரமாக எல்லாவற்றையும் சொன்னார். ஒரு குறைச்சலுமில்லை. இன்னும் பத்துத் தலைமுறைக்கு ராஜபோகமாக வாழ்வதற்கு அவருக்குப் பகவான் கொடுத்துவிட்டான். ஏன் இப்படிக் குறைப்பட்டுக் கொள்கிறீர்கள்?"

"நீங்க புரிஞ்சிக்கிட்டுப் பேசறீங்களா, புரியாது பேசறீங்களான்னு தெரியலியே?"

"புரியாமல் இல்லை அம்மா. எதையும் பொறுத்துக் கொள்ளப் பழக்கிக்கொள்ள வேண்டும்என்பதற்காகச் சொல்கிறேன்."

"பொறுத்துக்கிட்டுத் தான் இருக்கேன். ஆனால் வீட்டு நினைவேயில்லாமல் இருக்கிறவங்களை வாழறாங்கன்னு எப்படிச் சொல்ல முடியும்? நீங்களே யோசிச்சுச் சொல்லுங்க. நான் படிச்ச பொண்ணு இல்லே."

"அவர் சந்தோஷமாகத்தானேயம்மா இருக்கிறார். ஓயாமல் வேலை செய்கிறதிலே அவருக்கு சந்தோஷம். கைகொள்ளாமல் சம்பாதிக்கிறதிலே சந்தோஷம். பெரிய மனிதன், சின்ன மனிதன் என்று பல தரப்பட்ட மனிதர்களோடு பழகுவதிலே ஒரு சந்தோஷம்..."

"சந்தோஷம் வேண்டாம்னு சொல்லலே நான். அது மமதையாக வளந்திரிச்சின்னா எத்தனை பேருக்கு வருத்தமாயிருக்கும்? நாம் ஒரு நொடிகூட ஓய்ச்சலில்லாம வேலை செய்யறோம்னு நெனைக்கிறது நல்ல நினைப்பு. ஒரு நொடிகூட ஓய்ச்சலில்லாத பெரிய மனுஷனாயிட்டோம்னு நினைக்கிறது பொருத்தமாயிருக்குமா? பழசெல்லாம் நினைக்கப் பார்க்கணுமில்ல?... என்ன சிரிக்கிறீங்க? வீட்டுக்காரரைப் பத்தியே இப்படி ஒருத்தி பேசறாளேன்னு சிரிக்கிறீங்களா? நீங்க இங்கே உக்காந்திருக்கற மாதிரி ஒரு நிமிசம் அவங்க இருந்தாங்கன்னா எனக்குத் தலையிலே கிரீடத்தைத் தூக்கி வச்சாப்பல இருக்கும். இந்தப் புள்ளையோட ஒரு அஞ்சு நிமிசம் உட்கார்ந்திருந்தாங்கன்னா, என் வாய் இப்படி வளர்ந்திருக்காது... ஏண்டா தம்பி, போதுமா?" என்று குழந்தையைப் பார்த்துக் கேட்டாள் சிவபாக்யம்.

"சிவபாக்கியத்தம்மாளோட வாதம் பண்ணறது கஷ்டம்" என்றார் பாகவதர்.

"நான் வேற யார்கிட்ட சொல்லப் போறேன்? வீட்டுக்காரரைப் பத்தி ஆண்டவன் கிட்டத்தான் முறையிட்டுக்கலாம். நீங்க ஆண்டவன் மாதிரி வந்திருக்கீங்க. சொல்றேன். ஐயாவை அப்படித்தான் நினைச்சுக்கிட்டிருந்தேன். ஐயா ஒண்ணும் சொல்ற வழியாயில்லே."

"அதனாலே என்னை ஆண்டவன் பதவியிலேருந்து எடுத்தும் விட்டீர்கள்" என்று சிரித்தார் பாகவதர். (தொடரும்)



# நியூயார்க்குக்கு

ஒவ்வொரு வாரமும்

# 5

## போயிங் ஸர்வீஸ்கள்

(மத்திய கிழக்கு நாடுகள், ஐரோப்பா மற்றும் இங்கிலாந்து வழியாக)

JWT-AII 2339

## ஏயர்-இந்தியா

அகர்சந்த் மான்ஷன், மவுண்ட் ரோடு, சென்னை. போன்: [illegible]
20, மஹாத்மா காந்தி ரோடு, பெங்களூர். போன்: 161[illegible]
இந்தியா ஹவுஸ், திருச்சி ரோடு, கோயமுத்தூர். போன்: 8002

பி. ஓ. ஏ. சி. மற்றும் குவான்டாஸ் ஸ்தாபனங்களுடைய தொடர்புடையது

3, 4 – 30-7


நரி வேட்டை
16
கதை: ஜெயந்தி ▲ சித்திரம்: விஜு
தன் சூழ்ச்சிகளைப் புரிந்துகொண்டு தன்னைக் கைது செய்யவும் முயலுவான் குமார் என்று அஞ்சுகிறான் லாஷா. தன்னைக் காத்துக் கொள்ளும் நோக்கத்துடன் குமாரின் மனைவியை வஞ்சகமாகத் தன் பங்களாவுக்கு இட்டு வந்து சிறைப் படுத்தி வைக்கிறான். அங்கே தன்னைக் காட்டிலும் மோசமான நிலையிலுள்ள ரவீந்தரைத் தற்செயலாகச் சந்திக்கிறாள் ஷியாமா.
இதற்கு முன் உன்னை இங்கே பார்த்த நினைவில்லையே! யார் நீ?
ஷியாமா தன்னைப் பற்றிய விவரங்களைக் கூற......
ஆ! குமாரின் மனைவியா? அவர்தான் என்னைத் தேடி வருவார் என்று எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.
லாஷாவின் கையாளாக இருந்த நான் மனம் மாறி அவனைக் காட்டிக் கொடுப்பதாய் இருந்தேன். குமார் என்பவர் என்னை வந்து காண்பார் என்று ரகசியத் தகவல் கிடைத்தது....
ஓ! புரிகிறது! குமாரிடம் தரப்பட்ட உத்தரவுத் தாள்களை லாஷாவின் ஆள் திருடிக் கொண்டான். அதை லாஷா படித்ததும் உங்கள் தந்திரம் பலிக்காமல் போய் விட்டது!
அப்படித்தானிருக்கும்! சிறைச் சாலையை விடக் கேவலமான இந்த இடத்திலிருந்து எப்படியாவது தப்ப வேண்டும்!
உங்களுக்கு ஏதாவது யோசனை தோன்றுகிறதா?


காஸிம் பாஷ் போலீஸ் ஸ்டேஷனுக்கு அவர்கள் திரும்புகிறார்கள்.
ரவி! உனக்குத் தண்டனை கிடைப்பதைத் தவிர்க்க முடியாது. ஆனால் தண்டனையைக் குறைக்க ஏற்பாடு செய்கிறேன்.
நிஜமாதவா? ரொம்ப தாங்க்ஸ், மிஸ்டர் குமார்.
ஆனால் அதற்கு நீ எங்களுடன் ஒத்துழைக்க வேண்டுமே?
நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?
உன்னுடன் சேர்ந்த மற்றவர்களை எங்களுக்குச் சுட்டிக் காட்டு! எங்கள் தரப்புச் சாட்சியாக மாறி விடு.
முடியாது! முடியவே முடியாது!
பணத்தாசை பிடித்துத் தாய் நாட்டைக் காட்டிக் கொடுக்கும் காரியங்களில் நான் ஈடுபட்டது உண்மை. அதற்காகத் தண்டனை அளியுங்கள், ஏற்றுக் கொள்கிறேன்.
ஆனால் மற்றவர்களையும் சுட்டிக் காட்டுவது என்பது நடக்கவே நடக்காது!
ரவி! உன் நலனுக்குத்தானே கூறுகிறோம்? ஏன் மறுக்கிறாய்?
ஐயோ! வேண்டாம்! நான் அவர்களுக்கு விரோதியாக மாறிவிட்டேன் என்று தெரிந்தால் உடனே டில்லியிலுள்ள வயதான என் தாய் தந்தையருக்கு லாஷாவின் ஆட்களால் ஏதேனும் தீங்கு நேரும்.
ரவியை வற்புறுத்துவதில் பயனில்லை என்பதால் குமார் இன்ஸ்பெக்டரிடம் ரகசியமாக ஏதோ கூற...
பேஷ்! அதுதான் சரியான வழி.
தொடரும்



# நாவல் பிறக்கிறது

நாவலோ, சிறுகதையோ, எழுத்தாளரின் உள்ளத்தில் ஒரே சமயத்தில் முழுமையாகத் தோன்றி விடுவதில்லை. ஒரு சிறிய கருத்துத்தான் முதலில் அவனிடம் உதயமாகிறது. சிறு நெருப்புப் பொறி காற்றடித்தால் பெருந் தீயாகப் பரவி விடுவதுபோல், எழுத்தாளன் தன் மனத்தில் உதித்த கருத்தின்மீது கற்பனைக் காற்றை ஊதி ஊதி அதைப் படிப்படியாகப் பெரிதாக்குகிறான். அந்தக் கருத்தைக் கொஞ்சம் விவரித்தால் அது சிறுகதையாகிறது. நிறைய விவரித்தால் பெருங்கதை, அதாவது நாவல் ஆகிறது.

ஒரு நாவலை உருவாக்கிய விதத்தைத் தொடக்கம் முதல் இறுதி வரையில் விளக்குவதென்றால், அது அந்த நாவலின் நீளத்தைவிட இரண்டு - மூன்று மடங்கு நீளமுள்ளதாகி விடும். ஆம், அதில் வரும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் காரண-காரியங்களோடு விளக்க வேண்டும் அல்லவா?

இதர எழுத்தாளர்கள் விஷயம் எப்படியோ, எனக்குத் தெரியாது; ஆனால் நான் எந்த நாவலுக்கும் முதலில் விரிவான கதைக் குறிப்பு ஒன்றைத் தயாரித்து வைத்துக் கொள்வேன். அந்தக் குறிப்பு பெரும்பாலும் நாவலின் சுருக்கமாகவே இருக்கும். முழு நாவலை உருவாக்குவதற்கு எத்தனை சிரமங்கள் உண்டோ, அவற்றில் பாதிக்குக் குறையாதவை கதைக் குறிப்பு தயாரிப்புக்கும் உண்டு. எனவே அந்தக் குறிப்பை உருவாக்கியதைப் பற்றிச் சொல்லி விட்டால், ஏறக்குறைய ஒரு நாவலை உருவாக்கிய கதையைக் கூறியதுபோல் ஆகிவிடும். அதையே இங்கே கூறப் போகிறேன்.

இப்போது நான் கூறப் போகும் நாவலுக்கு அடிப்படையாக அப்போது என் உள்ளத்தில் இருந்த கருத்து இதுதான். 'பாரதப் பெண்கள் பண்பாட்டில் உயர்ந்தவர்கள். அவர்கள், தங்களது வாழ்வு பாழானாலும், தங்கள் காரணமாகப் பிழை அறியாத பிற பெண்களின் வாழ்வு பாழாக விட மாட்டார்கள்.'

இந்தக் கருத்தின் முதல் விரிவாக, அதற்கு ஒரு கதை உருவம் கொடுத்தேன். கணவன் இறந்து விட்டதாகக் கருதியிருந்த ஒரு பெண், பிற்காலத்தில் அவனையும், வேறொரு பெண்ணையும் கணவன் - மனைவியாகக் காண்கிறாள். அவர்களுடைய தாம்பத்தியப் பிணைப்பில் அந்தப் பெண்ணின் பிழை சிறிதும் இல்லை என்பதை உணர்ந்த அவள், அப்பெண்ணின் வாழ்வுக்குத் தான் இரையாகிவிடக் கூடாது என்று ஒதுங்கிக் கொள்ளத் தீர்மானிக்கிறாள்.

இப்போது இந்தக் கதையில் மூன்று பாத்திரங்கள் உருவாகி விட்டதாலும், பின்னும் செய்யப் போகும் விரிவுகளில் இன்னும் பல பாத்திரங்கள் உருவாகக் கூடுமாதலாலும், இந்தக் கட்டத்திலிருந்தே பாத்திரங்களுக்குப் பெயர் கொடுக்கத் தொடங்கினேன். என் முதல் கதாநாயகியின் பெயர் ஸந்தியா. அவ

மாயாவி



ளுடைய கணவனின் பெயர் கோவிந்தன். அவன் பிற்காலத்தில் மணந்துகொண்ட இரண்டாம் கதாநாயகியின் பெயர் பிரமீளா.

இவ்வாறு பெயரிட்டுக்கொண்ட பிறகு, முன் சொன்ன கதை உருவைப் படிப்படியாக விரிவாக்கத் தொடங்கினேன். முதலில் என் கற்பனை ஒரு பிரச்னையைக் கிளப்பியது. கதையிலே இரண்டு பெண்கள் வருகிறார்கள். இருவரும் பாரதப் பெண்கள். அவர்களுள் ஒருத்தி மட்டும், மற்றவள் பிழையற்றவள் என்பதற்காக இல்வாழ்வைத் தியாகம் செய்ய முன் வந்தாளென்று காட்டினால், பாரதப் பெண்கள் அனைவருக்கும் பொருந்த வேண்டிய என் கருத்துக்கு முழு நேர்மை அளித்ததாக ஆகுமா? பார்க்கப்போனால் ஸந்தியாவும் பிழையற்றவள் தானே? எனவே, அவருடைய வாழ்வைத் தான் அறியாமல் பறித்துக் கொண்டதாகப் பிரமீளாவை அறியச் செய்து, அவளும் ஸந்தியாவுக்காகத் தன் இல்வாழ்வைத் தியாகம் செய்ய முன்வந்தாள் என்று காட்ட முடிவு செய்தேன்.

இப்போது அடுத்த பிரச்னை எழுந்தது. ''இப்படி அவ்விரு பெண்களும் ஒருவர் வாழ்வுக்கு மற்றவர் திரையாகிவிடக் கூடாது என்று ஒதுங்கி விட்டால் கதையை முடிப்பது எப்படி?''

கதையை முடிக்க இரண்டு வழிகள் இருந்தன. ஒன்று: அவர்கள் இருவரையுமே மடிய வைப்பது. மற்றொன்று: இருவரையும் சேர்ந்து வாழச் செய்வது. முதல் வழி என் கதைக் கருத்துக்கு ஒரு முடிவான அமைப்புத் தராது. ஏனென்றால் இருவர் தியாகமும் பயனின்றி அல்லவா போய் விடுகிறது! எனவே இருவரும் சேர்ந்து வாழ வகை செய்வது என்று நிச்சயித்தேன்.

இப்போது கதைக் குறிப்பின் அமைப்பில் இரண்டாவது விரிவு பூர்த்தியாகி விட்டது. அதாவது, கணவன் கோவிந்தன் இறந்து விட்டதாகக் கருதியிருந்த ஸந்தியா, பிற்காலத்தில் அவன் பிரமீளா என்ற பெண்ணுடன் இல்வாழ்வில் ஈடுபட்டிருப்பதைக் காண்கிறாள். தான் யாரென்பதைக் காட்டிக் கொண்டால் அந்தப் பெண்ணின் வாழ்வு பாழாகிவிடும் என்று ஒதுங்கிக்கொள்ள நிச்சயிக்கிறாள். ஆயினும் பிரமீளாவுக்கு ஸந்தியா தன் கணவரின் மூத்ததாரம் என்பது தெரிந்துவிடவே அவள் வாழ்வுக்குத்தான் திரையாகிவிடக் கூடாது என்று இவளும் ஒதுங்கிக்கொள்ள முயலுகிறாள். இருவர் நிலைமையும் அறிந்த யாரோ ஒருவர் குறுக்கிட்டு அவர்களைச் சேர்ந்து வாழச் செய்கிறார்.

அடுத்ததாக இந்த இரண்டாவது கட்டத்தை மேலும் விரிவாக்கத் தொடங்கினேன். கதையின் முதல் நிலையில், ஸந்தியா, கோவிந்தன் இறந்து விட்டதாகக் கருதுகிறாள்; ஆனால் அவன் உயிரோடிருக்கிறான். இதற்குக் காரணம் வேண்டுமல்லவா? கோவிந்தனுக்கு ஸந்தியாமீது அளவுகடந்த வெறுப்பு இருந்தாலன்றி, அவன் உயிரோடு இருந்து கொண்டே, தான் இறந்துவிட்டதாக மனைவிக்குச் செய்தி எட்டச் செய்திருக்க மாட்டான். அந்த அளவுக்கு ஸந்தியாவிடம் வெறுப்பு ஏற்படுவதற்கு, அவன் அவளுடைய கற்பில் மாசு கண்டான் என்று காட்டுவது ஒரு பொருத்தமான காரணம் ஆகும். ஆனால் ஸந்தியா நெறி தவறாதவளாக இருந்தால்தான் பிற்காலத்தில் தன் வாழ்வைப் பிரமீளாவுக்காகத் தியாகம் செய்யத் துணியும் உத்தம பாத்திரமாக விளங்க முடியும். எனவே தன்னல நோக்குடைய யாரோ ஊடே புகுந்து கோவிந்தனின் மனத்தில் அந்தச் சந்தேகப் புகையை எழுப்ப வேண்டும்.

இம்மாதிரி தீச்செயலை ஆணும் செய்யலாம்; பெண்ணும் செய்யலாம். ஆனால் இக்கதை பெண்ணினத்தின் உயர்வைச் சித்திரிக்கும் கதையாதலால் இக்கைங்கரியத்தைச் செய்ய ஒரு பெண்ணை உருவாக்க விரும்பவில்லை. அதற்கு ஓர் ஆணையே உருச் செய்யத் தீர்மானித்து அவனுக்குப் பாஸ்கரன் என்ற பெயரையும் சூட்டினேன்.

ஸந்தியாவின் வாழ்வைப் பாழாக்குவதன் மூலம் பாஸ்கரன் தன்னலம் அடைவான் என்றால், அந்தத் தன்னலம் ஸந்தியாவைத் தான் அடைய வேண்டும் என்பதல்லாது வேறு விதமாக இருக்க முடியாது. இருந்தாலும், அவள் கோவிந்தனின் மனைவியான பிறகு பாஸ்கரன் அவள்மீது நாட்டம் கொண்டான் என்று காட்டுவதை விடச் சிறு பிராயத்திலிருந்தே அவனுக்கு அவள்மீது ஒரு கண் இருந்தது; ஆனால் ஸந்தியா அவனை வெறுத்தாள்; கோவிந்தனை மணந்து கொண்டாள்; அதனால் பாஸ்கரன் ஏமாற்றமும் வெறியும் அடைந்து அவளைக் கணவனிடமிருந்து பிரித்துத் தான் அடையச் சூழ்ச்சி செய்தான் என்று காட்டுவது கதைக்கு அதிகச்சுவையும், அதிக பலமும் அளிக்குமென்று அவ்வாறே குறிப்பெடுத்துக் கொண்டேன்.

அடுத்த நிலை மேற்கூறிய நிகழ்ச்சிகளுக்குரிய ஒட்டு நிகழ்ச்சிகளைக் கற்பனை செய்வது. முதலில் கோவிந்தன் இறந்து விட்டதாக ஸந்தியா நம்புவது. ஸந்தியாவின் ஊருக்கு அருகிலோ, அல்லது

**நாவல் பிறக்கிறது**

அடுத்த இதழில்

**விந்தன்**

தமது அநுபவங்களை எழுதுகிறார்!

அவனைச் சார்ந்தவரோ வந்து பார்க்கக்கூடிய ஓரிடத்திலோ இருந்து கொண்டு கோவிந்தன் இந்தச்செய்தியை அவர்களுக்கு எட்டச் செய்தானென்றால், அவர்கள் அங்கே புறப்பட்டு வந்து உண்மையை அறிய முயலக்கூடும் அல்லவா; ஆதலால் கோவிந்தனை அமெரிக்காவுக்கு அனுப்ப முடிவு செய்தேன். அங்கேதான் ஸந்தியா களங்கப்பட்டவள் என்று பாஸ்கரன் அவனுக்கு உரையேற்றுகிறான் என்று வகுத்துக் கொண்டேன். இதனால் மனமுடைந்த கோவிந்தன், தான் வஞ்சிக்கப்பட்டதாகக் கருதி, ஸந்தியா அதே மாதிரி வஞ்சிக்கும் நோக்கத்துடன் தான் ஒரு விபத்தில் இறந்துவிட்டதாக அவளுக்குச் செய்தி அனுப்பச் செய்து விடுகிறான் என்று காட்டினேன்.

இத்துடன் கதைக் குறிப்பின் ஒரு பகுதி முழுமை பெற்றுவிட்டது. அதாவது, கோவிந்தன் ஸந்தியாவை மணந்து அமெரிக்காவுக்கு வந்து, பாஸ்கரனின் சூழ்ச்சியால் அவளை மறக்க நிச்சயித்துத் தான் இறந்து விட்டதாக அவளுக்குச் செய்தி கிட்டச் செய்துவிடுகிறான் என்பது வரையில் உள்ள பகுதி. அடுத்ததாக அவன் பிரமிளாவைச் சந்தித்து அவளை மணந்து கொள்ள வேண்டும். இதையும் வெளிநாட்டிலே நிகழ்த்தத் தீர்மானித்தேன். அதற்காகப் பிரமிளா ஒரு வங்காளிப் பெண் என்றும், நாட்டியக் கலையில் தேர்ச்சி பெற்ற அவள் அயல் நாடு வந்து நிகழ்ச்சிகள் நடத்திக் கொண்டிருந்தாள் என்றும் அத்தகைய நிகழ்ச்சி ஒன்றைப் பார்க்கச் சென்ற போது கோவிந்தனுக்கும் அவளுக்கும் அறிமுகம் ஆயிற்றென்றும், பிறகு அவர்கள் நெருங்கிப் பழகிக் காதல் கொண்டு திருமணம் செய்துகொண்டனர் என்றும் கதையை விவரிக்கக் குறிப்பெடுத்துக் கொண்டேன்.

இப்படிக் கதைக் குறிப்பின் இரண்டாவது பகுதியையும் வளர்த்துக் கொண்ட பிறகு அடுத்த பகுதிக்கு வந்தேன். அடுத்த பகுதியில் மிக முக்கியமான நிகழ்ச்சி, ஸந்தியாவுக்குத் தன் கணவன் உயிரோடு இருப்பதும், பிரமிளாவை மணந்திருப்பதும் தெரிய வேண்டும். அதோடு பிரமிளாவுக்கும் ஸந்தியா கோவிந்தனின் முதல் மனைவி என்பது தெரிய வாய்ப்பு ஏற்படவேண்டும். அது மட்டும் போதாது: இறுதியில் கோவிந்தன் அவ்விருவருடனும் கூடிவாழ்வதாகக் கதையை முடிக்க வேண்டியிருந்ததால், ஸந்தியா பிழையற்றவள் என்பதை அவனும் அறிந்து கொள்ள வேண்டும்.

இவற்றை யெல்லாம் இயற்கையாக நடைபெறுவது போல் காட்ட வேண்டுமென்றால் பிரமிளாவையும் கோவிந்தனையும் இந்தியாவுக்குத் திரும்பிவரச் செய்ய வேண்டும். ஏனென்றால் ஸந்தியா பெண்ணாதலால், அவள் வெளி நாடு சென்றாள் என்றோ, அங்கே அவர்களைக் கண்டாள் என்றோ காட்டுவது கதைக்காகக் கட்டிய சம்பவம் போல் தோற்றும். ஆகவே முன்னவர்கள் இந்தியாவுக்குத் திரும்ப வேண்டிய நிர்ப்பந்தம் ஒன்றைச் சிருஷ்டித்தேன். அது இதுதான்: ஸந்தியா தன்னை வஞ்சித்து விட்டதாகக் கருதியதும் கோவிந்தன் முதலில் மனமுடைந்து தற்கொலை செய்து கொள்ள முயலுகிறான். ஆனால் அமெரிக்கர் ஒருவர் அவனைத் தடுத்து அவனுடைய பரிதாபக் கதையைக் கேட்டு வருந்தி, அதற்காக அவன் உயிரை விடுவது மதியீனம் என்று உணர்த்தி, அவன் இறந்துவிட்டதாகக் கதை கட்டி ஊருக்குச் செய்தி அனுப்பிவிட்டு, வெளி நாட்டிலே வேறொரு பெண்ணை மணந்து, கடந்ததை மறந்து புதுப் பெயருடன் புது மனிதனாக வாழும்படி போதிக்கிறார். அவரே அவனுக்குச் சுதாகர் என்று மாறு பெயர் சூட்டி, அவனுடைய விஸா முதலியவற்றில் இந்தப் பெயர் மாற்றத்துக்கு ஏற்பாடு செய்கிறார். இதனால் வெளி நாட்டிலிருந்த பாஸ்கரன் கூட அவன் இறந்துவிட்டதாகக் கருதுகிறான். அவன் மூலந்தான் அந்த அமெரிக்கர் கோவிந்தன் இறந்துவிட்ட செய்தியையும் அதை எல்லோரும் நம்புவதற்கு இசைவாக அவனுடைய உடைமைகளையும் ரொக்கத்தில் ஒரு பகுதியையும் ஸந்தியாவுக்கு அனுப்பச் செய்கிறார்.

ஆனால் பாஸ்கரன் பிரமிளாவுக்கு முன்பே தெரிந்தவன். அவனைக் கோவிந்தன் பிரமிளாவின் வீட்டில் கண்டு விடுகிறான். தனக்கு முன்பே மணமாகியிருந்ததையும், மனைவி தன்னை வஞ்சித்துவிட்டதையும் பிரமிளாவிடம் அவன் வெளியிடவில்லையாதலாலும், பாஸ்கரன்கூடத் தான் இறந்துவிட்டதாகக் கருதியிருப்பதாலும், தன்னை நேருக்கு நேர் பார்த்து விட்ட அவன் எல்லா உண்மைகளையும் பிரமிளாவுக்குக் கூறிவிடுவான் என்றும், அவள் தன்னை ஒரு வஞ்சகனென்று வெறுத்து ஒதுக்கி விடுவாளென்றும்

எண்ணிய கோவிந்தன் அக்கணமே அங்கிருந்து வெளியேறித் தன்னை உயிர் வாழச் செய்த அமெரிக்கரிடம் தஞ்சம் அடைகிறான். அவருக்கும் கலக்கம் ஏற்படுகிறது. ஏனென்றால் கோவிந்தன் விசா முதலியவற்றை அவர் சில குறுக்கு வழிகள் மூலம் சுதாகர் என்ற பெயருக்கு மாற்றிக் கொடுத்திருந்தார். இப்போது பாஸ்கரன் கோவிந்தன்தான் சுதாகர் என்பதைத் தெரிந்துகொண்டு விட்டதால், அவன் இறந்துவிட்டதாகத் தன்னிடம்கூடக் கதை கட்டி ஏமாற்றி விட்டதற்காகக் கோபம் கொண்டு அவனுடைய விசா முதலியவற்றைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்று ஸ்தானிகராலயத்துக்குச் செய்தி அனுப்பிவிட்டால், கோவிந்தனுக்கு மட்டுமின்றித் தமக்கும் ஆபத்து வரக்கூடும் என்று அஞ்சுகிறார். ஆதலால் அவர் பிரமிளாவிடம் போய் விஷயத்தை யெல்லாம் சொல்லி, அவர்கள் இருவரும் உடனே இந்தியாவுக்குப் போய் விடுவதுதான் நல்லதென்று உணர்த்திப் புறப்படச் செய்து விடுகிறார். அவர்கள் பிரமிளாவின் ஊரான கல்கத்தாவுக்கு வந்து சேருகின்றனர் என்று கதைக் குறிப்பை வளர்த்தேன்.

இனி, ஸந்தியா கல்கத்தாவுக்கு வர வேண்டும். அங்கே வந்தால்தானே அவள் இவர்களைத் தம்பதிகளாகக் காண முடியும்? அதற்கு அவளை ஒரு பாடகியாக்க முடிவு செய்தேன். அவள் ஒரு சங்கீத வித்துவானின் பெண்ணென்று வகுத்துக் கொண்டேன். அந்த வித்துவானிடம் ஸ்ரீதரன் என்பவன் இசைப் பயிற்சி பெற்று சினிமாவில் சேர்ந்து நல்ல நிலையில் இருந்தானென்றும் அவன் தான் பெற்றோரற்றுச் செல்வச் சீமானாகவும், தயாள உள்ளம் படைத்தவனாகவும் இருந்த கோவிந்தனை அழைத்து வந்து ஸந்தியாவுக்கு மணமுடித்து வைத்தானென்றும் அந்த ஸ்ரீதரனுக்கும் ஸந்தியாவுக்கும் தொடர்பு இருப்பதாகக் கதை கட்டித்தான் பாஸ்கரன் கோவிந்தனின் உள்ளத்தில் சந்தேகத்தை விதைத்தானென்றும், கணவன் இறந்ததாகச் செய்தி வந்த பிறகு ஸந்தியா சில காலம் தன் தந்தையுடன் ஊரில் வாழ்ந்தாளென்றும், அங்கே அவளுடைய தந்தை இறந்து விட்டதால் பிறகு ஸ்ரீதரனைத் தஞ்சம் அடைந்தாளென்றும், அவன் அவளைப் பின்னணிப் பாடகியாகச் சினிமா உலகில் புகுத்தி வாழ வகை செய்தானென்றும், ஆனால் ஸ்ரீதரனின் மனைவியே அவர்கள் தொடர்பைச் சந்தேகித்ததால் ஸந்தியா அங்கிருந்து வெளியேறி, கல்கத்தாவில் ஒரு சங்கீத வித்தியாலயத்தில் பணியாற்றி வந்தாளென்றும், அந்த வித்தியாலயத்தின் கட்டிட நிதிக்கு ஓர் உதவி நடன நிகழ்ச்சி நடத்தித் தரப் பிரமிளாவைச் சந்திக்கப் போனபோதுதான் தன் கணவர் உயிரோடிருப்பதையும், அவர் பிரமிளாவை மணந்து அவளோடு வாழ்வதையும் அவள் அறிய நேர்ந்ததென்றும், தான் யாரென்பது தெரிந்தால் பிரமிளாவின் வாழ்வு குலைந்து விடுமென்று கருதி அன்றிரவே கல்கத்தாவை விட்டுப் பம்பாய்க்கு வந்து விட்டாளென்றும், அங்கே அவள் தற்செயலாக ஸ்ரீதரனைச் சந்தித்தாளென்றும், அவன் மனைவி மக்களை வைசூரி நோய்க்கும், ஸந்தியாவை மனைவியின் கொடிய சந்தேக நோய்க்கும் பறி கொடுத்ததால் பைத்தியம் பிடித்து ஊர் ஊராய்ச் சுற்றித் திரிந்து, இறுதியில் பம்பாயிலுள்ள பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டு, பைத்தியம் தெளிந்து வெளிவந்த நிலையில் இருந்தானென்றும் ஸந்தியா அவனை வீட்டுக்கு அழைத்து வந்து, தன் கணவர் உயிரோடிருப்பதையும், கல்கத்தாவில் பிரமிளா என்ற பெண்ணோடு வாழ்வதையும், அவர்களுடைய வாழ்க்கைக்குத் தான் திரையாக விரும்பாமல் இங்கே வந்திருப்பதாக அறிவிப்பதென்றும் காட்ட நிச்சயித்தேன். இவ்வாறு ஸந்தியாவைக் கதையின் கடைசிக் கட்டம் வரையில் கொண்டுவந்துவிட்டேன்.

பிரமிளாவுக்குத்தான் அமெரிக்காவில் இருந்தபோதே அந்த அமெரிக்கர் மூலம் (முழு நாவலை எழுதிவந்தபோது அவருக்கு ஸ்காட்ஸ் என்று பெயரிட்டேன்.) தன் கணவருக்கு ஸந்தியா என்றொரு மனைவி ஏற்கனவே இருக்கிறாள்; அவள் நடத்தை கெட்டுப் போய் விட்டதால் அவர் தாம் இறந்து விட்டதாக அவளுக்குச் செய்தி அனுப்பி விட்டுத் தன்னை மணந்து கொண்டார் என்ற விவரங்கள் தெரியுமே. இனி அவருக்குத் தெரிய வேண்டியது ஸந்தியா பிழையற்றவள்; அவள் பம்பாயில் இருக்கிறாள் என்பது மட்டுந்தான். அதை அவருக்கு எப்படித் தெரிய வைத்தேன்; அதை அறிந்த பிறகு ஸந்தியாவின் வாழ்க்கைக்குத் தான் திரையாகிவிடாதிருக்க அவள் என்ன செய்தாள் என்பதைப் பின்னர் விளக்குகிறேன். இப்போது அடுத்த விஷயத்துக்கு வருவோம்.

அடுத்த விஷயம் ஸந்தியா பிழையற்றவள் என்று சுதாகராக மாறியிருக்கும் கோவிந்தனுக்குத் தெரிய வேண்டும். பாஸ்கரன்தான் இந்த விஷ வித்தை விதைத்தவன். ஆதலால் அவனே நேரில் வந்து அது பொய் என்று காரண-காரணங்களோடுவிளக்கினாலன்றிக் கோவிந்த



காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் இராமநாதபுரம் ஜில்லா இளையாற்றங்குடியில் இந்த வருஷத்திய வியாஸ பூஜையை, குரு பூர்ணிமை தினமாகிய 27-7-61 வியாழக்கிழமை நடத்தி, அன்று முதல் இரண்டு மாதங்கள் தமது ஐம்பத்தைந்தாவது சாதுர்மாஸ்ய விரதத்துக்காக அவ்விடமே தங்கியிருப்பார்கள். அவ்வூரில் சுவாமிகளின் பரமேஷ்டி குருவான அறுபத்தைந்தாவது ஆசார்ய ஸ்வாமிகளின் அதிஷ்டானம் உள்ளது. புதுக்கோட்டையிலிருந்து இருபத்திமூன்றுமைல் தூரத்திலும், இராமநாதபுரம்ஜில்லா திருப்பத்தூரிலிருந்து எட்டு மைல் தூரத்திலும் அந்தத் தலம் உள்ளது.

னுக்கு மனமாற்றம் ஏற்பட்டதாகக் காட்ட முடியாது. இதற்குத் தீய எண்ணங்கள் கொண்ட பாஸ்கரனை நல்லெண்ணம் உடையவனாக மாற்ற வேண்டும். அத்தகைய மாற்றம் ஏற்பட வேண்டுமானால் வாழ்வில் அவன் மிகுந்த கஷ்டத்துக்கு உள்ளாக வேண்டும். அந்தக் கஷ்டம் அவன் கண்களைத் திறந்து விட வேண்டும் என்று எண்ணினேன். கண்கள் என்ற சொல்லை என் மனம் எண்ணியதும், அவனை ஏன் கண்களை இழப்பதாகக் காட்டக் கூடாது என்ற நினைவு எழுந்தது. தொடர்ந்து வேறு சில நினைவுகளும் ஏற்பட்டன. கோவிந்தன் ஸந்தியாவை மணந்தபிறகு வெளி நாட்டுக்கு வருவதற்கு ஒரு முகாந்திரம் வேண்டும்; அதேபோல் பாஸ்கரன் அங்கே வருவதற்கும் தக்க காரணம் வேண்டும். பாஸ்கரனை அமெரிக்காவில் கண் வைத்தியம் படிப்பவனாகக் காட்டலாம். அங்கே படித்துவிட்டு வந்து கண் டாக்டர் என்ற பெருமையில் ஸந்தியாவை எளிதாக மணக்கலாம் என்று அவன் எண்ணியிருக்கிறான். ஆனால் இடையே, தந்தை இறந்து விட்டதால் அவன் ஊருக்கு வர நேரிடுகிறது. அங்கே வந்தபோது ஸந்தியா கோவிந்தனின் மனைவியாகப் போகிறாள் என்பதை அறிகிறான். எப்படியாவது இந்தக் கலியாணத்தை நிறுத்திவிடத் துடிக்கிறான் என்று கதையை அமைத்துக் கொண்டேன்.

இப்போது, கோவிந்தனைக் கண் நோயுடையவனாகச் சித்திரித்தால், அவனுடைய பார்வையைப் போக்கி இந்தக் கலியாணத்தை நிறுத்தக் கண் டாக்டருக்குப் படித்துக் கொண்டிருக்கும் பாஸ்கரனுக்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்க முடியும். கோவிந்தன் பார்வை இழந்ததையும் பொருட்படுத்தாமல் ஸந்தியா அவனை மணந்துகொள்ளத் துணிந்தாள் என்று காட்டிவிட்டால், அவனை அமெரிக்காவுக்குத் தன்னுடன் அழைத்துச் சென்று சிகிச்சை செய்வித்துப் பார்வை கிட்டச் செய்து விடுவதாகக் கூறி, பாஸ்கரன் அவனை அழைத்துச் சென்று ஸந்தியா களங்கப்பட்டவள் என்று உரைப்பதற்கும் வசதியாக இருக்கும் என்று கருதினேன். அவ்வாறே முன் கதையில் உரிய மாற்றம் செய்துவிட்டு, அமெரிக்காவில் நடந்த சிகிச்சையில் கோவிந்தன் பார்வை பெற்று விடு

இறான் என்றும், அதன் பிறகுதான் பாஸ்கரன் அவன் உள்ளத்தில் சந்தேக விதையை விதைக்கிறான் என்றும் இடைச் செருகல் செய்தேன்.

இதன் பிறகு இப்போதையச் சிக்கலுக்குப் பாஸ்கரன் பார்வையை இழந்தான் என்று காட்டுவது எளிதாயிற்று. அவன் கண் வைத்தியம் படிப்பவன். ஆதலால் ஒரு சமயம் தனக்குக் கண் நோவு வந்தபோது தானே தவறான மருந்து ஒன்றைப் போட்டுக்கொண்டு கண்களைக் குருடாக்கிக் கொண்டான் என்றோ, அல்லது ஆஸ்பத்திரியில் அவனுக்குத் தலைவராக இருந்த ஸர்ஜன் குடிகாரர்; அவர் தவறான மருந்தை இட்டு அவன் கண்களைக் குருடாக்கி விட்டார் என்றோ காட்டத் தீர்மானித்தேன். புறக் கண்களை இழந்த பிறகு அவன் அகக் கண்கள் திறந்தன; கோவிந்தனின் கண்களைக் குருடாக்கியது; ஸந்தியாவின் வாழ்வைப் பாழாக்கியது ஆகிய பாவங்கள் தன் பார்வையைப் பறித்து விட்டன என்று அவனை வருந்த வைத்தேன். அதோடு அவன் பார்வையை இழந்து நின்றபோது கைப் பணத்தையும் பறிகொடுக்கச் செய்து, சிகிச்சைக்குப் பணமின்றித் திண்டாடினான் என்றும் கதைக் குறிப்பில் சேர்த்துக் கொண்டேன். பிரமீளாவை அவன் அறிவான் என்று காட்டியிருந்ததால், அவளிடம் அவன் முன்பு தவறாக நடந்துகொள்ள முயன்றான்; இருந்தாலும் அவன் பார்வையிழந்து, பணமின்றித் தத்தளிக்கிறான் என்று அறிந்ததும், அவன் செய்த பிழையைப் பாராட்டாமல் அவள் சிகிச்சைக்குப் பணம் கொடுத்து உதவினாள் என்று இட்டுக்·கட்டி, அதன்மூலம் வேறு அவளுக்குப் பெண்களிடம் உயர்ந்த மதிப்பு ஏற்படச் செய்தேன். அப்படி அவன் பார்வை இழந்து பிரமீளாவிடம் உதவி கோரி வந்தபோதுதான் கோவிந்தன் அவனைப் பிரமீளாவின் வீட்டில் பார்த்துவிட்டு ஓடிப் போனான் என்றும் இணைத்தேன். பாஸ்கரன் சிகிச்சை முடிந்து பார்வை பெற்று ஆஸ்பத்திரியிலிருந்து வருவதற்குள் பிரமீளாவும் கோவிந்தனும் ஸ்காட்லின் தூண்டுகோலால் யாருக்கும் அறிவிக்காமல் இந்தியாவுக்குப் போய் விட்டார்கள் என்று காட்டத் தீர்மானித்தேன்.

பின்னர் பாஸ்கரன் நல்லவனாகத் திருந்தி ஊர் திரும்பி ஏதோ ஓர் ஊரில் கண் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறானென்றும், அப்போது கண் வைத்தியர்கள் மகாநாடு ஒன்றுக்காகக் கல்கத்தா வருகிறானென்றும், அங்கே கோவிந்தனைக் காண்கிறானென்றும், அவன் உயிரோடு இருப்பது இதுவரையில் தெரியாததால் திடுக்கிடுகிறான் என்றும், பிறகு ஸந்தியாவைப் பற்றித்தான் கூறியதெல்லாம் பொய்யென்று கூறி அவளை ஏற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்துகிறானென்றும் குறிப்பை வளர்த்தேன். கோவிந்தன் ஸந்தியாவுக்குத் தான் பெரிய துரோகம் இழைத்து விட்டதாகக் கருதி, அந்த நிலையில் பிரமீளாவுடன் வாழப் பிடிக்காமல் அமெரிக்கா சென்று விடுகிறான் என்றும் வகுத்துக் கொண்டேன்.

இப்போது கதைக் குறிப்பின் இறுதிக் கட்டம். யாரோ ஒருவர் இம் மூவரிடையே புகுந்து அவர்களை ஒன்று சேர்த்து வைக்க வேண்டும். பல கதைகளில் கதாசிரியனை என்னையும் ஒரு பாத்திரமாகச் சேர்த்துக் கொண்டு எழுதிப் பழக்கப்பட்டிருந்ததால் அவ்வாறே இந்தக் கதையிலும் நுழையத் தீர்மானித்தேன்.

பின்னர் நான் கல்கத்தாவுக்குப் போகிறேன். அங்கே பிரமீளாவைச் சந்திக்கிறேன். அவளுக்கு அப்போது ஸந்தியா பிழையற்றவள் என்பதோ, தன் வீட்டுக்கு வந்து, சங்கீத வித்தியாலயத்துக்கு உதவிக் கச்சேரி செய்ய அழைத்தது அவள்தானென்றோ தெரியாது. ஆனால் என் கதையின் அதுவரையிலுள்ள வளர்ச்சியிலிருந்தும், நான் ஸந்தியாவை நேரில் சந்திப்பதாகக் காட்டியிருந்த பகுதியிலிருந்தும், உண்மையிலேயே அவள் ஸ்ரீதரனை மணந்து கொண்டிருக்கிறாளென்று கருதி விடுகிறாள். ஸந்தியா மோசமான நடத்தையுடையவள் என்று அவள் தீர்மானித்து விட்டதால், என் கதை மூலம் கோவிந்தன் கல்கத்தாவில் தன்னுடன் வாழ்கிறான் என்பது தெரியும்போது அவள் இங்கே வந்து தன் கணவருக்குத் தொல்லை கொடுக்கலாம்; அதனால் தங்கள் வாழ்வு பாதிக்கப்படலாம் என்று பிரமீளா அஞ்சுகிறாள். எனவே நான் என் கதையில் கோவிந்தன் பிரமீளாவுடன் வாழ்கிறான் என்று காட்டிவிடாதிருக்கும் பொருட்டு, தான் அவனை மணக்கவில்லையென்றும், பாஸ்கரனைத் தான் மணந்து கொண்டிருப்பதாகவும் கதைத்து, என் கதைப் போக்கைத் திருப்பிவிட முயற்சி செய்கிறாள்.

பின்னர் நான் பாஸ்கரனை, அவன் கண் வைத்திய நிலையம் நடத்தி வந்த ஊரில் சந்திக்கிறேன். நல்லவனாகத் திருந்திவிட்ட அவன், ஸந்தியாவும் பிரமீளாவும் தவறான செய்திகளை அறிவித்து என் கதைப் போக்கை மாற்றி, ஒருவர் வாழ்வுக்கு மற்றவர் இரையாகி விடாதிருக்க முயன்றிருக்கிறார்கள் என்பதை விளக்கி, "இருவரும் அப்பழுக்

கற்றவர்கள்; உண்மை வாழ்வில் அவர்கள் ஒன்று சேராவிட்டாலும், உங்கள் கதையிலாவது அவர்களை ஒன்று சேர்த்து வையுங்கள்'' என்று கேட்டுக் கொள்ளுகிறான்.

கடைசியாகத்தான் கோவிந்தனைச் சந்திக்கிறான். சந்தேகப் பேயால் ஆட்டுவிக்கப்பட்டு ஸந்தியாவுக்குப் பெரும் துரோகம் இழைத்துவிட்டதாகக் கருதி, அந்நிலையில் பிரமிளாவுடன் இன்ப வாழ்வு வாழ்ந்து கொண்டிருப்பது, இல்வாழ்வைத் துறந்து தவிக்கும் ஸந்தியாவுக்கு மேலும் துரோகம் இழைப்பதாகும் என்ற கருத்துடன்தான் அவன் அமெரிக்காவுக்குத் திரும்பிச் சென்றான். ஆனால் அங்கேயும் அவனால் நிம்மதியாக வாழ முடியவில்லை. தன் கதையையே ஒரு திரைப்படமாக எடுத்து, தனது தத்தளிப்பான நிலையை அவ்விரு பெண்களையும் உணரச் செய்வதென்ற தீர்மானத்துடன் பம்பாய்க்கு வருகிறான். அக்கதைக்கு வசனம் எழுதும் பொருட்டு நான் அழைக்கப்படுகிறேன். அப்போது அவன் தனது திரைப்படக் கதையை என்னிடம் கூறி, ''இதில் வரும் இரண்டு பெண்களுக்கும் துரோகம் இழைக்காத படி கதாநாயகன் நடந்து கொள்ளுவதாக, கதைக்கு நீங்களே ஒரு முடிவையும் அமைக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொள்ளுகிறான்.

இடையே என் கதையில் மேலும் பிரசுரமான பகுதியிலிருந்து ஸந்தியா பிழையற்றவள் என்பது பிரமிளாவுக்குத் தெரிகிறது. ஆனால் கதைப் பாத்திரங்களை நான் சந்திக்கும் பகுதியில் அவள் இப்போது ஸ்ரீதரனை மணந்து அவனுடன் வாழ்வதாகக் காட்டியிருந்தேன் அல்லவா? எனவே, அது உண்மைதானா என்பதைக் கண்டறிய வேண்டும்; உண்மையாக இல்லாவிட்டால் ஸந்தியாவைக் கல்கத்தாவுக்குக் கூட்டிவர வேண்டும்; அமெரிக்கா சென்றுள்ள கோவிந்தன் திரும்பி வந்ததும் அவர்கள் இருவரையும் சேர்த்து வைத்துவிட்டுத் தான் விலகிக்கொண்டுவிட வேண்டும் என்ற நினைப்புடன் அவள் பம்பாய்க் வருகிறாள். ஸந்தியா உண்மையில் ஸ்ரீதரனை மணக்கவில்லை என்பது அவளுக்குத் தெரிய வருகிறது. அவளைக் கல்கத்தாவுக்கு வரவேண்டுமென்று அழைக்கிறாள். கணவன் அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்ததும் அவனுடன் கூடி வாழ வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறாள். ஆனால் ஸந்தியாவோ, அவளுடைய வாழ்வைத் தான் பறித்துக் கொள்ள முடியாதென்று மறுத்து விடுகிறாள். இறுதியில் அவ்விரு பெண்களும் என்னிடம் மத்யஸ்தத்துக்கு வருகின்றனர். கோவிந்தன் தங்கியிருந்த ஹோட்டலுக்கு இருவரையும் அழைத்துச்செல்கிறேன். அவருடைய ஒவ்வொரு கையிலும் ஒவ்வொருத்தியைப் பிடித்துக் கொடுத்து விட்டு, ''இதுதான் என் முடிவு'' என்று அந்தப் பெண்களிடம் சொல்லி விட்டு, ''உங்கள் திரைக் கதைக்கு மட்டுமின்றி நிஜக் கதைக்கும் இதுதான் முடிவு, மிஸ்டர் கோவிந்தன்!'' என்று அவனிடமும் சொல்கிறேன்.

இந்தக் கதைக்கு ''ஜீவத் திரை'' என்று நான் மகுடமிட்டேன். கதைக் குறிப்பை அமைக்க ஒவ்வொரு நிகழ்ச்சியையும் எப்படிக் காரண - காரியங்களோடு ஆராய்ந்து விரிவாக்கிக் கொண்டு சென்றேனோ, அவ்வாறே முழு நாவல் அமைப்பிலும் செய்திருக்கிறேன். எனவே, இந்தக் கதைக் குறிப்புப் பிறந்த கதை தான், நாவல் பிறந்த கதை என்று நான் கூறியதில் தவறில்லை அல்லவா?

"அந்தச் சிடுமூஞ்சி கடைசியில் என்ன சொல்லிற்று....?" ரமா ஆவலுடன் கணவனை நோக்கினாள்.

"மறுபடியும் மறுபடியும் சொல்ல என்ன இருக்கிறது, ரமா! அவர்தான் கணவன், மனைவி இருவருக்கும் ஒரே ஸ்தாபனத்தில் வேலை தர இயலாது என்று சொல்லி விட்டாரே..."

"தம்பதிகள் ஓரிடத்தில் சேர்ந்து வேலை செய்தால் என்னவாம்? ஒரே ஆபீசில் வேலை செய்வதில்லையா சில பேர்கள். அதுபோல் நாமிருவரும் ஒரே பள்ளியில் இருந்தால் என்ன! சீ சீ... இந்த ஊரும், ஜனங்களும், அவர்கள் கொள்கைகளும்." ரமா ஏமாற்றத்தைக் கோபத்தால் மூடினாள்.

"அடடாடா, என்ன கொல்லை போகிறது அப்படி? இதோ பார், ரமா, நீயும் உத்தியோகம் பார்த்து என்னுக வேண்டும்? எனக்கென்னவோ இந்தப் பெண்கள் சரி நிகராக வேலைக்கு வந்து வீட்டுக்கு உதவாமல் போவதே பிடிக்கவில்லை...."

"ஆமாம்! வேலை பார்த்தால் வீட்டுக்கு உபயோக மற்றவளா? அப்போது ஒரு பட்டிக்காட்டுப் பெண்ணாக — பால் கணக்குக் கூடப் பார்க்கத் தெரியாதவளாகக் கலியாணம் செய்து கொள்வதுதானே? பி. டி. பாஸ் செய்த என்னை..."

# குடும்பச் சிறை

"உன்னைக் காதலித்தேன்.... கலியாணம் செய்து கொண்டேன். என்ன செய்வது. அது என் தவறல்லவே? பெண்ணே! உன்னுடைய..."

"ஆமாம்! ரொம்பக் குழைய வேண்டாம்" ரமா பொய்க் கோபத்துடன் அவன் பிடியிலிருந்து நழுவினாள். ஆனால் வேலை கிடைக்காத ஏமாற்றம் அவள் இதயத்திலிருந்து நழுவவில்லை.

இப்படி வீட்டில் உட்கார்ந்து மூன்று வேளை சமையல் டிபன் என்று செய்யவா அவள் அத்தனை பிடிவாதமாகப் படித்தாள்! பெண் பெரியவளானவுடனேயே படிப்பை நிறுத்தத் துடித்தாள் தாயார்; பி. யூ. ஸி. முடித்ததும் 'படித்தது போதும்' என்றார் தந்தை; ஆனால் ரமாவோ பிடிவாதமாகப் பட்டதாரியாக விரும்பினாள். அதிலும் வெறும் பட்டமல்ல; ஏதாவது ஒரு தொழிலுக்கு உதவும் கல்வியை அவள் தேடினாள். அதற்கேற்றபடி அவள் தேர்ந்தெடுத்தது உபாத்தியாயைத் தொழில் தான். எப்படியோ பெற்றோரிடமும் வாதாடி, ஊரார் வாய்க்கு உலை மூடி விட்டு, ரமா படித்துப் பட்டம் பெற்று விட்டாள்; மிஸ் ரமா. பி. ஏ. பி. டி. ஆனாள். ஆனால் அத்தனை பாடுகளும் வீண்தானா? அன்று பெற்றோரிடம் எதிர்த்து வாதாட இருந்த துணிவு இன்று கணவன் முன் ஏன் உதவில்லை? ரமாவுக்கு அன்று தான் கொண்ட ஆசைகள், அதை அவள் வாதாடி வளர்த்த சம்பவங்கள் நினைவுக்கு வந்தன.

"ரமா! உன்னைக் காலா காலத்தில் ஒருவனிடம் ஒப்படைத்தால்தான் எனக்கு நிம்மதி. ஒரே பெண்; உன்னை மாலையும் கழுத்துமாகப்பார்க்காவிட்டால்..." ஒவ்வொரு சமயம் ரமாவின் தாயார் புலம்புவாள். ஏற்கெனவே இதய பலவீனமுள்ள தாய்க்குப் பெண்ணைப் பற்றிக் கவலை. பெண்ணுக்கோ அடுத்து வரும் பரீட்சை பற்றியே எண்ணம். "நடுத்தரக் குடும்பத்தில் பெண்ணுக்குக் கலியாணம் ஆகாவிட்டால் ஊர் வாய் சும்மா இராது. ரமா! படிக்க வைத்துக் கல்யாணமும் செய்ய நமக்குச் சக்தி ஏது?" பெற்றவளின் கவலைதான் அது.

"அட இதென்னம்மா இது? நான் படித்தால் என்ன? என் படிப்பை மட்டும் மதித்து ஒருவன் கலியாணம் செய்து கொள்ளட்டுமே. நானொரு ஒரே பெண்; பின்னையென்று நினைத்துப் படிக்க வைத்து விடு. நீ சொல்வதுபோல் நடுத்தரக் குடும்பத்தில் கலியாணம் ஆன பெண்ணுக்கும் கஷ்டம்தானம்மா. அதை நிவர்த்திக்கத்தான் இந்தப் படிப்பு." ரமா தன்கட்சியை எடுத்துச் சொல்லத்தவறவில்லை.

"அதென்னடி கஷ்டம்?" என்று தாயார் ஆச்சரியப்பட்டாள்.

"கணவன் மனைவி இருவரும் சம்பாதித்தால் தானம்மா நடுத்தரக் குடும்ப சம்சாரிகள் முழு வயிறு சாப்பிடலாம்."

"ஆமாம், மற்றவர்கள் பட்டினி கிடக்கிறார்களாக்கும்!"

"இல்லாவிட்டால் என்ன? ஒவ்வொரு பைசாவுக்கும் அவள் கணவன் முகம் நோக்க, அவன் ஆபீஸ் பர்ஸை நோக்க, இருவரும் கடன் தருபவனை நோக்க, இதுதானா வாழ்க்கை! குறைந்தபட்சம் பெண்ணொருத்தி தன் செலவுக்கு மட்டுமாவது கணவனைச் சார்ந்து நிற்காது இருக்க வேண்டும்."

"போதும் உன் கொள்கையும் லக்ஷணமும். அரட்டை! இந்த வாயாடித்தனத்தை அடக்கத்தான் ஒருவன் தேவை." தாயும் விடவில்லை; பரிகாசமாகவே அவளை மடக்கினாள்.

"ஆமாம், அதற்காகப் பெண்களுக்குப் படிப்பு வேண்டாம் என்கிறாயா? ஒருவன் வருகிறான் என்றே வைத்துக் கொள். நானைக்குக் கலியாணமானபின் நம் தலையெழுத்து எப்படியோ? அதற்காகவாவது கொஞ்சம் சுயபலம் வேண்டாமா?"

"சீ, மூடு வாயை. அபசகுனக் குழந்தை! படித்த லக்ஷணம் இந்தக் குதர்க்க புத்திதான்

வந்தது!'' தாயார் பதறிப் போய், மேற்கொண்டு மகளின் ஏடாகூடமான பேச்சைக் கேட்காது உள்ளே சென்று விட்டாள். ரமாவின் படிப்புத் தடையின்றி நடந்தது.

ஆனால் கல்வியறிவு ஒருபுறம் வளர்ந்தது போல் ரமாவின் பெண்மை அழகும் வளர்ந்தது; அதற்குரிய ஆசாபாசங்களை அவள் அடக்கினாலும் அது அழிந்து விடவில்லை!

அவளது வைராக்கியப் போர்வையைக் கிழித்தெறிய ஒரு சவாலாகத்தான் வந்தான் சரவணன். ஹானர்ஸ் பாஸ் செய்து விட்டு, ஒருவர் கீழ் கைகட்டிச் சர்க்கார் காரியாலயத்தில் ஓர் இயந்திரமாக உழல விரும்பாமல் சுதந்திரமாக, மனத்துக்கு அமைதி தரும் உபாத்தியாயர் தொழிலை ஏற்க முன் வந்த அவன் ரமாவின் சகமாணவன் ஆனான். அருகில் வரும் காந்தத்தின்மீது தானே பாய்ந்து ஒட்டிக் கொள்ளும் இரும்புத் துண்டு போல, இரும்பு மனம் படைத்த ரமா சரவணன்முன் மனத்தைப் பறிகொடுத்து நின்றாள். தன்னைப்போலவே

ஸ்ரீப்ரியா

சுதந்திரத்துடன் சேவை மனப்பான்மையும் கொண்ட அவனது கொள்கை ரமாவுக்கு பிடித்தது.

இருவர் மனமும் ஒன்றையொன்று அறிந்தன. ஆனால் தன் படிப்புக்காகச் செலவுசெய்த பெற்றோர்களுக்கு ஓர் உதவியும் தான் செய்யாமல், உடனே திருமணச் செலவையும் வைக்க ரமா தயங்கினாள்.

"ரமா! இந்தக் காலத்துப் பிள்ளைகள் சிலரைப் போல் 'கௌரவத்துக்காகப் படித்த பெண் தேவை; பொருளாதாரத்துக்காக அவள் உத்தியோகம் பார்த்தாலும் நல்லது: அத்துடன் பெருமைக்காக அவள் வீட்டார் செய்யும் வரிசைகளும் வேண்டியதுதான்' என்று அடுக்கும் நவயுக வாலிபன் அல்ல நான். உன் சம்மதமிருந்தால் உன் பெற்றோர்கள் சௌகரியத்துக்கு விட்டுக் கொடுக்க என் வீட்டார் தயங்க மாட்டார்கள்'' என்று சரவணன் சொன்னபோது ரமாவின் வைராக்கியமெல்லாம் காற்றில் பறந்தது.

"எனக்காக உன் கல்வியறிவைப் பாழடிக்க வேண்டாம், ரமா! நீ உத்தியோகம் பார்ப்பதில் எனக்கு ஆட்சேபனை இல்லை. நீ கற்றதை நாலு பேருக்குச் சொல்லும்போது உன் அறிவும் விருத்தியடையும். எனக்கு உன் உதவி தேவையில்லை. உன் ஊதியத்தை உனக்கு வேண்டியவர்களுக்கு நீ உதவலாம்.''



சரவணனின் பரந்த மனம் பேசிற்று. ரமாவின் பெண்மை பணிந்து விட்டது.

கெட்டிமேளம் முழங்கியது.

பெரிய நகரமல்லாத சிற்றூரில், படிப்பு வசதி பெற்றவர்களின் முன்னேற்றத்துக்காக ஒரு பெரிய மனிதர் பணமுதலீந்து ஆரம்பித்த மானேஜ்மெண்ட் பள்ளியொன்றில் தன் சேவையைக் குறைந்த ஊதியத்துக்கு அர்ப்பணிக்கச் சரவணன் முன்வந்தபோது ரமா பெருமையுடன் அவனைப் பின்தொடர்ந்தாள். தானும் அவன் சேவையில் பங்கு கொள்வது அவனுக்குக் குறைந்த வருவாய்க்கு ஈடுகட்ட உதவும் என்றும், தன் கையால் சம்பாதிப்பது எத்தனை பெருமை என்றும் அவள் கனவுகள் கண்டாள். ஆனால்...?

"என்ன, ரமா! உனக்கு வேலையில்லை என்று சொன்ன மானேஜர் மீது வேலை பார்க்கும் எனக்கு இன்று காப்பி கூடக் கிடையாதா?"—கணவனின் குரல் கேட்ட பின்தான் ரமா தன் நினைவடைந்தாள். அவள் மனத்தில் நீறுபூத்த நெருப்பாகக் கனிந்த ஆசை வேறொரு வழியில் தலைகாட்டியது.

"என்ன, அடுத்த ஊரில் கூட ஓர் ஆரம்பப் பாடசாலை தொடங்க விருக்கிறார்களாம். அதற்கு ஒரு தலைமை ஆசிரியை தேவையாம். நான் மனுச்செய்தால் என்ன?"—பிற்பகல் தான் கேள்விப்பட்ட செய்தியைத் தன் கணவனிடம் ஆவலுடன் கூறினாள் ரமா.

ஆனால் சரவணன் அவள் எதிர்பார்த்தது போல் உடனே பதிலளிக்கவில்லை. ரமாவின் பிடிவாதம் அவனுக்கே வியப்பாக இருந்தது. "ரமா! நீ முயற்சி செய்வதில் தவறில்லை. ஆனால் உன்னால் தினம்—இந்த உடம்பில்—இங்கிருந்து அலைய முடியுமா? அல்லது குடித்தனத்தைப் பிரிப்பதுதான் அழகா?"

ரமாவுக்கு இந்தக் கேள்விக்குக் காரணமான தன் போக்கு வெட்கமாகத்தான் இருந்தது! ஆனால், கஷ்டப்பட்டுப் படித்தது வீணாவதா? அன்று அவள் வாதாடியதெல்லாம் வெறும் வாய்ப் பேச்சுத்தானா? 'பெண் ஒருவனைச் சார்ந்து அடிமையாக வாழக்கூடாது; தன் காலூன்றி ஒரு 'தனிவி' யாகத்தான் இருக்க வேண்டும்' என்று நினைத்தது கனவுதானா? சரவணன் அன்பானவன்தான்; வேறு தொல்லைகளும் இல்லை. இருப்பினும் ஏதோ ஒரு வேகம். பொங்கி எழும் உற்சாகத்துக்குத் தேக்கம் போட்டதுபோல் ஒரு கொந்தளிப்பு. ரமாவின் ஆவல் தணியவில்லை. ஏன், ஒரு வெறியாகவே கிளம்பியபோது கணவன் மீது கூடக் கோபம் வந்தது. 'இந்த ஆண்களே இப்படித்தான். எல்லாம் வேஷம். முதலில் பெண்கள் சுதந்திரம், உரிமை என்று பேசுவது. பின் அன்பு என்று ஆசை விலங்கிட்டுக் குடும்பச் சிறையில் அடைத்து விடுகிறார்கள்.'

"ரமா! என்ன யோசனை? தலைமை ஆசிரியை ஆகத் திட்டமா? கணவனுடன் கூடி வாழும் குடும்ப நினைவா?" சரவணன் மெல்ல ரமாவின் தலையைக் கோதினான். "ரமா! உனது ஆசைகள்—அதுவும் இந்தச் சமயத்தில் — நிறைவேறாதிருக்கக் கூடாது தான். ஆனால் ஆசைக்கு வரம்பில்லையா?"

ஒரு கணம் ரமா நாணித் தலை குனிந்தாள். ஆனால் அவளுள் அப்போதே ஒரு யோசனை — தன் ஆசையைத் தீர்த்துக் கொள்ள வழி பிறந்து விட்டது. "பக்கத்து ஊர்தானே? நீங்கள் நினைத்தால் நடக்காதா? குடித்தனத்தை அங்கு வைத்துக்கொண்டு நீங்கள் பஸ்ஸிலோ, சைக்கிளிலோ வரலாம். முடிந்த வரை — நிச்சயம் — ஆசையைத் தீர்த்துக் கொள்ளலாமே!"—ரமா கெஞ்சினாள்.

"ரமா"—சரவணன் ஒரு கணம் வியப்பால் வாயசைக்கத் தயங்கினான். "உனக்கு ஏன் இத்தனை ஆசை? உழைத்துச் சம்பாதிக்க உத்வேகமா? கஷ்ட காலத்துக்குத் தேவைப்படலாம் என்று படித்தாய்! இன்று படிப்பு வீணாகிறதே என்று நினைத்து வேலை தேடிக் கஷ்டப்படுகிறாய்!"

"பின் என்ன செய்வது? உங்கள் மானேஜர் தான் இருவரும் ஒரு பள்ளியில் உழைக்கா தீர்கள் என்கிறாரே!" குழந்தைபோல் பேசினாள் ரமா.

சரவணனுக்கு நிஜமாகவே சற்றுக் கோபம் கூட வந்தது. "ரமா! அப்படியானால் ஒன்று செய். நான் வேலையை விட்டுவிட்டு வீட்டைப் பார்த்துக் கொள்கிறேன். நீ உத்தியோகம் பார். நானாக இருந்தால் இப்படி வீட்டிலிருக்கிறேனே என்று வேதனைப் படமாட்டேன். என் சேவையை இன்னும் பரந்த அளவில் செய்வேன்."

"என்ன செய்வீர்களாம்?"

"ஏன், நமக்கு வீட்டிலிருந்தபடி ஏதோ சாப்பிடத் 'தெம்பு' இருக்கிறது. அதனால் நிம்மதியாக ஏழை, முதியோர்களுக்கு எழுத்தறிவூட்டுவேன். சம்பாதித்தால்தான் அறிவுக்கு அழகா?"

"என்னால் அப்படிப் பாடுபட முடியாது!"

"அதுதான் பெண்களின் படித்த கர்வம்!" மேலே பேச விரும்பாதது போல் சரவணன் எழுந்து சென்று விட்டான். ரமா முகத்தில் அடித்தாற்போல உட்கார்ந்து விட்டாள்.

அன்று ரமாவுக்குப் பொழுதே போகவில்லை. சரவணன் பள்ளிப் பிள்ளைகளுடன் மைசூருக்கு உல்லாசப் பயணம் போயிருந்தான். பிரிவின் வேதனையை முதன் முதலாக ரமா உணர்ந்த போது அவளுக்கே வெட்கமாயிருந்தது. இந்த ஒரு வாரம் தனிமையைத் தாங்காதவள்தான் ஆணுக்கொரு ஊராக வசித்து, உத்தியோகமும் பார்க்கத் திட்டமிட்டாள்! 'ரமா, நீ பெண்தான். உன் கல்வியோ, அதன் கர்வமோ உன் இயற்கையை மாற்ற முடியாது. அது மட்டுமா? இன்றைக்கு நீ மனைவி; நாளை தாய்! பின் உன் உலகமெல்லாம் வீட்டுக்குள்தான்; அதை நீயே வரவேற்பாய். அன்று கணவனது அன்புச் சொல் கட்டளையாகப் படாது; அன்பு இல்லம் சிறையாகத் தோன்றாது!'

ரமாவுக்குள்ளிருந்த பெண் உள்ளம் பேசியது. பிரிவு அன்பைப் பெருக்கும் என்று சொன்னவன் அனுபவசாலிதான். கணவனின் வரவை வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள் ரமா. இன்று வராவிடில், திட்டத்தில் மாற்றமிருந்தால் கடிதமாவது, தந்தியாவது வரும். ரமாவின் கண்கள் தெருவை அகல

அளந்தன. அதோ! காக்கி உடைக்காரன்; தபால்சேவகன். கணவனின் கடிதம்; அதிலும் முதல் கடிதம். ரமாவுக்கு இதுவும் ஒரு புது அனுபவம்தான். படபடப்புடன் அவனது வரவை எதிர்பார்த்தாள். அட, தபால்காரன் நேரே அவளைத் தேடித்தான் வருகிறான்.
"ரமா தேவி...தந்தி..."
பரபரப்புடன் கவரை வாங்கினாள் ரமா.
ஐயோ! ரமாவின் தலை சுழன்றது. "சரவணன் ஆபத்து உடனே வரவும்..." மைசூரிலிருந்தே வந்திருந்தது தந்தி!

ரமா சோக சித்திரமாக ஜன்னலருகே அமர்ந்திருந்தாள். இதே இடத்தில் ஒரு மாதம் முன் தாம்பத்யத்தின் தாற்காலிகப் பிரிவைத் தாங்க இயலாது தவித்துக் கொண்டிருந்தாள். அன்றுதான் அவளுக்கு அன்பைப் பற்றி ஞானோதயம் உண்டாயிற்று. ஆனால் இன்று... அவளது மனம் மலரும்போதே வாழ்வு அஸ்தமித்து விட்டது.

"என்ன செய்வது, அம்மா! தலைக்காவிரியில் ஓடும் நீரைக் கண்டதும் குளிப்பதற்கு இறங்கி விட்டார். ஆனால் அங்கு சென்றவர்கள் எல்லாருக்குமா இப்படி ஆகிறது? நமது விதி, ஆற்றின் வெள்ளம் அவரை அமுக்கி விட்டது. நமது பள்ளிக்கு அவரது வாலிப உற்சாகமும் உழைப்பும் பெரும் நஷ்டம். ஆனால் உங்கள் நஷ்டத்தின் முன் நான் அதைக் கூறத் தகுதியற்றவன்." மானேஜர் சங்கர் அவளுக்கு ஆறுதல் கூறத் தெரியாது தவித்தார்.

ரமா விம்மினாள். கணவனைக் காணாத கன்னி வாழ்வு வேறு! ஆனால் கைம்மை வேறு! அவளது நெஞ்சு குமுறியது.
"அம்மா! உங்கள் நிலை இரங்கத் தக்கது. என்னால் இயன்ற உதவி செய்ய நான் தயார். அது போல் அவரது ஸ்தானத்தில் இருந்து ஸ்தாபனத்தை அவர் போலவே தாயாகவும் தாங்கும் சக்தி உங்களுக்கு உண்டு என்பது என் எண்ணம்."
ரமா திடுக்கிட்டுத் தலைநிமிர்ந்தாள். "என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?"
"அம்மா! உடனே நடைபெறும் காரியமல்ல அது. நீங்கள் உங்கள் மனிதர்களுடன் போய்ச் சற்று மனம் தேறுங்கள். ஆனால் எங்கள் ஸ்தாபனம் என்றும் உங்களுக்கு உதவக் கடமைப் பட்டுள்ளது. அவரது இடத்தை உங்களுக்கு..."
"என்னது?" ரமா தேளை மிதித்தாற்போல் துள்ளினாள். ஹூம்! - அவள் முகத்தில் ஏளனமும் கோபமும் மின்னின. அவளது உள்ளக் கொந்தளிப்பின் பிரதிபலிப்போ அது? ஆம்! ரமாவின் இதயத்தில் இச்சொல் ஒரு போராட்டத்தைத்தான் ஏற்படுத்தியது. அவளது இதயக் கொந்தளிப்பில், மறக்க முடியாமல் அவள் வாழ்வில் சொன்ன, கேட்ட சொற்கள் குமிழியிட்டன.
"தானே கலியாணமான பின் ஏதாவது நேரிட்டால் உதவத்தான் படிப்பு, அம்மா!"
"தம்பதிகளுக்குச் சேர்ந்து ஓரிடத்தில் வேலை இல்லை!"
"என் இடத்தை உனக்குக் கொடுத்து விடுகிறேன். நீ வேலை பார்."
"உங்களுக்கு எங்கள் ஸ்தாபனத்தில் இடமுண்டு, அம்மா."
ரமா நினைவுகளை அமுக்குவதுபோல் தலையைப் பிடித்துக் கொண்டாள். ஆனால் அவள் பெண் மனம் அடங்கவில்லை; உள்ளூறக் கதறியது. "இதற்காகவா நான் படித்தேன்? அவர் போய் என் வயிற்றுக்கு வாழ்வு தரவா பட்டம் பெற்றேன்? என் உத்தியோக வெறி இத்தனை கொடியதா; அதுதான் அவரை அழித்ததா? அந்தத் தொல்லை தாங்காமலே அவர் தம் இடத்தை விட்டுக் கொடுத்து விட்டுப் போய் விட்டாரோ? அடி ரமா, உனக்கு வேலை கிடைத்து விடும்; நீ கைநிறைய சம்பாதிப்பாய். உன் ஆசை தீர்ந்ததா? உன் படிப்பு பலன் தருவது கண்டு திருப்தி அடைந்தாயா?....படிப்பு — சம்பாத்தியம்... இந்த எண்ணத்தில் சேவை என்ற லட்சியத்தை மறந்து விட்டாய். ரமா...,இனி நீ சந்தோஷமாக இரு."
ரமாவின் முகம் தன் மனத்தின் குத்தலை தாங்காமல் வேதனையால் கலங்கிக் குமுறியது. மனம் விம்மக் கண்கள் நீர் உகுத்தன.
சங்கர் அவளது மௌன வேதனையை, ஊமைக்குமைச்சலைத் தீர்க்க முடியாது தவித்தார். "அம்மா! நான் சொன்னது தவறானால் மன்னித்து விடுங்கள்."
"ஐயா! நீங்கள் கூறியது அன்றும் இன்றும் சரிதான். ஆனால் என் மனத்துக்குத்தான் அது ஒன்றுமே சரியாகப்படவில்லை."
சங்கர் பீதியுடன் அவளை நோக்கினார். இந்தப் பெண்ணுக்குப் புத்தி பேதலித்து விட்டதா? ஒரு வருஷமாக அவரிடம் வேலைக்குக் காத்துக் கிடந்தவள் இன்று உதறுவது போல் பேசுகிறாளே!

"ஐயா! அன்று இருவரும் இன்பமாக வாழ உத்தியோகம் தேடினேன். 'இல்லை' என்றீர்! இன்று அவரே இல்லையான பின்னர் என் இன்பம் அழிந்து விட்டது. அவரிடத்தில் நான் வாழவா? இல்லை, என் கணவர் நான் உத்தியோகம் பார்ப்பதை விரும்பவில்லை! அவரது ஆசை நான் இலவசமாக ஏழைகளுக்கு வித்யாதானம் செய்ய வேண்டும் என்பதுதான்; அறிவை வளர்த்துச் சேவை செய்ய வேண்டுமே தவிர அவசியம் இருப்பவரின்றி இதரர்கள் வித்தையை வியாபாரமாக்கக் கூடாது என்பதே அவர் கொள்கை. அவரது கடைசி ஆசையை நான் நிராகரிக்க விரும்பவில்லை. எனக்கு அப்படி நடத்தப் போதுமான பணத் 'தெம்பை' அவர் வைத்திருக்கிறார். என்னிலும் தேவையானவர்களுக்கு அவரிடத்தைக் கொடுங்கள்." ரமாவின் குரலில் உறுதியும் முகத்தில் தனி ஒளியும் பரவின.
சங்கர் துயரத்துடன் முகத்தைத் துடைத்துக் கொண்டார். துயரத்தின் எல்லையில் எழும் விரக்தியை அவரால் புரிந்துகொள்ள இயலவில்லை! ஆனால் ரமா கணவனின் வழியைப் பின்பற்றுவது தவறல்லவே?
எதிரேயிருந்த சரவணனின் புகைப்படத்தை நோக்கினார் சங்கர். ஒளி மாறாத புன்சிரிப்பு அந்த முகத்தில் தவழ்ந்தது. 'ரமா என் மனைவி' என்று பூரிப்புடன் கூறி அவளது போக்கை ஆதரிப்பது போல் இருந்தது சரவணனின் தோற்றம் அதிலே.

# வாழ்க மணமக்கள்



ஓய்வுபெற்ற வருமானவரி கமிஷனர் திரு துரைசாமி நாடார் அவர்களின் புதல்வர் திரு மனோகரராஜனுக்கும் சௌ. சுசீலாவுக்கும் திருமணம் உடுமலைப்பேட்டையில் சிறப்பாக நடந்தேறியது.



கர்னான் கம்பெனி காரியதரிசி திரு நாகரத்தினம் புதல்வி சௌ. ஜயலக்ஷ்மி டெலிபோன் பிராந்தியப் போக்குவரத்து அதிகாரி திரு ராமசாமியின் புதல்வர் திரு விசுவநாதனை மணந்தார்.



'ஹிந்து' ஜெனரல் மானேஜரின் காரியதரிசி திரு தியாகராஜனின் புதல்வி சௌ. மதுராம்பாளுக்கும் திரு ராமமூர்த்திக்கும் விவாகம் நடந்தது.



திருச்சி ஆர். எம். எஸ். இன்ஸ்பெக்டர் திரு எம். வேங்கடராமனின் குமாரி சௌ. விஜயலக்ஷ்மிக்கும் திரு சுவாமிநாதனுக்கும் வெகு சிறப்பாக விவாகம் நடந்தேறியது.



வேலூர் கல்கி ஏஜண்ட் திரு எம். ஜி. முனிரத்தினம் அவர்களுக்கும் சௌ. சரோஜாவுக்கும் சமீபத்தில் தோட்டப்பாளையத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.



மதுரை இந்தியன் எக்ஸ்பிரஸ் க்ஷேம நல அதிகாரி திரு நரசிங்கராவின் புதல்வி சௌ. அமிர்தாவுக்கும் திரு கஸ்தூரிரங்கனுக்கும் மதுரையில் கல்யாணம் சிறப்பாக நடந்தேறியது.

# வாழ்க மணமக்கள்



புது டில்லி போக்குவரத்து இலாகா டிவிஷனல் இன்ஜினியர் திரு ராஜ கோபால அய்யங்கார் அவர்களின் புதல்வர் திரு சேஷாத்திரிக்கும் சௌ. பத்மசுந்தரிக்கும் விவாகம் நடைபெற்றது.



பம்பாய் வார்னர் பிரதர்ஸைச் சேர்ந்த திரு ஏ. வி. மகாதேவன் அவர்களின் புதல்வி சௌ. லலிதாவுக்கும் திரு ஹரிஹரனுக்கும் திருமணம் வெகு விமரிசையாக நடந்தேறியது.



'சண்டே டைம்ஸ்' ராமையா அவர்களின் புதல்வி சௌ. பத்மாவுக்கும் ரயில்வே மந்திரி இலாகா திரு சோமசுந்தரத்தின் புதல்வர் திரு சுப்பிரமணியனுக்கும் சென்னையில் திருமணம் நடந்தது.



சுசீந்திரம் திரு சங்கரராம கிருஷ்ணய்யர் அவர்களின் புதல்வி சௌ. சாந்தாவுக்கும் கரூர் சதாசிவய்யர் அவர்களின் புதல்வர் திரு நாகராஜனுக்கும் ஹைதராபாத்தில் விவாகம் நடந்தது.



ஓய்வுபெற்ற புதைபொருள் இலாகா உதவி டைரக்டர் ஜெனரல் திரு டி.என்.ராமச்சந்திரன் அவர்களின் புதல்வர் திரு ராஜாமணிக்கும் சௌ. சுலோசனாவுக்கும் மதுரையில் விவாகம் நடந்தது.



கோவை திரு ரஞ்சித விலாஸ் திரு வைத்தியநாதய்யர் அவர்களின் புதல்வர் திரு வேங்கட கிருஷ்ணன் சௌபாக்கியவதி பங்கஜலக்ஷ்மியை மணந்து கொண்டார்.



நீங்களும்
இவ்வணங்கின்
அழகிய
கேசத்தைப் பெற
விரும்புவீர்கள்!
ஓர் திருப்பம், ஓர் பார்வை—அவளுடைய அழகிய கேசம் உங்கள் மனதில் அழியாத இடம் பெறுகிறது. பிறகு, "இவ்வழகிய கேசம் எனக்கிருந்தால்", என்று நினைக்கிறீர்கள். மிகச் சிறந்த மூலதாரப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட 'கேஷா' அபரிமிதமான அழகிய கேசத்தை உங்களுக்கு அளிப்பதுடன், உங்கள் கேசத்திற்கு முற்றிலும் புதிய அழகிய வனப்பை அளிக்கிறது—நீங்கள் விரும்பும் அழகு உங்களை நாடுகிறது. கேஷாவின் மென்மையான நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.
உங்கள் கேச
பாதுகாப்பு
திட்டத்திற்கு
கேஷா
லோமா தயாரிப்பாளரின்
இன்னும் ஒரு
சிறந்த தயாரிப்பு
பூரண ஏஜெண்டுகள்:
எம். எம். கம்பாத்வாலா
அஹமதாபாத்—1
ஏஜெண்டுகள்:
ஸி. நரோத்தம் & கோ.,
பம்பாய்—2,
TAM
சென்னை ஏஜன்டுகள்: ஜே. பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜன்டுகள்: 41, 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11



# மனமும் மனையும்

வடுவூர் நாராயணன்..

**வா**ழ்நாளில் இதுவரை அவரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டவேயில்லை. முன்பின் பார்த்திராத அவர்களிடம் பேசி ஒரு முடிவைச் செய்யவே நான் புறப்பட்டிருக்கிறேன். ரயில்வே ஸ்டேஷனில் நான்தான் துரைசாமியின் மகன் என்று அவர்கள் எப்படி அறிந்து கொள்வார்கள்? அல்லது நான்தான் அவர்களை எப்படிப் புரிந்துகொள்ளப் போகிறேன்? எதற்கும் என் தந்தை முன்கூட்டியே நான் வரும் செய்தியைத் தந்தி மூலம் அறிவித்து அவர்கள் என்னை ஸ்டேஷனில் சந்திக்க ஏற்பாடும் செய்திருக்கிறார். சுபாவத்திலே கொஞ்சம் சங்கோசியான நான் ஒருவரிடம் சென்று 'நீங்கள்தானே பட்டாபி என்கிறவர்' என்று எப்படிக் கேட்பது?

இறங்கப் போகும் ஸ்டேஷனும் நெருங்கிவிட்டது. கலவரம் உள்ளேயே கலந்து கொடுக்க, உட்கார்ந்திருக்க இருப்புக் கொள்ளாமல் எழுந்து நின்று கொண்டேன். தூரத்தில் பச்சை நிறத்தில் புள்ளி போன்ற ஒன்று தெரிந்தது. ஸ்டேஷன் வெகு சமீபத்தில் வந்துவிட்டது. ஸ்டேஷனில் காத்திருக்கும் கூட்டத்தில் என்னைப் பார்க்கப் பட்டாபி வந்திருப்பாரா? யோசனையோடு ஒவ்வொரு சாமானாக எடுத்துப் பைக்குள் திணிப்பதும் ஸ்டேஷன் வருவதும் சரியாக இருந்தது.

பிளாட்பாரத்தில் இறங்கி நின்று புதுமையான ஒன்றைத் திகைப்புடன் பார்ப்பது போல் நான்குபுறமும் நோக்கித் திருதிருவென்று விழித்துக் கொண்டிருக்கும் வேளையில் 'மிஸ்டர்' என்று எவரோ பின்னாலிருந்து அழைத்தார். அவர் இயற்கையாகவே சிரித்துக்கொண்டு, "நீங்கள்தானே கோவிந்தன்?" என்றார். நான் வாயடைத்து நின்றேன். "உங்கள் தந்தை தந்தி கொடுத்திருந்தார். அழைத்துப் போக வந்திருக்கிறேன்."

"நீங்கள்தான் பட்டாபி என்கிறவரா?" என்று நான் ஒருவாறு சமாளித்துக் கொண்டு கேட்டேன்.

"ஆமாம்."

"என்னை எப்படிக் குறிப்பாகத் தெரிந்து கொண்டு என்னிடம் வந்தீர்கள்?"

"குழந்தையில் உங்களைத் தூக்கி யிருக்கிறேன். அந்தச் சாயல் மாறவில்லை."

"போகலாமா?"

"ஆகா!"

அவருடைய பக்கத்தில் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடுத்தர வயதுடைய ஒருவனும் வந்திருந்தான். ஸ்டேஷனுக்கு வெளியே வந்ததும், அவர் சைக்கிளைப் பெற்றுக் கொண்டு, "இவன் என்னுடைய மூன்றாவது பையன். உங்களை இவன் அழைத்துக் கொண்டு போவான். நான் காரியாலயம் போய்விட்டு வருகிறேன்.—முரளி, அழைத்துக்கொண்டு போடா" என்றார்.

அவர் சைக்கிளில் ஏறிக்கொண்டு போய் விட்டார். நான் வந்த காரியத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையே! ஜாடையாகவாவது ஒரு வார்த்தை சொல்லவில்லை! 'என்ன மனிதர் இவர்? உள்ளே கோபம் பொங்க, அவன் காட்டியவழியில் நடந்தேன்.

வீட்டைப் பார்க்கும்போது என்னுள் பெருமிதம் பொங்கி வழிந்தது. எங்களுக்குச் சொந்தமான வீட்டில் முதல் தடவையாகக் காலடி வைக்கும்போது பேரானந்தம் ஏற்படாமல் எப்படி இருக்க முடியும்? ஆனால் கூடவே இதை விற்க ஏற்பாடுகளைச் செய்ய வந்திருக்கும்போது வருத்தமும் ஏற்பட்டது.

எனக்காக முன் அறையை ஒழித்து வைத்திருந்தார்கள். பெட்டி படுக்கைகளை வைத்து விட்டு வீடு முழுதும் கண்ணோட்டம் விட்டேன். பின் கட்டில் ஒரு குடித்தனம் இருப்பது தெரிந்தது.

இரும்ப என் அறைக்குள் நுழைந்தபோது எனக்காகக் காப்பி தயாராக மேஜையின் மீது வைக்கப்பட்டிருந்தது. உள்ளே உட்கார்ந்திருந்த என்னை ஒவ்வொரு குழந்தையாக வந்து நிலைப்படியில் நின்று பார்த்தவாறு இருந்தனர். ஒரு குழந்தை தைரியமாக எனக்கும் அழகு காட்டி உள்ளே ஓடி விட்டது. கிட்டத்தட்ட பட்டாபியின் மூக ஜாடையில் எல்லாமே இருந்தன. பாவம்; பெரிய குடும்பஸ்தர் போலிருக்கிறது!

குளித்தும் ஆயிற்று; சாப்பாடும் வந்தது. ஓர் எவர்ஸில்வர் தட்டில் மூடியபடியே கொண்டு வந்த அவளைக் கண்டதும் ஒரு கணம் வியப்பாக இருந்தது. காலையிலிருந்து இது



வரையில் இப்படி ஒருத்தி இருப்பதாகத் தெரியவில்லை!

"உங்களுக்கு ஏதாவது வேண்டுமானால் முரளியைக் கூப்பிட்டுச் சொல்லுங்கள்." சர்வ சகஜமாகச் சொல்லி அவள் வெளியே போய் விட்டாள்.

நான் சாப்பிட உட்கார்ந்தேன். ஜன்னல் வழியாகச் சிறிய குடையைப் பிரித்துக் கொண்டு அவள் வெளியே செல்வது தெரிந்தது. எங்கே போகிறாள்? அர்த்தமில்லாத கேள்வி? எனக்கு ஏன் இந்தக் கவலையெல்லாம்! வந்த வேலையைப் பார்க்க வேண்டாமா?

எத்தனை நாழிகைதான் இப்படியே உட்கார்ந்திருப்பது? பேச்சுத் துணைக்கு கூட ஒருவருமில்லை!

"முரளி!"

"ஏன் ஸார்!"

"ஏதாவது பேப்பர் கொண்டு வாயேன்."

"சரி, ஸார்!"

அவன் வெளியே போனான். நான் வராந்தாவுக்கு வந்து நின்று கொண்டேன். வெளியே வெய்யில் கடுமையாகக் காய்ந்து கொண்டிருந்தது. சட்டையைக் கழற்றிப் பனியனோடு வந்து நின்று கொண்டிருந்த என்னைக் கண்டதும் வெளியே திண்ணையில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் உள்ளே ஓடிவிட்டன. மனித உருவில்தான் நான் இருக்கிறேன். என்னிடம் ஏன் இந்த பயம்? நான் என்ன செய்து விடப் போகிறேன்?

"பேப்பர் கிடைக்கவில்லை ஸார்!"

முரளி திரும்பி வந்து சொன்ன பதில் இது!

"ஏன், உங்கள் வீட்டில்பேப்பர் வரவழைப்பதில்லையா?"

"ஊஹூம்!"

முரளி உள்ளே புகுந்து கொண்டான். தெரிந்த முகம் ஏதாவது இருந்தால் பேசலாம்! இங்கு எவருடன் பேசுவது? பட்டாபியாவது வந்தால் வந்த வேலையைத் தொடங்கலாம்.

மறுபடியும் உள்ளே வந்து கட்டிலில் படுத்தேன். "எழுந்திருங்கள். மணி ஐந்து!"

சுகமான தூக்கத்தில் ஊறிப் போயிருக்கும் இமைகள் திறக்க மறுத்தன. புரண்டு படுத்துக் கொண்டேன்.

"இரண்டாம் தரம்கூடச் சாப்பிடவில்லையாமே, காப்பி ஆறிப் போகிறது!"

மெதுவாக ஒரு கண்ணை மட்டும் திறந்து பார்த்தேன். எதிரே அவள்தான் நின்று கொண்டிருந்தாள். கூச்சத்துடன் எழுந்து உட்கார்ந்தேன்.

"அதோ, காப்பி...."

"முகம் கழுவத் தண்ணீர் வேண்டும்."

அவள் தண்ணீர் கொண்டு வருவதற்குள் கிராப்பைச் சரி செய்து கொண்டு உட்கார்ந்தேன். நீர் நிறைந்த செம்பைக் கீழே வைத்து விட்டு ஒதுங்கி நின்று கொண்டாள்.

"நீங்கள் பேப்பர் கேட்டீர்களாமே!" நான் முகம் கழுவிக்கொண்டிருந்த பொழுது கேட்டாள் அவள்.

"ஆமாம்!"

"அதை வரவழைத்துப் படிக்கும் நிலையில் நாங்கள் இல்லை....நானும் எனது தந்தையுமாகச் சேர்ந்து சம்பாதிப்பதே வாய்க்கும்

கைக்குமாக இருக்கும்போது இதற்கெல்லாம் பணம் எப்படிக் கிடைக்கும்?''
'' நீங்கள்....''
'' நான் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியை யாக வேலை பார்க்கிறேன். பெயர் நிர்மலா.''
'' உங்களுக்கு நிறையச் சகோதரர்கள் இருந்தும் என்னிடம் பேச ஒருவர்கூட உள்ளே வரவில்லையே? ஏன்?''
'' உங்களிடம் இருக்கும் பயம்தான்!''
'' அப்படியா!''
'' ஊம்க்கும்!''
'' நான் உங்கள் பள்ளிக்கூடத்தைப் பார்க்கலாமா?''
'' தாராளமாக. காப்பி...''
நான் மேஜைமீது இருந்த பாத்திரத்தை எடுத்துக் கொண்டு உட்கார்ந்தேன். நிர்மலா

வின் சகஜமான பேச்சு எனக்கு வியப் பைத் தரவில்லை. என்றாலும் ஓர் அவாதியான எண்ணச் சுழலை உள்ளே சுழித்தது.
'' அழுக்குத் துணி இருந்தால் எடுத்து வையுங்கள். எங்கள் துணிக ளோடு...''
'' வேண்டாம் அந்தச் சிரமம். வீட்டுக்குரியவன் என்பதற்காக அள வுக்கு மீறிய மரியாதை காட்டு கிறீர்கள்!'' என்று சொன்னேன்.
'' அதெல்லாமில்லை! இன்றைக்கோ நாளைக்கோ என்று பயத்தில்...''
'' ஏன் நிறுத்தி விட்டீர்கள்?''
'' ஒன்றுமில்லை...'' என்று சொல் லிக் கொண்டே சுவரில் மாட்டி யிருந்த என் சட்டையைக் கழற்றி அதிலிருந்த மணி பர்ஸையும் எடுத்து மேஜை மீது வைத்துவிட்டுச் சுருட் டிக் கொண்டு வெளியே சென்றாள்.
மறு நாள் காலை! பட்டாபி என் னுடைய அறைக்குள் வந்தார்!
'' நேற்று முதல் உங்களிடம் பேச முடியவில்லை. தவறாக நினைக்க வேண்டாம்'' என்றார் அவர் பீடிகை யுடன்.
அவருடைய முகத்தில் தேங்கி நின்ற ஏக்கச் சாயல்தெளிவாகத் தெரிந்தது.
'' அவரைச் சந்தித்தீர்களா?''
'' இல்லை! சொல்லியனுப்பி யிருக்கிறேன். வருவார்!''
அவருடைய குரல் நடுங்குவது தெரிந்தது. இந்த வீடு விற்கப்பட்டு விட்டால்...இந்த எண்ணமே அவருடைய முகத்தின் களையைக் குறைக்கிறதோ?
'' பட்டாபி!''
வெளியிலிருந்து எவரோ அவரை அழைக் கிறார். நான் முக்கியமான பேச்சைத் தொடங் கும்போது அவர் வெளியே போக நேரிடு கிறது. தர்மசங்கடமான நடுநிலையிலிருந்து இருவருமே தப்பினோம்!
கடைத் தெருவைச் சுற்றி வரக் கிளம்பி யிருந்தேன். ஒவ்வொரு கடையாகப் பார்த் துக் கொண்டு வரும்போது ஒரு கடையில் நீண்ட 'க்யூ' தெரிந்தது. அதில் முரளி நின்று கொண்டிருப்பதும் தெரிந்தது. கையிலிருந்த

பை நிறைய அரிசியை வாங்கி விட்டுச் சில்ல றைக்காகச் சட்டைப் பையைத் துழாவின வன் துழாவிக் கொண்டே யிருந்தான். அதிர்ச்சியில் குன்றிப்போய்ப் பையிலிருந்த அரிசியைக் கடைக்காரனிடம் கொடுக்கப் போனான். என்னால் இதைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை.
'' முரளி! எவ்வளவு வேண்டும்?'' என் றேன். அந்த நிலையில் என்னைக் கண்ட அவன் திகைப்பில் கல்லாகச் சமைந்து நின்றான்.
'' எவ்வளவு வேணும்?''
'' இரண்டேகால் ரூபாய்!''
நான் பணத்தைக் கொடுத்து விட்டு அவனையும்அழைத்துக் கொண்டேன்.



'' பணம் கொண்டு வர வில்லையா முரளி?''
'' கொண்டு வந்தேன்.''
'' எங்கே?''
'' கீழே விழுந்திருக்க வேண்டும், சார்! உங் களுக்கு மிக்க நன்றி சார்!'' திடீரென்று அவன் தன் கண்களைத் துடைத்துக் கொண் டான். என் மனம் நெகிழ்ந்து கொடுத்தது. பையைத் தூக்க முடியாமல் அடிக்கடி அவன் கைகளை மாற்றிக் கொள்வதைப் பார்த்ததும், '' அதை என்னிடம் கொடு! நானும் எடுத்துக் கொண்டு வருகிறேன்'' என்றேன்.
'' வேண்டாம் சார்! அக்கா பார்த்தால் என்னைக் கோபிப்பாள்!''
'' பரவாயில்லை, கொடு! நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றேன்.



கும்பகோணம் அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார் அவர்களால் திருச்சி ஸ்ரீ நன்றுடையான் விநாயகர் கோயிலில் 19-5-61முதல் 11-6-61முடிய ஸ்ரீமத் வால்மீகி ராமாயணப் பிரவசனம் நிகழ்த்தப்பட்டது. ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தில் அடங்கியுள்ள ஒப்பற்ற தர்மங்களையும், கருத்துக்களையும் வேதங்கள், திருக்குறள், கம்ப ராமாயணம் இவற்றிலிருந்து மேற்கோள்களுடன் விளக்கிக் கூறினார். ஸ்ரீமத் ராமபட்டாபிஷேக விழாவன்று ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் பிரசாதத்துடன் ஆசீர்வதித்து அளித்த பொன்னாடையை ஸ்ரீ தாத்தாச்சாரியாருக்குப் போர்த்திப் பாராட்டினர்.

---

நான் அவன் கையிலிருந்து பையை வாங்கிக் கொண்டேன். அவனுடைய அக்கா நான் அரிசியைக் கொண்டு வருவதைப் பார்க்க வேண்டும் என்று என்னுள்ளே ஓர் ஆசை எழுந்தது. அவள் பார்ப்பதால் என்ன ஆகி விடப் போகிறது என்று தோன்றினாலும், ஒரு சபலம் உள்ளூறப் பரவி நின்றது.

வாசலில் அவள் நின்று கொண்டிருந்தாள். எங்கள் இருவரையும் பார்த்து விட்டாள். இதில் எனக்கு ஒரு திருப்தி.

"ஏண்டா முரளி! என்னடா இதெல்லாம்?" செயற்கையான கோபமில்லை என்பது நன்றாகத் தெரிந்தது முகஜாடையில்!

"இல்லையக்கா! இவர்தான் பிடிவாதமாக வாங்கிக் கொண்டு விட்டார்" என்று அவன் கலங்கிய கண்களோடு அவள் எதிரே போகத் தயங்கி நின்றான்.

"நான்தான் வாங்கிக் கொண்டேன்." நான் சமாதானப்படுத்த முயன்றேன்.

"உங்களுக்கு ஏன் இந்தச் சிரமம்?" என்று சொல்லிக் கொண்டே பையை வாங்கிக் கொண்டாள். உள்ளே நுழையும்பொழுது பொங்கி வழிந்த பெருமிதம் சிரிப்பின் கோடாக ஒளியிட்டதை நான் கவனிக்கத் தவறவில்லை.

என் நிலையை நினைத்துப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தபொழுது இந்தச் செய்கை எனக்கே விசித்திரமாகப் பட்டது. வீட்டிலே எந்தச் சாமானையும் தூக்கியறியாதவன் இங்கே எப்படி முன்வந்து செய்கிறேன். மனத்தின் போக்கு எந்தச் சமயத்தில் எப்படி இருக்கும் என்று நிதானிக்க முடியவேயில்லை!

விளையாட்டுப்போல் இரண்டு நாட்கள் ஓடிவிட்டன. அன்றுதான் நான் யாரிடம் விட்டை விலைபேச முடிவு செய்திருந்தேனோ, அவரும் வந்தார். நீண்டநேரம் வரை பேசி விட்டு அவர் மறுநாள் வருவதாகச் சொல்லிச் சென்றார். அன்று முழுதும் ஒருவராவது என் அறைக்குள் வரவில்லை! சாப்பாடு கூடப் பட்டாபியேதான் கொண்டு வந்தார்.

"நீங்கள் ஏன் சிரமப்படுகிறீர்கள்?" சம்பிரதாயமாக நான் கேட்டுவைத்தேன். நிர்மலா வரக் கூடாதா என்று எப்படி வெளிப்படையாகக் கேட்பது? நான் யார்? அவள் யாரோ? ஓரிருநாளைய பழக்கத்தில் எனக்கு வேண்டிய வைகளை யெல்லாம் அவள் தான் செய்ய வேண்டும் என்று எப்படி நான் கற்பனை செய்ய முடியும்?

ஆயிரம் ஆண்டுகள் புலன்களை அடக்கித் தவம்செய்த மாமுனிவர்கள் வாழ்ந்த நாட்டில் பிறந்து விட்டு ஒரு பன்னிரண்டு மணி நேரம் பொறுத்திருக்க முடியாமலா போய்விடும், பார்க்கலாம்.

* * *

மறுநாள் காலையும் அவள் வரவில்லை! என்ன செய்வது! காலை பத்துமணி வரையில் உட்கார்ந்திருந்து பார்த்தேன். அடைபட்டிருப்பதைவிட இப்படி வெளியே போகலாம் என்று தோன்றியது. வெய்யில் கூடக் குறைவாகத்தான் இருந்தது.

நடந்து கொண்டிருந்தேன். கடைத்தெரு தாண்டிப் புகைப்பட ஸ்டுடியோவின் வாசலில் ஒரு பிரும்மாண்டமான வீதி சென்றது. அதன் வழியே நானும் சென்றேன். ஒரு சிறிய குளத்தை யொட்டி அந்த வீதி முடிவடைந்தது. அதன் கரையில் உயர்நிலைப் பள்ளி என்ற அறிவிப்புப் பலகையும் தெரிந்தது.

நிர்மலா வேலை பார்ப்பதாகச் சொல்லியிருந்த பள்ளிக்கூடம் இதுதான் போலிருக்கிறது. உள்ளே சென்று பார்த்தால் என்னவென்று தோன்றியது. முக்கிய வாசலின் எதிரேதான் தலைமையாசிரியரின் அறையும் இருந்தது. புதிதாக இருந்த என்னைக் கண்டதும் அவர் "யாரைப் பார்க்க வேண்டும்?" என்றுகேட்டார்.

"மிஸ் நிர்மலாவை!" என்றேன் நான்.

"உட்காருங்கள்" என்று சொல்லிவிட்டு ஒரு பியூனிடம் ஒரு குறிப்புச் சீட்டை அனுப்பினார். அதற்குள் ஆசிரியர்களின் ஓய்வு பெறும் அறையிலிருந்து ஐந்தாறு பேர்கள் என்னை வந்து பார்த்துவிட்டுச் சென்றார்கள். என்னிடம் என்ன விந்தையை அவர்கள் கண்டார்களோ?

அதோ நிர்மலாவும் வந்து விட்டாள். அவள் முகமே வியர்த்திருந்தது. பீதியின்



கேரள மகாகவி திரு சங்கர குருப் அவர்கள் ஜூலை 9ந் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று ஹோட்டல் தாசப்பிரகாஷில் நாமக்கல் கவிஞர் திரு வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களது தலைமையில் பாராட்டிக் கௌரவிக்கப்பட்டார். இந்த வைபவத்துக்குச் சென்னையிலுள்ள மலையாள, தமிழ் எழுத்தாளர்கள் வந்திருந்தனர். ராஜாஜி அவர்கள் கேரள மகாகவிக்குக் கதர்ப் பட்டுச் சால்வையை வழங்கியதோடு, கவிகளின் சிறப்பையும் எடுத்துரைத்தார்.

---

சாயல் நன்றாகத் தெரிந்தது. மரியாதையாகக் கரம் குவித்தாள். நானும் கரம் குவித்தேன்.

"வாருங்கள்!"

என்னைத் தனியே அழைத்துச் சென்று, "இங்கே ஏன் வந்தீர்கள்?" என்றாள்.

"ஏன் வரக்கூடாதா? நீங்கள்தான் வர லாம் என்று சொன்னீர்களே!"

"அதற்குச் சொல்லவில்லை. இருந்தாலும் இருவரையும் சேர்த்துப் பார்க்கும் யாராவது எதையாவது கட்டிவிட்டால்?"

"பண்புக்கு மனம்தானே வேலி? உங்களி டம் வீடு விஷயமாகப் பேச நினைத்தேன்."

"அதை அப்பாவிடம் பேசலாமே?"

"அவர் என்னிடம் பேசவே தயங்குகிறார்."

"அதற்காக...."

"நான் வீட்டை விற்பதால் உங்களுக்குக் கஷ்டமாக இருக்குமா?"

"இந்தக் கேள்வி உங்களுக்கே வேடிக்கை யாக இல்லையா!"

"ஏன்?"

"ஏனா? நீங்கள் விற்றுவிட்டால் எங்கள் குடும்பத்தை நாளைக்கே காலி செய்யச் சொல்லலாம். குறைந்த வாடகையில் இத் தனை காலம் இருந்துவிட்டு இனி புதிய வீட் டைத் தேடி நாங்கள் திண்டாட முடியுமா?" என்றாள் நிர்மலா கண்கலங்க.

"வாஸ்தவம்தான்."

"இந்தக் காலத்தில் வீடு கிடைப்பது சிரம சாத்தியமான காரியமாயிற்றே?"

"நான் செய்ய இதில் என்ன இருக்கிறது?"

"அப்பொழுது என்னை ஏன் கேட்க வேண்டும்?"

"அவசரப்படுகிறீர்களே! எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அதன்படி நீங்கள் செய்தால்..."

"செய்யத்தக்கதானால்...."

"இந்த வீடு காலியானாலும் ஆகட்டும், உங்க ளுக்கு வேறு ஒரு வீடு தருகிறேன்."

"முடியுமா, எங்கே?"

"கொடுத்தால் வரத் தயார்தானே?"

"........"

"என் மனைவீட்டிலே நீங்கள் புகுந்து விடுங்கள்!"

நிர்மலா டக்கென்று எழுந்திருந்தாள். திடீ ரென அவளுடைய கண்களில் நீர் துளிந்து நின்றதைக் கண்டேன்.

"நிஜமாகவா?" என்று தடுமாறியபடியே அவள் கேட்டதற்கு நான் தலையசைத்தேன். நன்றிப் பார்வை பொங்க அவள் சிலையாக நின்றாள். நான் வீட்டின் தஸ்தாவேஜுகளை அவள் கையில் வைத்து விட்டுப் புறப்பட் டேன். இனி எங்கள் இருவரையும் சேர்த்துப் பார்க்கும் எவரும் எதைச் சொன்னால் என்ன? ஒரு முடிவு என்னவோ செய்தாகிவிட்டது. என் தந்தையும் இந்த முடிவை நிச்சயம் மறுக் கப்போவதில்லை. அப்புறம் எவருக்குப் பயப் பட வேண்டும்?

நினைத்தாலே வேடிக்கையாக இருக்கிறது. சொந்த வீட்டைப் பைசல் செய்ய வந் தவன் மனைவீட்டிலே ஒருத்திக்கு நிரந்தர மான இடம் கொடுத்ததல்லாமல் அந்த வீட்டையும்.... சரிதானா?



என்னால் எதுவுமே செய்யமுடியவில்லை. வகுப்புநேரங்களில்கூட அடிக்கடி கோபம் வந்துகொண்டிருந்தது.
அனந்த் அதைக் கவனித்துவிட்டுச் சொன்னான். தினமும் இரண்டு வேளை போர்ன்-வீடா அருந்தினால், பழைய நிலை வந்துவிடும் என்று.
அவனுடைய டாக்டரும் அதையேதான் சொன்னாராம். நானும் அதைக் கடைப்பிடித்தேன். விரைவில் குணமடைந்தேன்.
இப்பொழுது பழைய சக்தி வந்தது மட்டுமல்ல—ஐம்பது பேர்கொண்ட வகுப்பையும் எளிதாக சமாளிக்க முடிகிறது.
எல்லாம் போர்ன்-வீடா தந்த சக்தி.
Cadbury's
BOURN-VITA
THE IDEAL FOOD DRINK
MADE BY CADBURYS SPECIALISTS IN FOOD DRINKS FOR 100 YEARS
நான்
ஊக்கத்துடனும்,
உற்சாகத்துடனும்
என் வேலையைச்
செய்வதற்கு
சக்தியளித்தது
Cadbury's
BOURN-VITA
சக்திக்கும் வலிமைக்கும்



# திருமூலர் தவமொழி

**ராஜாஜி - சோமு**

16

உடம்பின் நிலையாமையைத் தெளிவோடு விளக்கிய முனிவர் உடம்புக்கும் உயிருக்கும் உள்ள உறவினுடைய தன்மையை இனி விளக்குகிறார்.

**ஐவர்க்கு ஒருசெய்**
**விளைந்து கிடந்தது**

[செய்—வயல், நன்செய் புன்செய் என்று சொல்லப்படுவது. ஐவர்க்கு—ஐந்து பேருக்கு, ஐந்து புலன்களை ஐந்து குடியானவர்களாக வைத்துப் பாடுகிறார். ஒரு செய்—ஒரு வயல். விளைந்து கிடந்தது—விளைப் பயனானது வயலில் விளையும் பயிரைப்போல் விளைந்து கிடந்தது. வயல் என்பது உடலை எடுத்த ஜன்மம்; க்ஷேத்திரம்.]

**ஐவர்க்கு ஒருசெய்**
**விளைந்து கிடந்தது.**
**ஐவரும் அச்செய்யைக்**
**காத்து வருவார்கள் ;**

மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற ஐந்து பேருக்கும் பொதுவாக உடம்பு என்னும் வயலில் பயிர் விளைந்து கிடந்தது. அதை இந்த ஐவரும் காத்து வருகிறார்கள்.

**ஐவர்க்கு நாயகன்**
**ஓலை வருதலால்**
**ஐவரும் அச்செய்யைக்**
**காவல் விட்டாரே !**

இந்த ஐந்து பேருக்கும் தலைவனிடமிருந்து உத்தரவு வரும்; அதாவது மரண காலம்! அப்போது ஐவரும் தாங்கள் காத்து வந்த வயலை விட்டு ஓட வேண்டியதாகும்!

உடம்புக்குள் உயிர் நிற்பது நிலையான சம்பந்தமில்லை. ஓலை வரும் வரைதான் இந்த ஐம்புலக் காவல்—பட்டா!

**ஐவர்க்கு ஒருசெய்**
**விளைந்து கிடந்தது.**
**ஐவரும் அச்செய்யைக்**
**காத்து வருவார்கள் ;**
**ஐவர்க்கு நாயகன்**
**ஓலை வருதலால்**
**ஐவரும் அச்செய்யைக்**
**காவல்விட் டாரே !**

இவ்வளவு நிலையற்ற முறையிலே உடம்பில் உயிரின் தொடர்பு அமைந்திருக்கிறது! ஆகையால் இந்தக் கொஞ்ச காலத்துக்குள் செய்ய வேண்டிய நல்லறங்களைச் செய்து கடைத்தேற வேண்டும் என்கிறார் திருமூலர்.

**அவ்வியம் பேசி**
**அறம்கெட நில்லன்மின்**

[அவ்வியம்—வஞ்சனை. அறம்கெட—தருமத்தைப் புறக்கணித்து. நில்லன்மின்—நிற்காதீர்கள். அதாவது தருமத்துக்கு விரோதமாக வாழ்க்கை நடத்தாதீர்கள்.]

**அவ்வியம் பேசி**
**அறம்கெட நில்லன்மின்**
**வெவ்விய னாகிப்**
**பிறர்பொருள் வவ்வன்மின்**

[வெவ்வியனாகி—தீய எண்ணத்துக்கு இடம் கொடுத்தவர்களாகி. பிறர்



டைரக்டரேட் ஜெனரல் ஆப் சப்ளைஸ் அன்டு டிஸ் போஸல்ஸிலிருந்து ஓய்வுபெற்ற ஸ்ரீ பி. கே. சுப்பிர மணியனின் குமாரி செல்வி பட்டு என்கிற ஜானகிக் கும் போபாலே, ரயில்வே கிடங்கு தலைமை ஆசிரியர் அவர்களின் குமாரரும், மதுரை ஸ்ரீ தியாகராஜர் எஞ்சினியரிங் கல்லூரி உதவிப் பேராசிரியருமான செல்வன் M.V. ராமமூர்த்தி B. E. (Hons) Msc. (Engg.) M. S. (Cornell N. Y., U. S. A.) M. I. A. H R.,க்கும் கல்யாணம் வெகு விமரிசையாய் நடைபெற்றது.



கோவை பர்மாஷெல் ஏஜண்ட் ஏ. கிருஷ்ணசாமி செட்டியார் குமா ரனும் டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் பேரனுமான திரு ஏ. கே. பாலஷண்முகத்திற்கும் திருவனந்தபுரம் எஸ். நடராஜ செட்டியார் குமாரத்தி திருமதி நிர்மலாவுக்கும் 26-6-61-ந் தேதி திருமணம் வெகு விமரிசையாகக் கோவையில் நடைபெற்றது.

பொருள்—பிறருடைய உடைமைகளை. வவ்வன்மின்—அபகரிக்காதீர்கள்.]

செவ்விய ராகிச்
சிறந்து—

[செவ்வியராகி — நல் வழிப்பட்டு. சிறந்து — வாழ்க்கைச் சிறப்புக்கள் அடைந்து.]

—உண்ணும் போதொரு
தவ்விக்கொடு உண்மின்
தலைப்பட்ட போதே

[உண்ணும்போது — நீங்கள் சாப் பிடும்போது. ஒரு தவ்விக்கொடு—ஒரு அகப்பையாவது கொடுத்து. உண் மின் — சாப்பிடுங்கள். தலைப்பட்ட போதே—உண்ணுவதற்கு உட்காரும் போதே. ஒரு கவளமாவது பிறருக்குக் கொடுத்துவிட்டு உண்ணுங்கள்.]

ஈகை என்ற குணத்தை வளர்த்துக் கொள்வதற்கு ஒரு வழி, சாப்பிடும் போது முகவில் ஒரு கவளமாவது பிற ருக்குக் கொடுத்து விட்டுச் சாப்பிட வேண்டும். ஏழை எளியவருக்கோ, அல்லது அதற்காகக் காத்திருக்கும் காகத்துக்கோ அல்லது வேறு ஜீவ னுக்கோ இட்டுவிட்டுப் பிறகுதான் சாப்பிடுவது என்னும் அனுஷ்டா னத்தை உபதேசிக்கிறார் முனிவர். ஈகை என்ற மனப்பான்மை வளர்வ தற்கும் பிறர் பொருளை மனம் நாடா மல் இருப்பதற்கும் இது ஒரு முறை. மற்ற நற்குணங்களுக்கெல்லாம் அடிப் படை ஈகையில் கலந்து நிற்கும் கருணை யேயாகும். இந்தக் கருணையே உள் ளத்தைக் கனியச் செய்கிறது. மனிதப் பண்பைப் பூரணமாக்குகிறது.

அவ்வியம் பேசி
அறம்கெட நில்லன்மின்
வெவ்விய ராகிப்
பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய ராகிச்
சிறந்துண்ணும் போதொரு
தவ்விக்கொ டுண்மின்
தலைப்பட்ட போதே!

நீ அனுபவிப்பதற்கு முன்னதாகவே பிற உயிர்களை நினைவுக்குக் கொண்டு வந்து ஓரளவாவது கொடுத்து விட்டுப் பிறகு உன் பொருளை அனுபவிப்பா யாக என்பதை அழுத்தமாகக் குறிக்க 'ஏ'காரத்தோடு முடிகிறது பாட்டு!



# அஞ்சறைப் பெட்டி





"எந்தத் தீமைகளை நிவர்த்தி செய்வதாக ஏகாதிபத்தியம் பறைசாற்றுகிறதோ, அந்தத் தீமைகளுள் ஏகாதிபத்தியத்தைக் காட்டிலும் மோசமானது வேறு எதுவுமே இல்லை!" என்றார் ஆல்பர்ட் கேமஸ்.

ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதில் முதலிடம் பெறும் அமெரிக்கர்கள் தங்கள் ஜனநாயகத்தின் ஜனாதிபதிப் பதவிக்குப் போட்டியிட்ட ஐஸன்ஹோவரை இரண்டே மாதங்களில் 51,376 மைல் பிரயாணம் செய்ய வைத்தார்கள்! 45 ராஜ்யங்களில் 232 இடங்களில் தோன்றி அவர் பேசினார்.

இரண்டாம் உலக யுத்தத்தின் வெற்றியில் ஐஸன்ஹோவருக்குப் பெரும் பங்கு உண்டு. ஒரு சமயம் ராணுவத்தினர் தங்கள் குடும்பத்துடன் அவர் பேசுவதைக் கேட்கக் கூடியிருந்தபோது ஐஸன்ஹோவர் கூறினார்:

"நான் ஒரு சாதாரண சிப்பாயாக இருந்த காலத்தில் இரு காப்டன்கள் பேசிக் கொண்டு போவது காதில் விழுந்தது. ஒருவர் கேட்டார்: 'இன்று இரவு சீட்டாடலாமே?' என்று. 'ஆடலாம்; என் மனைவிக்கு ஆட்சேபணை இல்லை என்றால்...' என்று பதிலளித்தார் மற்றவர். முதலில் பேசிய காப்டன் கேலியாகச் சிரித்தார்: 'மனைவிக்கு இப்படி நடுங்குகிறீரே! நீர் என்ன மனிதன்தானா? அல்லது கண்டெலியா?' 'பளிச்' சென்று இதற்குப் பதிலளித்தார் இரண்டாவது காப்டன்: 'நிச்சயமாக நான் கண்டெலியல்ல; மனிதன்தான் சந்தேகமே வேண்டாம். ஏனென்றால் கண்டெலியைக் கண்டு என் மனைவி பயப்படுவாளே!.'"

உங்களுக்குப் பிடித்தமான எழுத்தாளர் ஒருவர் உண்டென்றால் என்ன செய்வீர்கள்? ஒரு பாராட்டுக் கடிதம் எழுதி வைக்கலாம்; இல்லையா?

ஆனால் ஷேக்ஸ்பியரை விரும்பிப் படிப்பவர்கள் அவர் 24,000 வெவ்வேறு வார்த்தைகளைப் பயன்படுத்தியிருக்கிறார் என்று கர்மசிரத்தையாகக் கணக்கிடும் அளவுக்கு அவர் எழுத்தை ரசித்திருக்கிறார்கள்! 'நிறைய எழுதியவர்' என்று பெயர் பெற்ற மில்டனே இதில் மூன்றில் ஒரு பங்கு சொற்களைத்தான் உபயோகித்திருக்கிறார் என்று ஒப்பிட்டுப் பார்த்து வேறு பெருமிதமடைகிறார்கள்!

ஷேக்ஸ்பியருக்குத் திருமணமாகும் போது வயது பதினெட்டுதான்! அவர் மனைவி ஆனி அவரைக் காட்டிலும் எட்டு வயது மூத்தவள்! நாடகங்களை எழுதியதோடு மட்டுமின்றி அவற்றில் நடித்துமுள்ளார் ஷேக்ஸ்பியர். அவரது உயிலை இன்றைக்கும் பாதுகாத்து வைத்துள்ளார்கள். ஆனால் அவரது நேரிடையான சந்ததியர் என்று யாருமில்லை.

ஆங்கிலேய அமரகவி வோர்ட்ஸ்வொர்த் ஒரு முறை ஷேக்ஸ்பியரைத் தாக்கிப் பேசிவிட்டார், துரதிர்ஷ்டவசமாக. "ஷேக்ஸ்பியரைப் போல் யார் வேண்டுமானாலும் எழுதலாம். என்ன பிரமாதம்! கொஞ்சம் மூளையைச் செலுத்த வேண்டும், அவ்வளவுதான்!" என்றார். ஷேக்ஸ்பியர் தாசனான லாம்ப் இதைக் கேட்டுச் சும்மா இருப்பாரா? "ரொம்ப உண்மை!" என்றவர், "தேவைப்படுவது அந்த மூளை. அவ்வளவுதான்!" என்றார்.









பழனிக்குப் போய்ப் பையனுக்கு மொட்டை அடித்த பிறகு அவனைப் பார்க்கவே பரிதாபமாய் இருந்தது பெற்றோர்களுக்கு. ஒரு குல்லாய் வாங்கிக் கொடுத்தார் அப்பா.

ரயிலில் சென்னை திரும்பிக் கொண்டிருக்கையில் சிறுவன் அடிக்கடி ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான். அதட்டி உருட்டியும் பயனில்லை.

ஒரு யோசனை தோன்றியது தகப்பனருக்கு. அடுத்த தடவை அம்பிப் பயல் வெளியே எட்டிப் பார்த்த போது 'சடக்' கென்று குல்லாயை அவன் தலையிலிருந்து எடுத்து மறைத்து வைத்தார்.

"பாருடா! புதுக் குல்லாய் காற்றில் பறந்து போய் விட்டதே. ஏன் எட்டிப் பார்த்தாய்? என்று கோபித்தார்.

பையன் குல்லாய் பறிபோய் விட்டதே என்று கதறினான்.

தகப்பனுர் மனசு கேட்கவில்லை. 'ஐயோ, பாவம்! என்று எண்ணியவர் "சூ, மந்திரக்காளி! கொண்டு வா குல்லாய்!" என்று கூறி அதனை எடுத்துத் தந்தார்.

அம்பியின் முகம் மலர்ந்தது. அடுத்த கணம் அப்பா கண்ணிமைப்பதற்குள் குல்லாயை ஜன்னலுக்கு வெளியே எறிந்து விட்டு, "அப்பா! மறுபடியும் சூ. மந்திரக்காளி போடுப்பா!" என்றான்.

"ராஜாவாக இருந்தால் எப்படி இருக்கும், அம்மா?" என்ருன் சிவராமன்.

"எப்படி இருக்கும்? ராஜாவாச்சே, அவனைத் தேள் கொட்டாதா? பாம்பு கடிக்காதா? விஷம் ஏறாமல் போய் விடுமா? அவனுக்கு மாத்திரம் தலைவலி, ஜுரம், சளுப்பு என்று கிடையாதா? தலைவலி வந்தால் அவன் மாத்திரம் ஐயோ அப்பா என்று கத்தமாட்டானு? ராஜாவாச்சே என்று கொசு பயப்படுமா? அவன் பேரில் உட்கார்ந்து கடிக்க அஞ்சுமா? ராஜா என்றுல் மாத்திரம் என்னடா உசத்தி? அவனும் நம்மைப் போல் மனுஷியன்தானே?" என்ருள் சீதம்மாள்.

* * *

"சிவராமனுக்குப் பாட்டு விஷயம் ஏதாவது தெரியுமா, அம்மா?" என்று வத்ஸலா தாயாரைக் கேட்டாள்.

"என்னைக் கேட்டால்? அதோ உட்கார்ந்து கொண்டிருக்கிருனே; அவனையே கேட்கிறது தானே!"

"பாட்டு விஷயம் உனக்கு ஏதாவது தெரியுமா, சிவராமா?" என்று வத்ஸலா சிவராமனைக் கேட்டாள்.

"தெரியும்!"

"என்ன தெரியும்?"

"சாப்பாட்டு விஷயம் தெரியும்!" என்ருன் சிவராமன். — எஸ். வி. வி.

திமிங்கிலத்தைப் பற்றிய உண்மைகள் உங்களைத் திகைக்கவைக்கும். கடல் அரசனை-அல்லது அரசியானை-இது மணிக்கு முப்பது மைல் வேகத்தில் நீந்தி இரை தேடும். ஸீல், வால்ரஸ் போன்ற பிராணியைக் கண்டதும் அதற்குக் கீழாக நீந்திப் போய்ப் பிறகு வேகமாக மேலெழும்பி அதன் மீது மோதும். அந்த அதிர்ச்சியில் இரை நினைவிழப்பதுடன் உயரத் தூக்கி எறியப்படுகிறது. மீண்டும் அது கீழ் நோக்கி விழுவது நேராகத் திமிங்கிலத்தின் திறந்த வாயில் தான்! முப்பதடி நீளமுள்ள கறுப்பும் வெளுப்புமான ராட்சதத் திமிங்கிலங்கள் ஒருவேளைச் சாப்பாட்டுக்கு ஐந்நூறு அடி நீளமுள்ள போர்பாய்ஸ், ஸீல் இவற்றில் வகைக்கு ஒரு டஜன் விழுங்கிவிட்டு, முக்கால் வயிறு நிறைந்த திருப்தியுடன் கடல் மட்டத்துக்கு மேலே வரும். ஆம், மீனைப் போல் கடலில் வாழ்ந்த போதிலும் குட்டி போட்டுப் பால் கொடுக்கும் இம்மிருகம் உயிர் வாழச் சுத்தமான காற்று தேவை! நாய், குதிரை இவற்றைப்போல் திமிங்கிலம் அறிவுள்ள பிராணி. புறச் செவிகள் இதற்குக் கிடையாது என்றாலும் இரவு நேரங்களில் கடலில் திசை தப்பிப் போகாதிருக்க இவை ஒலி எழுப்பியும் எதிரொலிகளைக் கேட்டும் பயன் அடைகின்றன.

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்

**பனித்துளியின் புதுமையையும், காலை ஸ்நானத்தின் சுகத்தையும் நாள் முழுவதும் அளிக்கும்!**




புத்துணர்ச்சியும், இதமும் அளிக்கும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர்-டால்கம் பவுடரை உங்கள் உடம்பின் மேல் தூவிக்கொள்ளுங்கள். அது வியர்வையை சீக்கிரத்தில் உறிஞ்சி, மிக உஷ்ணகாலத்திலும்கூட ஸ்நானத்திற்குப்பின் உண்டாகும் புத்துணர்ச்சியை நாள்முழுவதும் நிலைக்கச் செய்யும். எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் விளங்க பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்*

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். ஏ.வில் இணைக்கப்பெற்றது)

JWT-P 1839

# வெள்ளை வென்று

**லட்சுமி சுப்பிரமணியம்**

பொங்கி வந்த பாலை இறக்கி வைத்து விட்டு லலிதா குழாயடியில் தண்ணீர் பிடிக்கப் போனாள்.

காலை நேரம். இன்னும் மண்ணில் இள வெய்யில் தோயவில்லை. காம்பவுண்டுச் சுவர் ஓரம் வளர்ந்திருந்த செடிகள், புது மலர்களின் இதழ்களை விரித்து மிருக்கின.

இன்னும் மணி எழுந்திருக்கவில்லை. அன்று விடுமுறை நாள். எழுந்திருக்க நேரமாகும். அதுதான் அவள் காப்பியைக் கலந்து வைக்கவில்லை. அந்த நேரத்திலேயே எழுந்து விளையாட்டுக் கேற்ற வெள்ளை உடுப்பணிந்து, காலை நேரம் முழுதும் ஆசை தீர விளையாடப் போகிறவர்கள், அக்கம்பக்கத்தில் இல்லாமல் இல்லை. ஆனால் மணிக்கும் அந்தப் பழக்கத்துக்கும் வெகு தூரம்.

வாசற் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது. அவளுக்குத் தெரியும், அவள் கணவனின் நண்பன் சேகர்தான் அது. அவனுடைய டென்னிஸ் மட்டை உள்ளே இருந்தது. அதை வாங்கிக்கொண்டு போகத்தான் அவன் வந்திருக்கிறான்.

சுவரில் ஆணியில் மாட்டியிருந்த மட்டையைக் கழற்றி எடுக்கும் போது லலிதா, ஒருமுறை பக்கத்தில் மெருகு அழியாமல் தொங்கிய மற்றொரு டென்னிஸ் மட்டையைப் பார்த்தபடி நின்றாள். அவள் எத்தனையோ தடவைகள் சொல்லிக் கட்டாயப்படுத்திய பிறகு மணி வாங்கியது அது. ஆனால் அதை இரண்டொரு தடவைகளாவது உபயோகப் படுத்தி இருப்பானோ என்னவோ?

மறுபடியும் கதவைத் தட்டும் சத்தம் எழுந்தது.

அவள் கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள். சேகர் அவள் கையிலிருந்த டென்னிஸ் மட்டையை வாங்கிக் கொண்டு நன்றி தெரிவிக்கும் பாவனையில் நிமிர்ந்து பார்த்தான். கதவைத் திறக்காமலேயே, அவன் வந்திருப்பதும் வந்த காரணமும் தெரிந்து, அவள் தயாராக வந்த அறிவைப் பாராட்டும் பாவமும் இருந்தது சேகரின் பார்வையில்.

"கொஞ்சம் காப்பி சாப்பிடுகிறீர்களா?"

"வேண்டாம். இப்போது நேரே போய் ஒரு செட் ஆட வேணும்." புன்னகையோடு அவன் படி இறங்கி விட்டான். ஏதோ நினைத் தவனாய்த் திரும்பிப்பார்த்தான்.

"டேவிஸ் கப் முடிவு தெரியுமா? இந்தியா ஜப்பானை வென்றுவிட்டது!"

"பார்த்தேன். கிருஷ்ணனுக்கு இரண்டு ஸிங்கிள்ஸ் ஆட்டத்திலும் வெற்றி!"

இருவருக்குமே முதல்நாள்இரவு வானொலிச் செய்தியிலேயே தெரிந்ததுதான் அது. ஆனால் அப்படிப் பரிமாறிக்கொள்வதில் அவர்களுக்கு ஒரு திருப்தி இருந்தது. மணிக்கு அதில் சுவாரசியம் இல்லை.

கதவை நன்றாகத் திறந்து வைத்து விட்டு, லலிதா வாசலில் தண்ணீர் தெளித்துக் கோலம் போட்டாள். உள்ளே போய்த் தினக் காலண்டரில் முந்தைய நாள் தேதியைக் கிழித்தாள். அந்த மெல்லிய சத்தத்துக்காகவே காத்துக் கொண்டிருந்தது போல் அறைக்குருவி சிறகு விரித்து 'ஜில்' லென்று ஜன்னல் வெளியே பறந்தது.

பொன்னிறக் கதிர்கள் இலேசாய் முதுகில் விழ, மணி ஒருக்களித்துப் படுத்துக் கொண்டிருந்தான். அவன் தூக்கத்தில் அது கடைசி அத்தியாயம். அவள் நிற்பதை ஓரக்கண்ணால்பார்த்து விட்டு அவன் தலையைத் திருப்பிக் கொண்ட ஜாடையில் அது தெரிந்தது.

காப்பியும் கையுமாக வந்து அவள் அவனை எழுப்பினாள். பல் தேய்க்கும் படலம் பின்னால்தான். அவன் தலை மயிரை இலேசாய்க் கோதியபடி அவள் அசைத்து எழுப்பியபோது அவன், பலவந்தம் செய்வது பிடிக்காத குழந்தையைப் போலச் சிணுங்கினான். அவன் காதருகே அவள் குனிந்து "மணி எழு!" என்று சொன்னாள். அப்போது மணி ஆறரை.

காப்பி அருந்த அவனுக்கும் ஆசைதான்; ஆனால் தூக்கத்தின் சுவாரசியத்தை அது வென்றுவிட முடியவில்லை. எழுந்திருக்கப் போனவன், புரண்டு அவள் மடியில் சாவதானமாகப் படுத்துக் கொண்டான்.

"உங்கள் நண்பர் ஒரு செட் டென்னிஸ் விளையாடியாகி விட்டது இத்தனை நேரம்!"

அவன் அசையவில்லை. டென்னிஸ் ஆட்டத்தில் அவனுடைய அந்த நேரம் இருந்திருக்குமா? என்று அவளுக்குச் சந்தேகம் தான். அவன் கன்னத்தில் அவள் கைபட்டது. அன்று அவன் முகக்ஷவரம் செய்து கொள்ள மாட்டான். முள் முள்ளாய் விரலில் உறுத்தும் அவன் கன்னத்தைப் பொத்திய அவள் கையை அவன் பிடித்துக் கொண்டான். அவன் கேட்கப் போவது என்னவென்று அவளுக்குத் தெரியும். அவளே முந்திக் கொண்டாள்.

"இன்று என்னைத் தொந்தரவு பண்ணாதே! விடுமுறை நாளும் அதுவுமா என்னைப் பார்க்கிறவன் யார்?"

ஒரு பெருமூச்சோடு அவள் எழுந்து உள்ளே போய்விட்டாள். அவன் நிதானமாய் எழுந்து படுக்கையைச் சுருட்டித் தட்டும் சத்தம் அவள் பின்னால் கேட்டது.

மணி கல்லூரியில் உதவிப் பேராசிரியர். அந்த இளம் வயதில் நல்ல பதவிதான் அது. அவனுடைய அறிவுத்திறனை மெச்சாதவர்கள் இல்லை. ஆனால் அவர்கள் எல்லோருக்குமே அவனை நேரில் பார்க்கும்போது ஒரு வியப்புத் தட்டத்தான் செய்யும். மற்றவர்களுக்கு அது பெரும் வியப்பு அவளுக்கோ அதுவே பெரும் ஏமாற்றமாக இருந்தது.

கல்லூரிக்குப் போகும் மற்ற ஆசிரியர்களையும் பேராசிரியர்களையும் அவள் ஜன்னலோரம் நின்று கவனித்திருக்கிறாள். கோட்டும், டையும், பளபளக்கும் பூட்ஸும், மடிப்புக் கலையாத பாண்டுமாக அவர்கள் நடந்து போகிற தோரணையே அமர்க்களமாக இருக்கும். அவர்களைப் போல் உடை அலங்கார வாய்ப்பு இருந்தும் மணிக்கு ஏனோ அதில் ஈடுபாடே இல்லை. பெரிய மனிதர்களின் சகவாசமும், உடன் வேலை செய்யும் ஆசிரியர்களின் மரியாதையும், மாணவர்களின் பணிவும் அவனைச் சூழும்அளவுக்கு அவனிடம் அலட்சியமாகத்ததும்பவேண்டிய கம்பீரம் இல்லைதான். அந்த எளிமையைக் கண்டு எத்தனையோ பேர்கள் வியந்திருக்கலாம். ஆனால் அவளுக்கு ஏமாற்றம்தான் குமுறிக் கொண்டு வந்தது.

பனியன் இல்லாத அரைக்கைச் சட்டையோடு அநேகமாகக் கால்செருப்புஇல்லாமலே வெளியே கிளம்பி விடுவான். அவளோடு வரும்போது அவளுடைய திருப்திக்காக அந்தக் கால் செருப்பு ஒன்றுதான் கூடுதல். அவள் வற்புறுத்தினாலும் சரி, பாண்டும் சட்டையும் பூட்சுமாகக் கிளம்ப மறுத்துவிடுவான்.

"நீ எப்படிக் கிளம்ப வேண்டுமென்று நான் எப்போதாவது சொல்கிறேனா?" என்று கேட்பான் மணி.

அப்படி அவன் கேட்காததே அவளுக்கு உண்மையில் குறை. பின்தலையில் திராட்சைக் கொத்தாய்ப் பின்னி முடிந்த கூந்தல். அதற்கு மேல் பிறைவடிவாய் மடித்து வைத்த கதம்பம். நிமிர்ந்த தலை குனியாமல், மையிட்ட கண்களை ஒருமுறை மலர விழித்துப் புன்னகை புரிந்து நிற்கும் தோரணை. மேலே அர்த்தம் கண்டு கொள்ளக்கூடிய துடிப்பு.

அவர்களுக்கிடையே அந்த இடைவெளி பளிச்சென்று இல்லாமல் இல்லை. எப்போதாவதுதான் இருவருமாகக் கிளம்புவார்கள் அப்படி. அபூர்வமாக ஒரு புது சினிமாப் படம் அருகிலிருந்த தியேட்டரில் தலைகாட்டும் போது; ஊரிலிருந்து வந்திருக்கும் உறவினர்களைப் பார்க்க வேண்டிப் போகும்போது; கலியாண அழைப்புக்கு மாலை வேளையில் வரவேற்பு, வைபவத்துக்காகப் போகும்போது. அப்போதும் அவன் வழி தனி; அவள் வழியும் தனிதான்.

"உங்கள் நண்பர் சேகரைத்தான் பாருங்களேன்!" என்று அவனை யறியாமல் வெடுக்கென்று சொல்லி விடுவாள். மீறித் தப்பி விழுந்துவிடும் பேச்சு அது. இணையாய் ஒப்பிட்டுப் பார்க்கிறது போலப் பழகும் இரு நண்பர்களிடையே அந்த நினைப்பு ஒரு கணம் வராமற் போகாது. ஒன்றாய்ப் பார்க்கும் யாருக்குமே.

மடிப்புக் கலையாத உடை. கட்டழியாத உருவத் தோற்றம். அழியாத சிரிப்பு. பழகப் பழக எல்லையே அற்றதுபோல் நடையுடை பாவனைகளில் சிந்தும் ஒரு கவர்ச்சி. குடம் தளும்புவது போலப் பரிகாசமாய்க் குலுங்கும் குரல். அதில் அலுக்காத சுவாரசியமாய் விதம் விதமான பேச்சுக்கள். தனியான விதரணை. உள்ளத்தில் கோலக்கோடுகள் போலத் திரும்பித் திரும்பி வரும் அந்த நினைப்பு.

அவளுடைய துடிப்புக்கு, பகட்டாய் மின்னத் துடிக்கும் ஆசைகளுக்கு அவனிடம் எதிர் நிழல் இல்லை.




மாலை நேரங்களில் வாசலில் நாற்காலிகளை எடுத்துப் போட்டுக்கொண்டு பேச உட்காருவார்கள். அந்தவிவாதங்களின் வேகத்தில் நேரம் போவதே தெரியாது. அவ்

டபோது பட்டதும் படாததுமாய் உதிர்க்கும் இரண்டொரு பேச்சுக்களைத் தவிர மணி அதில் கலந்து கொள்வதே இல்லை. மரமல்லிகை உதிருகிற மாதிரி கொட்டித் தீர்ப்பவர்கள் அவனும் சேகரும்தான்.

புதிதாக வந்திருக்கும் திரைப்படம் முதல் வானொலியில் கேட்ட கச்சேரி, பத்திரிகையில் வந்து கொண்டிருக்கும் பிரபல ஆசிரியரின் தொடர் நாவல், இப்படி அந்தப் பேச்சு கதம்பம் தொடுத்ததுபோல் வகை வகையாய் கிரிக்கெட்வரையில் வளர்ந்து கொண்டே போகும்.



மணிக்குக் கிரிக்கெட்டைப் பற்றி எதுவுமே தெரியாது. தெரிந்து கொள்ள விருப்பமும் இல்லை. கடைசியாக வெளிவந்த ஸ்டான்லி கார்ட்னர் எழுதிய துப்பறியும் நாவலைப் பற்றி இருவரும் ஒருமணி நேரமாவது பேசுவார்கள். சேகருக்கு அகதா கிறிஸ்டி நாவல்களில் ஈடுபாடு அதிகம். இரண்டு ஆசிரியர்களின் நாவல்களையும், எழுதும் பாணியையும் பற்றிக் காரசாரமாய் விவாதம் நடக்கும். மணி மௌனப் புன்னகையாகப் பார்த்துக் கொண்டிருப்பான். வேகமாய் அவன் புறம் திரும்பிப் பார்க்கும் அவள் பார்வையில் ஆயிரம் கேள்விகள் குமுறும். அவன் பதில் என்னவோ அலட்சியமான ஒரு சிரிப்புத்தான். விடுமுறை நாட்களிலும் கூட, வெயிலை லட்சியம் பண்ணாமல் லைப்ரரிக்குப் பாட புத்தகங்களைப் படித்துப் பார்த்து வரப் போகும் நேரத்தில் ஒரு சிறிதாவது அவள் ஆசையைத் தீர்க்கும் அந்தப் பேச்சிலும் அவனுக்கு இருந்திருக்கக்கூடாதா? அவள் மனக்குறை அவனுக்குத் தெரியாமல் இருந்திருக்காது. ஆனால் ஏனோ இந்த அலட்சியம்..?

பட்டதும் படாததுமாய் அவன் அப்படி ஒதுங்கிவிடுவதை, அவள் குறையாய் உணருவதை அவனுக்கும் தெரியும்படி, அவ்வப்போது குத்தலாக ஏதாவது பேசிவிடுவாள். ஒருகணம் அவன் அதைக் கேட்டு மலைத்துப் போனாலும், அப்புறம் வழக்கமாய்ச் சம்பவங்களின் ஓட்டத்தில் அதை மறந்து விடுவான்.

அன்று பகல் முழுதும் மணி வீட்டுக்கே வரவில்லை. காரணம் புரியாமல் இருப்புக் கொள்ளாதவளாய் வாசலுக்கும் உள்ளுக்கும் நடந்து கொண்டிருந்தாள் லலிதா. கடைசியாக அவன் வந்து கதவை இடித்தபோது மணி ஒன்பது. வாசற் கதவைத் தாளிட்டபடி இலையைப் போடப் போனாள்.

''இங்கே பார்!''

அவன் வாயைத் திறந்து காட்டினான். நாக்கு ரத்தச் சிவப்பாய்த் துவண்டது.

''சாப்பிட்டாயிற்று?''

''விருந்து!''

''எதற்காக?''

''சேகர் கல்லூரியை விட்டுப் போகிறான். அதற்காகத்தான்.''



அவள் முகத்தையே பார்த்தபடி அவன் பேசினான். ஆனால் அவள் முகத்தில் மாறுதல் எதுவும் இல்லை

''அவனுக்கு மதுரையில் ஒரு கல்லூரியில் வேலை கிடைத்திருக்கிறது. இதைவிட உயர்வான சம்பளமோ, பதவியோ இல்லை. ஆனால் அவனுக்கு அது சௌகரியம். அவன் மனைவிக்கும் இந்தக் கடற்கரை வாசத்துக்கும் ஒத்துக் கொள்ளவில்லை.''

''சேகரின் மனைவிக்கு என்ன?''

''உனக்குத் தெரியாதா? அவள் ஒரு ஆஸ்துமா வியாதிக்காரி. அவன் அவளுக்குச் செய்யாத வைத்தியமில்லை. தெம்பாய் எழுந்து நடமாடுவதே சிரமம். இரவு முழுதும் ஓயாத இருமல். கடற்கரைக் காற்றுக்கு உபத்திரவம் அதிகமாக இருந்தது. இப்போது மதுரைக்குப் போவதனால் அவளுக்கு ஒரு விதத்தில் சௌகரியந்தான்!''

அவள் பதில் ஏதும் சொல்லாமல் இருந்தாள். மனக் கண்ணில் அவள் பார்த்தறியாத அந்த முகம் படமாடிற்று. துடியாய் நிற்கும் சேகர்? விவரமில்லாத ஓர் அநுதாபம் நெஞ்சில் பரவியது. யாருக்காக அது?

மணியின் குரல் காதில் விழுந்ததும் நிமிர்ந்தாள். ''லல்லு! உன்னை ஒன்று கேட்பேன், தப்பாக எடுத்துக் கொள்ளாதே. சேகரை மணந்துகொண்டவள் பாக்கியசாலி என்று நீ நினைத்ததுண்டா எப்போதாவது?''

அந்தக் கேள்வியின் முழு அர்த்தம் அவளுக்குப் புரியாமல் இல்லை. அதை எவ்வளவு நயமாகக் கேட்கலாமென்று யோசித்துக் கேட்ட முயற்சியும் தெரிந்தது. அவ்வளவு நாட்களும் அதை மனத்துக்குள்ளேயே வைத்துக்கொண்டு — என்ன வேடிக்கையான மனிதர் இவர்!

அவளால் உடனே பேச முடியவில்லை. ஏதோ தலையைக் குனிந்தபடி அசையாமல் விளக்கின் கொழுந்தைப் போல் உட்கார்ந்திருந்தாள்.

''என்ன லலிதா?''

நிமிர்ந்த அவள் பார்வையில் கண்ணீரின் கசிவு தெரிந்தது. எத்தனையோ ஆராய்ச்சிகள் பண்ணிப் பட்டம் பெற்றுவிட்டவர் என்னைப் புரிந்துகொள்ள முடிந்தது இவ்வளவுதானா?

''நான் எப்போதாவது உங்கள் மனத்தில் அத் தடுமாற்றம் உதிக்கும்படி நடந்து கொண்டிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்!''

அவன் முகம் கருங்கியது. ''இல்லை. நான் அப்படித் தப்பாகச் சொல்லவில்லை. பொதுவாக ஏற்படக் கூடிய ஓர் ஆதங்கத்தையே—''

தன்னையே பார்த்தபடி உட்கார்ந்திருந்த கணவனின் நிர்மலமான முகத்தையே பார்த்தபடி எழுந்து நின்றாள் லலிதா. அதற்கு மேல் தன் பேச்சினால் அவனை எந்த விதமாகவும் வேதனைப்படுத்த அவளுக்கு மனமில்லை. மனம் குழைவில் கனியப் புன்னகையை வருவித்துக் கொண்டாள்.

அவள் அருகே வந்து முகத்தை நிமிர்த்தி, ''இன்னும் தூக்கம் வரவில்லையா உங்களுக்கு?'' என்று பேச்சை மாற்றினான்.

தன்னைச் சூழ்ந்த சஞ்சலத்திலிருந்து சட்டென்று விடுபட்டவளாய், அவனைப் பார்த்துக் களங்கமின்றிச் சிரித்தாள் அவள். வேறென்ன வேண்டும் அவளுக்கு? அவன் கையைக் கோத்துத் தன்னருகே இழுத்துக் கொண்டாள்.




# இதோ பருவ மழை

மின்சாரச் செலவில் மிச்சம் பிடியுங்கள்

பருவ மழைக் காலத்தில் ஈரமும், மோசமான ஒயர்களும் லீக் ஆவதற்குக் காரணமாகலாம். அதனால் உங்கள் மின்சாரச் செலவு இரட்டிப்பாகவோ மும்மடங்காகவோ ஆகலாம்.

மின்சாரத்துக்காக ஏன் இவ்விதம் அதிகம் செலவிட வேண்டும்? நல்ல ஒயர்களை அமைப்பதன் மூலம் பணத்தை மிச்சம் பிடியுங்கள். நல்ல ஒயர் என்றால் குளோஸ்டர் கேபிள்கள் என்றே அர்த்தம்.

குளோஸ்டர் கேபிள்கள் லண்டன் பிரிட்டிஷ் இன்சுலேடட் காலண்டர்ஸ் கேபிள்ஸ் லிமிடெட்டின் தொழில் நுணுக்கக் கட்டுமைப்புடன், பி. எஸ். எஸ். நெ 7, ஐ. எஸ் நெ. 434, இவற்றுக்குச் சற்றும் விரோதமில்லாமல் தயாரிக்கப்படுகிறது. அவை பரீட்சிக்கப்பட்டு ஐ. எஸ். ஐ. மார்க், இந்திய சர்க்காரின் டி. ஜி. (மெட்) சர்டிபிகேட்டால் சீலிடப்படுகின்றன. குளோஸ்டர் கேபிள்கள் டி. ஜி. எஸ். & டி. ரேட் காண்ட்ராக்டில் உள்ளன. அவை ராஜ்ய மின்சார போர்டுகளாலும், மராமத்து மற்றும் இதர சர்க்கார் இலாகாக்களாலும் அங்கீகரிக்கப்பட்டவை.




IS:434

## போர்ட் குளோஸ்டர் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

கேபிள் டிவிஷன்

14 நேதாஜி சுபாஷ் ரோடு கல்கத்தா-1

மானேஜிங் ஏஜண்டுகள் கெட்டில்வெல் புல்லன் கோ., லிட்.

சென்னை ராஜ்யம், கேரள ராஜ்யம், ஆந்திர கடற்கரைப் பிரதேசம் மற்றும் ராயலசீமைக்கு ஏஜண்டுகள்

கார்டன் உட்ராப் கம்பெனி (மதராஸ்) பிரைவேட் லிட்.

1/21, வடக்கு பீச் ரோட், சென்னை-1

AITAAS FGI-27

# எங்கள் தமிழ் வெளியீடுகள்!

○●○

| | | |
|---|---|---|
| மஹாத்மா காந்தி (போட்டோ கோவை) | ... | 10.00 |
| விஞ்ஞானத்தின் சில அம்சங்கள் (டாக்டர் ஸி. வி. ராமன்) | ... | 1.75 |
| எஸ்டேட் வரி (வெகுஜன வெளியீடு) | ... | 1.25 |
| பாரதநாட்டுக் கிராமியக் கதைகள் | ... | 1.00 |
| வெளிநாட்டுக் கிராமியக் கதைகள் | ... | 0 75 |
| இந்திய அரசியல் அமைப்பு | ... | 0.75 |
| தீ. ஜாக்கிரதை | ... | 0.75 |
| ஆதிவாசிகள் | ... | 0.50 |
| மெட்ரிக் அளவை முறை | ... | 0.35 |
| பஞ்ச சீலம் | ... | 0.35 |
| தீண்டாமை ஒழிப்பு | ... | 0.25 |
| நோயற்ற வாழ்வு | ... | 0.25 |
| பாரதப் பண்பாடு (சர்தார் பணிக்கர், ஹுமாயூன் கபீர்) | ... | 0.20 |
| ஆதாரக் கல்வி: வினா விடைகள் | ... | 0.20 |
| மதுவிலக்கு: வினா விடைகள் | ... | 0.10 |
| ஜனநாயக அரசாங்க ஊழியர் (பண்டித பந்த்) | ... | 0:06 |

ரூ. 25/-ம் அதற்கு மேலும் புத்தகம் வாங்கினால் தபால் செலவு தள்ளுபடி. ரூ. 25க்கு குறைவாக வாங்கும் புத்தகங்களின் விலையுடன் தபால் செலவு 12/- சத வீதம் கூட்டிக் கொள்ளவும். குறைந்தபட்சத் தபால் செலவு 10 ந. பை. ரிஜிஸ்தர் செலவு தனி.

○●○

## பப்ளிகேஷன்ஸ் டிவிஷன்

டில்லி: பழைய செக்ரடேரியட்

சென்னை: ஆனந்த் சாகர், 8, ஸாந்தோம் ஹைரோடு

# மணிபல்லவம்

## 17- பயங்கர நண்பர்கள்

அப்போது அந்தப் பாதாள அறையில் நிலவிய சூழ்நிலையில் கூண்டுக்குள் இருந்த புலிகளைக் காட்டிலும் கொடுமையான புலியாக மாறிப் பாய்வதற்கு முற்பட்டுக் கொண்டிருந்தவர் நகைவேழம்பர்தாம் என்பதை அங்கே இருந்த எல்லாரும் உணர்ந்தார்கள். எல்லாருடைய மனத்திலும் அடுத்த கணம் என்ன நிகழப் போகிறதோ என்ற பயம்தான் நிரம்பியிருந்தது. புலிக் கூண்டுகள் அமைந்திருந்த இடத்துக்கு மேலே முதற்படியில் தோன்றிப் பேயாக நகைத்துக் கொண்டிருந்த வேழம்பருடையகைகளில் அங்கு நின்ற அத்தனை பேருடைய உயிர்களும் இருந்தன. புலிக்கூண்டுகளைத் திறப்பதற்கு இணைத்திருந்த சங்கிலியை அவர் இழுத்தால் கீழே அந்தக் கூண்டுகளுக்கு நடுவே நிற்பவர்களின் கதி அதோகதிதான்.

தனக்குரிய செல்வங்களாலே கிடைக்கிற எல்லாவகைப் பெருமைகளையும் மீறி எந்தச் செல்வமும் இல்லாத அரைக் குருடன் ஒருவனுக்கு இரகசியங்களால் அடிமைப்பட்டுக் கிடந்து தவித்த பெருநிதிச் செல்வர் 'அந்த இரகசியங்களையும் அவற்றை மனத்தில் சுமந்து கொண்டிருந்தவனையும் சேர்த்து ஒழித்துவிட்டோம்' என்று நிம்மதியோடு தலை நிமிர்ந்தபோது 'நான் ஒழியவில்லை' என்று முன்வந்து நின்று மீண்டும் அவர் தலையைக் குனியச் செய்து விட்டார் நகைவேழம்பர்.

தாம் இரையிட்டு வளர்த்த புலிகளுக்கு இன்று தாமே இரையாகும் நிலை வந்து விட்டதே என்று மெய் நடுங்க நின்றார் பெருநிதிச் செல்வர். அவரை விளித்து நகைவேழம்பர் சிறிதும் நெகிழ்ச்சியில்லாத குரலில் பேசினார்:-

"நஞ்சு கலந்த பாலைப் பருகி நான் அழிந்தொழிந்து போயிருப்பேன் என்று நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தீர்கள். உங்கள் பெருமை நீடிக்க வழியின்றி நானே முன்னால் வந்து நிற்கிறேன். ஒன்று நாமிருவரும் நண்பர்களாயிருக்க வேண்டும், அல்லது பகைவர்களாயிருக்க வேண்டும். ஆனால் நல்லதற்காகவோ, கெட்டதற்காகவோ, எதற்கென்று தெரியவில்லை; இப்போது நாமிருவருமே எப்படியிருக்கிறோமோ அப்படி இதற்கு முன்பு இருக்க நேர்ந்ததில்லை. நட்பின் நெருக்கத்தைக் குறித்து 'உயிர் நண்பர்கள்' என்று சொல்வார்கள். ஆனால் நீங்களும் நானுமோ, இப்போது ஒருவருக்கொருவர் உயிரைக் கவர்ந்து கொள்ளத் துணிந்து விட்ட நண்பர்களாகியிருக்கிறோம். உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் நெருக்கத்தில் முன்பு இந்த நட்புத் தொடங்கிற்று என்பதை நீங்கள் மறந்து போயிருக்கலாம். இப்போது உயிர்களை அழிக்கும் ஆத்திரத்தில் முடிவதற்கிருக்கிறது. 'இந்த உறவு இப்படித்தான் முடிய வேண்டுமா, அல்லது வேறு விதமாகவும் முடிய இடமிருக்கிறதா'- என்று சிந்திக்க வேண்டிய விநாடிகளில் நிற்கிறோம் நாம்..."

பெருநிதிச் செல்வர் தலை நிமிர்ந்து எதிராளியைப் பார்ப்பதற்கு வேண்டிய சுறுசுறுப்போ, ஆர்வமோ, சிறிதுமில்லாமல் சோர்ந்து போயிருந்தாலும் இந்தப் பேச்சைக் கேட்டதும் அடிபட்ட நாகம் படத்தைத் தூக்குகிறாற்போலத் தலை நிமிர்ந்து நகைவேழம்பரைப் பார்த்தார். பின்பு இயல்பாகப் பேசும் பேச்சின் விரைவு இல்லாமல் ஒவ்வொரு வார்த்தையாகத் தயங்கி நிறுத்திக் கேட்டார்.

"நீங்களும் நானும் சிந்திக்க வேண்டிய விநாடிகளில் இவர்களைப் போன்ற ஊழியர்களும் உடனிருக்க வேண்டியது அவசியம்தானா?"

"அவசிய அநாவசியங்களைச் சிந்தித்துச் செயல்படுகிற நிலையில் இப்போது நான் இல்லை. நீங்கள் என்னை அப்படி இருக்கவும் விடவில்லை. 'என்னைப்போல் ஒருவன் உங்களுக்கு அவசியமா இல்லையா?' என்று நீங்களே சிந்தித்து உடனடியாக முடிவு கட்டிவிட்டபின் நான் சிந்திக்க என்ன இருக்கிறது? நான் அநாவசியமென்று நீங்கள் தீர்மானம் செய்தபின் நீங்கள் எனக்கு அவசியமென்று நம்பி என்னை நானே ஏமாற்றிக் கொள்ளலாமா?"

-இந்தக் கேள்வியின் பிடியிலிருந்து விடுபட்டுத் தாம் என்ன மறுமொழி கூறுவதென்று தெரியாமல் திகைத்தார் பெருநிதிச் செல்வர். உயிர்ப் பயமும், ஏவலுக்குத் தலைவணங்கும் ஊழியர்களுக்கு முன்

நா. பார்த்தசாரதி...

இப்படி அவமானப்பட்டுக் கொண்டிருக்கிறோமே என்ற நாணமும் சேர்ந்து அவரை ஆட்கொண்டு அவருக்குப் பேசுவதற்கு வார்த்தைகள் கிடைக்காதபடி ஆக்கியிருந்தன.

பேசவராத உணர்ச்சிகளுக்கும், பேச வேண்டிய சொற்களுக்கும் நடுவே அகப்பட்டுக் கொண்டு அவர் திணறுவதை நகைவேழம்பர் கண்டு கொண்டார். தமக்கும் பெருநிதிச் செல்வருக்கும் இடையே உள்ள நட்பு, பகை, இரகசியங்கள் எல்லாம் ஊழியர்களும் விளங்கிக் கொள்ளும்படி தெரிவது நல்லதல்ல என்பதை அவராலும் உணர்ந்து கொள்ள முடிந்தது. ஒரு கையால் சங்கிலியைப் பற்றிக் கொண்டு மற்றொரு கையால் ஊழியர்களை மேலே வருமாறு குறிப்புக் காட்டினார். கீழே பெருநிதிச் செல்வர் நின்ற இடத்திலிருந்து சிறிது விலகி ஒதுங்கி நின்றிருந்த ஊழியர்கள் நகைவேழம்பர் தங்களை மேலே வரச் சொல்லிக் குறிப்புக் காட்டுவதைப் புரிந்து கொண்டாலும் தங்களுக்குப் படியளப்பவராகிய பெருநிதிச் செல்வரின் ஆணையின்றி எப்படி மேலே செல்வதெனத் தயங்கினர்.



அவர்களுடைய இந்தத் தயக்கத்தைக் கண்டு மேலே நின்ற நகைவேழம்பர் சிரித்தார்.

"உங்களுக்குக் கட்டளையிட வேண்டியவரே இப்போது என்னுடைய கட்டளையை எதிர்பார்த்து நிற்கிறார். இந்தச் சமயத்தில் நீங்கள் அவரை எதிர்பார்த்துத் தயங்குவதில் பயனில்லை. நீங்கள் எல்லாரும் வெளியேறினால் நானும் அவரும் பேசிக் கொள்வதற்குத் தனிமை வாய்க்கும்."

நகைவேழம்பர் இப்படிக் கூறிய பின்பும் அவர்கள் தயங்கியபடியே நின்றார்கள். பெருநிதிச் செல்வரே இந்தத் தயக்கத்தைத் தவிர்ப்பதற்கு முன் வந்தவராய், "அவர் சொல்கிறபடியே செய்யுங்கள்" என்று ஊழியர்கள் பக்கம் திரும்பி மெல்லக் கூறினார்.

ஊழியர்கள் படியேறி மேலே வந்தனர். "நில்லுங்கள். நீங்கள் செய்ய வேண்டிய வேலையொன்று மீதமிருக்கிறது" என்று அவர்களைத் தடுத்து நிறுத்திக் கீழே வைக்கப்பட்டிருந்த கட்டிலில் கிடந்தவனைச் சுட்டிக் காட்டினார் நகைவேழம்பர். என்ன செய்ய வேண்டுமென்ற கேள்வி தோன்ற ஊழியர்கள் அவர் முகத்தைப் பார்த்தனர். அவருடைய நாவிலிருந்து அளவில் சுருக்கமாகவும் அர்த்தத்தில் பெரிதாகவும் இரண்டே இரண்டு சொற்கள் ஒலித்தன :—

"வழக்கம்போல் செய்யுங்கள்."

இதற்குப் பின் அங்கு நடந்த நிகழ்ச்சிகள் விரைவுடையனவாகவும், மாறுதல் உள்ளவையாகவும் இருந்தன. நகைவேழம்பர் படிகளில் இறங்கிக் கீழே வந்து தனியாக நின்று கொண்டிருந்த பெருநிதிச் செல்வருக்கு எதிரே கம்பீரமாக நடந்து கொண்டே பேசினார் :—

"இந்த மாளிகையில் இதே சூழ்நிலையில் நின்று உங்களோடு பேச எனக்கு விருப்பமில்லை. இருவருமே ஒருவர்மேல் மற்றொருவருக்கிருந்த நம்பிக்கையை இழந்து விட்டோம். நீங்கள் என்னைக் கொல்லவும் துணிந்து விட்டீர்கள் என்பது எனக்கே புரிந்து விட்டது. இனிமேலும் நான் உங்களை நம்ப வேண்டுமானால் நம்முடைய நம்பிக்கைகள் பிறந்து வளர்ந்த இடத்துக்குப் போக வேண்டும். நீங்கள் இனிமேல் என்னை நம்புவீர்களா என்பதை அறிந்து கொள்வதற்கு ஒரு சோதனை போல் உங்களை இப்போது அழைக்கிறேன். பூம்புகார் நகரம் முழுவதும் ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கிக் கிடக்கிற இந்த நேரத்தில் எந்தவிதமான பாதுகாப்பும் இல்லாமல் தனியாக என்னோடு நீங்கள் வரவேண்டும். தேரிலோ, குதிரையிலோ வரக் கூடாது. என்னைப் போல் நடந்து வர வேண்டும்."

"எங்கே வர வேண்டும்? எதற்காக வரவேண்டும்? பேச வேண்டியதை இங்கேயே பேசலாமே! நாமிருவரும் தனியாகத்தானே இருக்கிறோம்..."

"முடியாது. இது உங்களுடைய எல்லை. இங்கே நான் எந்த விநாடியும் துன்புறுத்தப்படலாம். இன்னும் உங்கள் மேல் பழைய நம்பிக்கை எனக்குத் திரும்பவில்லை. அந்த நம்பிக்கை திரும்புவதும், திரும்பாததும் நீங்கள் என்னை நம்புகிறீர்களா, இல்லையா என்பதைப் பொறுத்தது."

"நான் உங்களை நம்புகிறேன் என்பதைமீண்டும் எப்படி நிரூபிக்கமுடியும்?"

"ஏன் முடியாது? என் அழைப்புக்கு இணங்கினாலே நம்புவதை ஒப்புக்கொண்டாற் போலத்தானே?"

"ஒப்புக் கொள்கிறேன் என்றே வைத்துக் கொள்ளுங்கள், நகைவேழம்பரே. இந்த நள்ளிரவில் ஒரு துணையுமின்றி வெறுங் கையனாக உங்களோடு வந்தால்

நீங்கள் தனிமையில் என்னிடம் எப்படி நடந்து கொள்வீர்களோ என்று நான் சந்தேகப்பட இடமிருக்கிறதல்லவா ?''

" சந்தேகத்துக்கு இடமிருப்பதைப் போலவே சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளவும் இடமிருக்கிறது. சற்றுமுன் நான் எந்த நிலையில் இருந்தேன் என்பதை நினைத்துப் பாருங்கள். உங்களையெல்லாம் கூண்டோடு எமபுரிக்கு அனுப்பும் வாய்ப்பு என் கைகளில் இருந்தது. ஏன் அந்த வாய்ப்பை நான் பயன்படுத்திக் கொள்ளவில்லை? அதுதான் போகட்டும். இப்போது இந்த விநாடியில்கூட நீங்கள் தன்னந்தனியாகத்தான் என் எதிரில் நிற்கிறீர்கள். நான் உங்களை ஏன் விட்டு வைத்திருக்கிறேன் ? நம்பிக்கையை உண்டாக்கிக் கொள்ள ஒரேவழி தான் இருக்கிறது. அதை நீங்கள் செய்ய வேண்டும்.''

" என்ன செய்ய வேண்டும் நான் ?''

" பெரிதாக ஒன்றும் செய்ய வேண்டாம். அவநம்பிக்கை கொள்ளாமல் இருக்க வேண்டும். நம்பிக்கை வளர அதுவே போதும்.''

பெருநிதிச் செல்வர் நகைவேழம்பரின் ஒற்றைக் கண்ணில் அந்த நம்பிக்கையைத் தேடுகிறவர் போல் அவரையே பார்த்துக் கொண்டு நின்றார். நகைவேழம்பர் அவருடைய சஞ்சலத்தைக் கண்டு சிரித்தார்.

" நான் பழைய நாட்களில் நடிகன். முகத்திலும், கண்ணிலும் எந்த உணர்ச்சியின் சாயலையும் என்னால் மறைத்தும், மாற்றியும் காண்பிக்கச் செய்யமுடியும். என்முகத்தையும், கண்ணையும் பார்த்து நீங்கள் ஒன்றும் தெரிந்து கொண்டுவிட முடியாது. என் மனத்தையும், நான் கூறிய சொற்களையும் நம்பினால் என்னோடு வாருங்கள்.''

" அவற்றிலும் நடிப்பு இருக்க முடியாதென்பது என்ன நிச்சயம் ?''

" இப்படி வாதம் புரிந்தால் இதற்குப் பதிலே சொல்ல முடியாது ! மறுபடியும் முன்பு சொல்லியதையே திருப்பிச் சொல்கிறேன். நம்பிக்கையை வளர்த்துக் கொள்வதற்கு ஒரே வழி அவநம்பிக்கைப் படாமல் இருப்பதுதான்.''

நெடுநேரத் தயக்கத்துக்கும், சிந்தனைக்கும் பின்பு பெருநிதிச்செல்வர் அந்த நடுநிசிப் பொழுதில் நகைவேழம்பருடனே தனியாகப் புறப்பட்டுச் சென்றார்.

நடந்து போகும்போது இருவரும் பேசிக் கொள்ளவில்லை. ஒரு காலைச் சாய்த்துச் சாய்த்து நடக்கவேண்டியிருந்ததனால் பெருநிதிச் செல்வர் வேகமாக நடக்க முடியாமல் திணறினார். எங்கே போகிறோம் என்பதே தெரியாமல் நகைவேழம்பரைப் பின்பற்றி நடப்பதனால் உண்டான பயம் வேறு அவர் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தது. அக நகர எல்லையைக் கடந்து காவிரி



கடலோடு கலக்குமிடத்தை நெருங்கி வந்துவிட்டிருந்தார்கள் அவர்கள். மக்கள் பழக்கமே இல்லாத இரவு நேரமாகையினால் பகலில் இயற்கையழகு பொலியும் அந்த இடம் இப்போது பயப்படுவதற்குஉரியதாயிருந்தது. நதிக்கரைப் படுகையில் ஆள் நடந்தால் தோற்றம் மறைந்து போகிற உயரத்துக்கு நாணற்

காடு புதர் மண்டியிருந்தது. பஞ்சு பூத்ததுபோல் வெண்மையாக நீண்ட நாணற் பூங்கதிர்கள் இருளில் மங்கலாகத் தெரிந்தன. நாணற் புதரில் காற்று ஊடுருவுவதால் உண்டான சரசரப்பு ஓசையும், நீரலைகளின் சப்தமும், விட்டு விட்டு ஒரே சுருதியில் கேட்கிற தவளைக் குரலும், சூழ்நிலையின் பயங்கரத்துக்குத் துணைகூட்டின. ஊளையிட்டுக் கொண்டே நரிகள் புதரில் விழுந்தடித்துக் கொண்டு ஓடுகிற ஓசையும், நதி நீருடன் கரை சரிந்து தணியுமிடத்தில் நீர் நாய்கள் துள்ளும் சப்தமும், அவ்வப்போது எழுந்து அந்தப் பக்கமாக நடப்பவர்களுக்கு அச்சமூட்டிக் கொண்டிருந்தன.

## 18-நாணற்காட்டில் நடந்தது!

அந்த நாணற் காட்டின் நடுவே பெருநிதிச் செல்வரை அழைத்துக் கொண்டு சென்றார் நகைவேழம்பர்.

"இங்கே என்ன காரியம்? இவ்வளவு பெரிய காவிரிப்பூம்பட்டினத்தில் நீங்களும், நானும் பேசுவதற்கு இடமில்லையென்று இங்கே அழைத்துக் கொண்டு வந்தீர்கள்?"

மேலே நடப்பதை நிறுத்தி விட்டுச் சந்தேகமுற்ற மன நிலையில் இந்தக் கேள்வியைக் கேட்டார் பெருநிதிச் செல்வர்.

"காரியம் இல்லாமலா அழைத்துக் கொண்டு வருவேன்? பயப்படாமல் நடந்து வாருங்கள்" என்று உள்நோக்கத்தை வெளிப்படுத்தாத அடங்கிய குரலில் கூறிவிட்டு நகைவேழம்பர் மேலே நடந்தார்.

"என்னால் நடக்க முடியவில்லை. கால் தளர்ந்து வருகிறது" என்று சொல்லிக் கொண்டே மேலே செல்லாமல் நின்று கொண்டார் பெருநிதிச்செல்வர். 'மேலே போக வேண்டாம்—போவது நல்லதற்கல்ல' என்று அவருடைய மனக்குறளி சொல்லிற்று.

"அடடா! நீங்களே இப்படி அதைரியப் படலாமா?" என்று கூறியவாறே அருகில் வந்து பெருநிதிச்செல்வரின் கையைப் பற்றினார் நகைவேழம்பர். அவருடைய கை நடுங்கிக் கொண்டிருந்தது. பிடியை விடுவித்துக் கொண்டு திரும்பி நடக்கலானார் பெருநிதிச் செல்வர். எந்த நினைப்பினாலோ தெரியவில்லை; அவருக்கு நடக்கும்போதே கைகால்கள் நடுங்கின.

"அவசரப்படாதீர்கள்! கொஞ்சம் இப்படித் திரும்பிப் பார்த்துவிட்டுப் போகலாம் அல்லவா?" என்று மிக அருகே பின்னாலிருந்து நகைவேழம்பரின் குரல் கேட்டதைத் தொடர்ந்து தம் தோளில் அவர் கை நீண்டித் தடுப்பதையும் பெருநிதிச்செல்வர் உணர்ந்தார். வேகமாகத் துடிக்கும் நெஞ்சுடன் திரும்பிப் பார்த்தார்.

அவர் அப்படிப் பார்த்தபோது நகைவேழம்பர் இருந்த கோலம் அவரைச் சிலிர்ப்படையச் செய்தது.

குறுவாளை ஓங்கிக் கொண்டு கொலை வெறியராகப் பாய்வதற்கு நின்று கொண்டிருந்தார் அவர்.

"இப்போது இந்த இடத்தில் நான் உங்களைக் கொன்று போட்டால் என்னை ஏனென்று கேட்பாரில்லை...."

வார்த்தைகளைத் தொடர்ந்து பேய்ச் சிரிப்பு ஒலித்தது. ஓங்கிய வாளும் நெருங்கிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு கணமும் ஒரு யுகமாக நகர்ந்தது. பெருநிதிச் செல்வர் தாம் மோசம் போய் விட்டதை உணர்ந்தார்.

கடைசி விநாடி! அவருடைய உயிருக்கும் அந்த வாளின் கூர்மைக்கும் நடுவிலிருந்த காலத்தின் ஒரே ஓர் அற்ப அணு அது. அப்போது ஓர் அதிசயம் நடந்தது. நகைவேழம்பரின் ஓங்கிய கை தானாகவே தணிந்தது. வாளை இடுப்பிலிருந்து உறையிற் சொருகிக் கொண்டு இயல்பாக நகைத்தார் அவர்.

"இவ்வளவு பெரிய பயந்தாங்கொள்ளியாக இருக்கிறீர்களே? உங்களைச் சோதனை செய்து பார்த்தேன். உங்களிடம் சேர்ந்திருக்கும் செல்வம் உங்களுக்கு அளித்திருக்கிற தைரியத்தைத் தவிர, உங்களுடைய மனத்தில் உங்களுக்கென்று இயல்பிலே அமைந்திருக்கும் தைரியம் எவ்வளவு என்று தெரிந்து கொள்வதற்காகவே இப்படிச் செய்தேன். பாவம்! நீங்கள் அநுதாபத்துக்குரியவர். பயப்படாதீர்கள், உங்களை ஒன்றும் செய்துவிட மாட்டேன். ஆனால் ஒன்றை மட்டும் நினைவில் நன்றாகப் பதித்துக் கொள்ளுங்கள். எப்போதாவது என்னுடைய உயிருடன் விளையாட ஆசைப் பட்டீர்களோ, தொலைந்தீர்கள். நான் நன்றியுள்ளவனாக இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டால் முதலில் நீங்கள் நன்றியுள்ளவராக இருக்கப்

பழகிக் கொள்ள வேண்டும். இதை மறந்து செயல்படத் தொடங்கினால் முதலில் சாகிற உயிர் என்னுடையதாக இராது'' என்றார் நகைவேழம்பர்.

எல்லாவற்றையும் கேட்டபடி பெருநிதிச் செல்வர் குனிந்த தலை நிமிராமல் இருளோடு இருளாக நின்றார். அவர் நின்ற நிலையே எதிரியிடம் மன்னிப்புக் கேட்பது போல் இருந்தது.

நகைவேழம்பரும் பெருநிதிச் செல்வரும் அன்றிரவு அந்த நாணற்காட்டில் ஒருவரை யொருவர் சோதனை செய்து கொண்டபின் திரும்பவும் நண்பர்களாக மாற வேண்டிய நிலைதான் ஏற்பட்டது. அவர்களுடைய நட்பிலும் பகையுண்டு. பகையிலும் நட்பு உண்டு. பகை, நட்பு, என்னும் நேர்முரணான குணங்கள் அவர்களைப் பொறுத்தவரை நேர்முரணாகவும் இருப்பதில்லை. நேர் நெருக்கமாகவும் இருப்பதில்லை. அவர்களுக்கு நடுவே உறவைப் பின்னியிருந்த இரகசியங்களைப் பொறுத்த அந்தரங்கம் அது.

அன்று. அதே இடத்தில் காவிரிப் படுகை மணலில் விடிகிற வரை அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள் அவர்கள். பல பழைய சம்பவங்களை ஒருவருக்கொருவர் நினைவுபடுத்திக் கொண்டார்கள். ஓர் உண்மையை மனம் நெகிழ்ந்து ஒப்புக் கொண்டார் பெருநிதிச் செல்வர் :

''நகைவேழம்பரே! நீங்கள் கூறிய பின்பு என்னுடைய தைரியத்தின் எல்லை எனக்கே புரிகிறது. எழுடுக்கு மாளிகையையும், செல்வத்தையும் எட்டிப் பட்டத்தையும், ஏவலாட்களையும் விட்டு விலகித் தனியாய் நிற்கும்போது நான் பலவீனமாகி விடுவது உண்மைதான்.''

''பலவீனம் எல்லாருக்கும் உண்டு, ஐயா! நான்கூட ஒரு சமயம் உங்கள் பெண் சுரமஞ்சரிக்கு முன்னால் நடுங்கி நின்றிருக்கிறேன். அவளுடைய அலங்கார மண்டபத்தில் அவள் தன் தோழியோடு பேசிக் கொண்டிருந்த செய்தி ஒன்றை நான் திரைமறைவிலிருந்து கேட்க முயன்றேன். அவள் அதைத் தந்திரத்தால் கண்டு கொண்டாள். அப்போது நான் தலை குனிய வேண்டியதாயிற்று. கோழைத்தனத்தால் தலைகுனியவில்லை. ஒட்டுக் கேட்க வேண்டுமென்ற ஆசையால் ஒரு பெண்ணின் அலங்கார மண்டபத்துக்குள் நுழைந்தது தவறு தான் என்று உள்ளூற எனக்கே பய



மிருந்ததுதான் காரணம். நான் அப்படிச் செய்ததைப் பற்றி நீங்களோ உங்கள் பெண்ணோ என்னைக் கூப்பிட்டுக் கண்டித்திருந்தால் கூட நான் தலை குனியத்தான் செய்வேன். ஆனால் அந்த நாணத்தை நீங்களோ உங்கள் பெண்ணோ என்னுடைய அதைரியமாக நினைத்து விட்டால் என்னால் பொறுக்க முடியாது.''

"நீங்களும் உங்கள் பேச்சும் எப்போதும் புதிராகவே இருக்கிறீர்கள்.''

"இருக்கலாம். ஆனால் பாலில் நஞ்சு கலந்து கொடுப்பதால் அந்தப் புதிருக்கு விடை கிடைத்து விடாது.''

"பார்த்தீர்களா? நண்பரான பின்பு மறுபடியும் பகையை உண்டாக்கிப் பேசுகிறீர்களே?''

"பேச்சில் என்ன இருக்கிறது? நண்பர்களைப் போல் பேசிக் கொண்டிருந்து விட்டுப் பகைமையான செயலைச் செய்வதும், பகைவர்களைப் போலப் பேசிக் கொண்டிருந்து விட்டு நட்புக்கான காரியத்தை நடத்துவதும் நமக்குள் புதுமை இல்லையே?'' என்று மேலும் ஆழமாக நெஞ்சில் இறங்கும்படி குத்திப் பேசினார் நகைவேழம்பர். பெருநிதிச்செல்வருக்குச் சுருக்கென்று தைத்தது இந்த வார்த்தை.

"நான் வேண்டுமானால் உங்களுக்குச் சத்தியம் செய்து தருகிறேன். பக்கத்திலுள்ள கடலும், காவிரியும் சாட்சியாக நாமிருவரும் இனிமேல் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பதில்லை என்று வைத்துக் கொள்ளலாமே?''

"வேண்டவே வேண்டாம். சத்தியம் சபதம் இப்படிப்பட்ட வார்த்தைகளின் பொருளை உங்களாலும் காப்பாற்ற முடியாது. என்னாலும் காப்பாற்ற முடியாது. தொடக்க நாளிலிருந்தே நியாயத்திலிருந்து வெகு தூரம் வழிவிலகி வந்து விட்டோம் நாம். எல்லாரும் நியாயமாகச் சொல்கிற வழிக்கு நாம் இனிமேல் திரும்புவதைவிட நாம் வந்துவிட்ட வழிதான் நமக்கு நியாயம் என்று வைத்துக் கொள்வது நல்லது.''

பொழுது புலரும் வேளை நெருங்கிக் கொண்டிருந்தது. இருளில் மங்கலாகத் தெரிந்து கொண்டிருந்த நாணற்பூக்கள் வெண்பனிப் பாய் விரித்தாற்போல் நெடுந் தொலைவுக்குத் தோன்றின. நகைவேழம்பரும், பெருநிதிச் செல்வரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். நண்பகல் வானம்போல் இரண்டு பேருடைய முகங்களிலும் எந்த உணர்ச்சியும் அதிகமாகத் தெரியாத அமைதி நிலவியது. நேற்றிரவு இதே நாணற் புதரில் பெருநிதிச் செல்வருடைய முகம் எப்படித் தோன்றியிருக்கும் என்று நகைவேழம்பர் தமக்குள் கற்பனை செய்து பார்க்க முயன்றார். அதே போல் நகைவேழம்பர் முகம் எப்படித் தோன்றியிருக்கும் என்று பெருநிதிச் செல்வர் கற்பனை செய்து பார்க்க முயன்றார்.

மேலே நடக்க வேண்டிய செயல்களைப் பற்றிப் பேசிக் கொண்டே இருவரும் எழுந்து நடந்தார்கள். நீலநாக மறவருடைய உதவியால் ஓவியன் தப்பிவிட்டதையும், இளங்குமரனின் சித்திரம் படைக்கலச் சாலையில் பறித்து வைத்துக் கொள்ளப்பட்டதையும், சுரமஞ்சரியின் மணிமாலை ஓவியனிடம் இருப்பதையும் விவரித்துச் சொல்லிக் கொண்டே நடந்தார் நகைவேழம்பர்.

"அருட்செல்வ முனிவருடைய தவச்சாலை தீக்கிரையான பின்பு இளங்குமரன் ஆதரவிழந்து போவான் என்று நினைத்தோம். இப்போதோ முன்னைவிடப் பலமான ஆதரவாக நீலநாகமறவரின் துணையில் அவன் இருக்கிறான்'' என்றார் பெருநிதிச்செல்வர்.

"நீலநாகமறவர் மட்டுமில்லை. புறவீதியிலிருக்கும் அந்தக் கிழவர் வீரசோழிய வளநாடுடையாரும், அவர்களையெல்லாம் விடப் பெரிய ஆதரவாக

உங்கள் பெண் கரமஞ்சரியும் வேறு இருக்கிறாள்'' என்று கரமஞ்சரியின் உள்ளம் இளங்குமரனுக்கு வசப்பட்டிருப்பதையும் நினைவூட்டினார் நகைவேழம்பர்.

அவர்கள் பேசிக் கொண்டே நெய்தலங்கானலுக்கு அருகே வந்திருந்தனர்.

''இனிமேல் கரமஞ்சரி மாளிகையிலிருந்து வெளியேற முடியாதபடி தடுத்து விட்டால் நல்லது என்று தோன்றுகிறது. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று எங்கோ வேறு பக்கம் பார்க்கத் தொடங்கியிருந்த நகைவேழம்பரைக் கேட்டார் பெருநிதிச் செல்வர்.

இந்தக் கேள்விக்கு மறுமொழி கூறாமல், ''அதோ காமன்கோவில் வாயிலில் குளக்கரையில் நிற்கிறவர்களைப் பாருங்கள்'' என்று பெருநிதிச் செல்வரின் கவனத்தைத் திருப்பினார் நகைவேழம்பர். பெருநிதிச் செல்வர் பார்த்தார்.

இரு காமத்திணையேரியின் கரையில் நீராடிய கோலத்தோடு கையில் காமன் கோவிலில் வழிபடுவதற்குரிய பொருள்களை ஏந்தியவளாய்க் கரமஞ்சரியே தன் தோழியுடன் நின்று கொண்டிருந்தாள்.

''காமன் கோயில் வழிபாடு யாருக்காகவோ?'' என்று மெல்லச் சொல்லிச் சிரித்தார் நகைவேழம்பர். எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்தது போலிருந்தது அந்தச் சிரிப்பு. (தொடரும்)

# வட்டமேஜை



## ஞான விவேகியின் அறிவுரை

ராஜாஜி அவர்களின் திருமூலர் தவமொழி விளக்கம் ஜூலை 16ந் தேதி சிறப்புற அமைந்திருக்கிறது. உணர்ச்சி, ஆர்வம், சிந்தனை இவைகளுடன் ஊன்றிப் படிக்கும்போது, அதில் பொதிந்துள்ள உன்னதக் கருத்துக்களைத் தெளிவுபடப் புரிந்துகொள்ள முடியும்.

மனித உடலில் உயிர் இருக்கும்வரை 96 தத்துவங்கள் வேலை செய்கின்றன என ஆதாரத்துடன் விளக்குகிறார். உண்மை. இத் தத்துவ இயக்கங்கள் ஒருவனிடம் சரியாக விளங்குமாயின் அவன் அரசியல் ஞானியாகவும், ஆத்ம ஞான விவேகியாகவும், கலை வல்லுநராகவும் விளங்குகிறான். ஆனால் அதர்ம வழியில் செல்லும் ஒருவனிடம் இந்த இயக்கங்கள் சரிவர இயங்காது.

உதாரணமாக, எல்லோருக்கும் பேச, கேட்க, பார்க்க, உண்டு களிக்க, ஈகை இரக்கம் காட்ட, நல்லவை செய்யத் தத்துவ இயக்கம் உண்டு. என்றாலும் ஏழை, எளியவர்களை அரசியல் சதுரங்கப் பாவையாக நினைத்துப் பணம், பதவி, படாடோபம் இவைகளால்செருக்குற்றவனுக்கு 96 தத்துவங்களும் சரியாக இயங்குவதில்லை. எப்படி? அவனுக்குப் பார்வை யிருக்கிறது. ஆயின் எளிமையைக் காண முடிவதில்லை. பேசச் சக்தி யிருக்கிறது. வறுமையை எதிர்த்துப் பேச வலுவில்லை. அவதிப்படுவோரின் கூக்குரலுக்குச் செவிசாய்ப்பதில்லை. உண்டால் ஜீரணமாவதில்லை. எவரும் பேசினால் பிடிப்பதில்லை. அதனால் சமதர்ம சத்திய கூறுபாட்டுகளுக்கு எதிரிடையான அதர்ம வழிகளால் அவனது 96 தத்துவங்களும் சரியாகச் செயல்படுவதில்லை. உயிர் மட்டும் அவன் உடலில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. உணர்ச்சியற்ற, சிந்தனைத் தெளிவற்ற, மன அமைதியற்ற நடைப் பிணமாகவே உலகில் உலவி வருகிறான். இறுதியில் பரம்பொருளையே சரியாய்க் கண்டுணரக் கூடாத அவல நிலையில், பஞ்சமா பாதகங்களுக்கு அடிமைப் பட்டவனாய் அவலமாய் இறுதிநிலை எய்துகிறான். ராஜாஜியின் விளக்கவுரை அரசியல், சமூகம், தனி வாழ்க்கை, ஆத்மீக நிலை ஆகிய ஒவ்வொன்றுக்குமே ஆதார பூர்வ விளக்கமாக அமைந்துவிட்டது. அரசியல் ஆத்ம, ஞானவிவேகியின் அறிவுரைக்கு அனைவரும் செவி சாய்ப்போமாக.

மணப்பாறை
15—7—61

சி. எம். ராஜா



## மும்முனைப் போட்டி ஒழியுமா?

நான்கு ஆண்டுகளாக நிவர்த்திக்கப்படாத, தீர்க்கப்படாத குறைகளெல்லாம் தேர்தல் சமயத்தில் கவனிக்கப்படுகிற நிலையில் இருக்கின்றன. நெசவாளர்களை அதிகமாகக் கொண்ட காஞ்சிக்கு நூல் மில் தேவை என்று பலர் பல ஆண்டுகளாகக் கூறிவந்தார்கள். எத்தகையதுமான முயற்சியும் எடுக்கப்படவில்லை. தேர்தல் நெருங்கி வருகிற காரணத்தால் நாற்பது லட்சம் ரூபாய் செலவில் நூற்பு மில் ஏற்படுத்தலாம் என்ற பேச்சு அடிபடுகிறது.

நகர காங்கிரஸ் கட்சிப் பிரமுகர் ஒருவர் முதன் மந்திரி பேச இருந்த கூட்டத்தில் பேசியதாவது: "ஓட்டு எதிர்க் கட்சிக்கு நீங்கள் போட்டுவிட்ட போதிலும், இன்று உங்கள் குறைகளைக் கவனிக்கும்படி காங்கிரஸ்காரர்களிடம்தான் வரவேண்டி யிருக்கிறது." இந்தப் பேச்சை என்னென்பது! குறிப்பிட்ட கட்சி பெரும்பான்மை ஸ்தானங்களைப் பெற்றதால் ஆட்சியை மேற்கொள்ளுகிறது. ஆட்சிக்கு வந்தவுடன், தாங்கள் வெற்றிபெறாத இடங்களிலும்கூட மக்கள் குறைகளைக் கேட்டு அவர்களுக்கு ஆவன செய்வதுதான் ஆள்பவர்களின் கடமை.

தற்பொழுது நடக்கிற பணநாயகத்தை முறியடிக்க, ஜனநாயகம் நன்கு நடைபெற, சுதந்திரம் பெற்றதின் பலனை அடைய வருகிற பொதுத் தேர்தலில் மும்முனைப் போட்டி தவிர்க்கப்பட வேண்டும். எதிர்க் கட்சிகள் ஓர் உடன்பாடு செய்து கொண்டு வருகிற தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்கு எதிராக நிற்க வேண்டும்.

சின்னகாஞ்சிபுரம்
17—7—61

எ.எஸ்.ஆர்.எஸ். வாசன்

# பிளாஸ்டிக்கின் இந்த அழகிய வீட்டிற்கான சாமான்களை உபயோகித்து



## நாகரீகமாகவும் உல்லாசமாகவும் இருங்கள்

சௌகர்யத்திற்கும், நீண்ட நாள் உழைப்பு தரும்-பிரைட் பிளாஸ்டிக் சாமான்களைப் போல் வேறொன்றும் இல்லை. இவை நவீன இல்லங்களில் எல்லோராலும் உபயோகிக்கப்படும் சிறந்த சாமான்கள். வர்ண மயமான, நீண்ட நாள் உழைக்கக்கூடிய மற்றும் சௌகர்யமான இந்த சாமான்களை நீங்கள் ஒரு முறை உபயோகிக்கத் தொடங்கினால், இவைகளை நீங்கள் எப்பொழுதுமே உபயோகிக்க விரும்புவீர்கள். அழகான வர்ணங்கள், நேர்த்தியான தயாரிப்பு மற்றும் சிறந்த தன்மை முதலானவைகளுக்கு பிரைட் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள்-பிரைட் தான் வேண்டுமென்று கேளுங்கள்.

**Brite**

## பிரைட் பிளாஸ்டிக்ஸ்

பிரைட் பிரதர்ஸ் பிரைவேட் லிட்., 155-A, தார்தேவ் ரோட், பம்பாய்-7.




## 35. தாயகம் திரும்பினேன்

**பி.** பி. ஸி. யிலே ஒலிபரப்புப் பயிற்சிக்காகப் பணிபுரிந்த நாட்களும், பிறகு ஆங்கில நாட்டின் கலையையும் பண்பாட்டையும் தெரிந்து கொள்வதற்காகப் பல இடங்களுக்கும் சென்று சுற்றிய நாட்களும் வேகமாகவே ஓடி விட்டன. இனி இந்தியாவுக்குப் புறப்பட இன்னும் ஒரு வாரந்தான் இருந்தது என்ற போது, நாட்கள் ஓடக் காணோம். நடக்கக்கூட இல்லை. ஊர்ந்து ஊர்ந்து நகருவது போல் இருந்தன! பெட்டியை மூடுவதும் திறப்பதும் சட்டைகளை எடுப்பதும் மறுபடியும் வைப்பதுமாக ஒருவித படபடப்பு உடம்பெல்லாம் பிடித்து ஆட்டியது! எதிலும் பிடிப்பு இல்லாமல் மனத்தில் அர்த்தமற்ற ஓர் அவசரம் உண்டாயிற்று! "ஆறு மாதம் கழிந்தது பெரிதில்லை, இந்த ஒரு வாரமும் எப்படித்தான் கழியப் போகிறதோ!" என்று இருந்தது!

பி.பி.ஸி. நண்பர் கிருஷ்ணமூர்த்தி இந்த ஒரு வாரத்திலும் பல நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்திருந்தார். ஏற்கனவே லண்டன் தமிழ்ச் சங்கத்தின் வள்ளுவர் விழாவிலும், வேறு சில ஆங்கில இலக்கியச் சங்கங்களின் சிறப்பு நிகழ்ச்சிகளிலும் இந்த ஆறு மாத காலத்தில் நான் கலந்து கொண்டதுண்டு. இப்பொழுது ஊருக்குப் புறப்படும் முன்பு லண்டன் தமிழ்ச் சங்கத்தில் ஒரு சிறப்பு நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டது. இதுதவிர இங்கிலாந்தின் கவிஞர் கழகம் என்ற மிக முக்கியமான ஆங்கில எழுத்தாளர் சங்கத்தில் தமிழ்க் கவிதைகளைப் பற்றி ஓர் ஆங்கிலச் சொற்பொழிவு ஏற்பாடு செய்திருந்தார்கள்! நமது பழைய இலக்கியத்திலிருந்து ஆங்கிலேயர்கள் அனுபவிக்கக் கூடிய கவிதைகள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சொல்லி, நமது கவிதையின் சிறப்பியல்புகளை அந்த ஆங்கிலக் கவிஞர்களுக்கு விளக்கம் செய்ய வேண்டும் என்று ஏற்பாடு. இந்த நிகழ்ச்சி தவிர லண்டனிலுள்ள தமிழ் நண்பர்கள் சிலரும் சில பிரிவுபசார நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்து மிக்க அபிமானத்தோடு கௌரவித்தார்கள்.

லண்டன் விமான நிலயத்திலிருந்து மாலை நேரம் எங்கள் விமானம் கெய்ரோ நோக்கிப் புறப்பட்டது. லண்டனிலுள்ள எனது புதிய நண்பர் ஸ்ரீ பானு விமான நிலயத்துக்கு வந்து அளவற்ற அன்போடு வழியனுப்பி வைத்தார்.

நட்ட நடுநிசியில் விமானம் கெய்ரோவை நெருங்கியது. அப்போது நிலவிலே விமானச் சாளரத்தின் வழியாகப் பார்த்தேன். எகிப்து தேசத்தின் புகழ்பெற்ற பிரமிட்கள் பாலைவனப் பிரதேசத்திலே நின்று நிலவிலே குளித்துக் கொண்டிருந்தன! அந்தக் காட்சி மிக்க வனப்பாக இருந்தது.

இரவு இரண்டு மணிக்குக் கெய்ரோ நகரத்தின் விடுதி ஒன்றுக்குப் போய்ச் சேர்ந்தேன். அன்றும் மறுநாளும் அந்த ஊரிலே தங்கல்! எகிப்து தேசத்தின் சிறப்பு நைல் நதியோடும் பிரமிட்களோடும் இணைந்து விளங்குகிறது! எகிப்தை "நைல் நதியின் நன்கொடை" என்றே அழைப்பார்கள். நைல் நதியின் வளத்தினால் செழிப்பும் சிறப்பும் பெற்ற நாடுதான் எகிப்து! ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாகரிகமும் மனிதப் பண்பாடும் மிக உயர்ந்த முறையிலே உருவாகி நின்ற பிரதேசம் அது! தேசத்துக்கு வளம் தந்த நைல் நதி திடீர் திடீரென்று வெள்ளப் பெருக்கு எடுத்துச் சேதமும் விளைத்து வந்தது! அந்த நதியின் குணம் ஒரு சட்ட திட்டத்துக்கு உட்பட்டதாக இல்லையே என்று கண்ட பழைய எகிப்து மக்கள், அந்தக் கவலை காரணமாகவே இயற்கையை ஆராய்ந்து காணும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டார்கள். நைல் நதியின் தண்ணீரை அடக்கி ஆள்வது எப்படி, அதில்



பிரமிட்

எப்பொழுது வெள்ளம் வரும், வானத்தில் மேகங்கள் எப்பொழுது சூழ்கின்றன, மழை எப்படிப் பெய்கிறது, தண்ணீரின் திசை எப்படிச் செல்கிறது என்றெல்லாம் ஆராய ஆரம்பித்தார்கள்! இதனால் அந்த நாட்டில் வான சாஸ்திரமும், இயந்திர நுட்பக் கல்வியும் பிற கலைகளும் வளர்ந்து சிறப்புப் பெற்றன. கட்டடக் கலையில் பல மகத்தான சாதனைகளை அவர்கள் செய்தார்கள்! இதோடு தேவதைகளின் ஆவாகனம், சூரியன் வழிபாடு, மந்திர ஜாலங்கள், சூனிய வேலைகள் முதலிய தந்திரக் கல்வியும் அந்நாட்டிலே வளர்ந்தது.

எகிப்து மன்னர்கள் இறைவனின் வடிவமே என்று மக்கள் நம்பினார்கள். மனிதன் இறந்த பின்னும் அவனுக்கு வாழ்க்கை இருக்கிறது என்று நினைத்தார்கள். இறந்தவர்களை அடக்கம் செய்து மரணத்துக்குப் பின் அவன் வாழ்வதற்காக அவன் உபயோகித்த உடைகள், அணிகலன்கள், அவனுக்குப் பிடித்தமான பொருள்கள் முதலியவற்றை அவனுடைய கல்லறையிலேயே வைத்தார்கள். இறந்தவர்களின் கல்லறைகளை வழிபட்டார்கள். அதோடு இறந்த உடலை அழிந்து போகாமல் விஞ்ஞான முறையிலே பாதுகாத்து வைக்கும் கலையைக் கற்றார்கள். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மடிந்த மனிதர்களின் உடம்புகள் இன்னும் பாதுகாக்கப்பட்டுக் கெய்ரோக் காட்சிச் சாலையிலே இருக்கின்றன என்றால் ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? ''மம்மி'' என்று அழைக்கப்படுகிற இந்தப் பழைய உடம்புகள் கெய்ரோவில் மட்டுமல்லாமல், லண்டன் காட்சிச்சாலையிலும் இங்கிருந்து எடுத்துக் கொண்டு போய்க் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டிருக்கின்றன!

நைல் நதியின் இக்கரையிலே செழிப்பான சோலைகளோடு கூடிய கெய்ரோ நகரம்! அக்கரையில் மணற்பாங்கான பாலைவனம்! அந்தப் பாலைவனத்திலேதான் பிரமிட்கள் என்ற செய்குன்றுகள் நிற்கின்றன!

எகிப்து தேசத்துப் பழைய மன்னர்களின் உடலைத் தைலங்களினாலும் மற்றப் பொருள்களினாலும் ''பாடம்'' செய்து பாதுகாத்து, தங்கத்தினாலான கல்லறைப் பெட்டிகளிலே விலையுயர்ந்த பொன்னும் நவரத்தினங்களும் அலங்காரப் பொருள்களும் அந்த மன்னர்கள் உபயோகித்த அணிகலன்களுமாகச் சேர்த்து வைத்து அடக்கம் செய்து, அந்த இடத்திலே செய்குன்றுகளை நிர்மாணித்தார்கள் எகிப்து அரச வம்சத்தினர். மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கற்களைக் கொண்டு அடுக்கி அடுக்கிப் பெரிய பெரிய கோணக் குன்றுகளை இந்த மக்கள் எப்படிக் கட்டினார்கள் என்பது இன்றும் பொறியியல் நிபுணர்களுக்கு ஒரு வியப்பாகவே இருந்து வருகிறது!

ஒட்டகத்திலே ஏறிச் சென்று பாலைவனப் பிரதேசத்திலேயுள்ள இந்தக் குன்றுகளிலே ஏறுகிற யாத்திரிகர்கள் ஏராளம்! நான் இந்தப் பாலைவனத்துக்குச் சென்றபோது காலை பத்து மணி. நம்மூர் மாதிரி வெயில் 'கன்' என்று கொளுத்திக் கொண்டிருந்தது! எனவே, பிரமிட்டில் ஏறுவது மிகவும் பிரயாசையாகவே இருந்தது. ஆனாலும் விடவில்லை! மேலே ஏறி ஒரு குகை வாசலில் நுழைந்தேன். குகைக்குள்ளே குறுகலான படிகள். மேலே மேலே ஏறுகின்றன! உடம்பை வளைத்துக் கொண்டு முதுகுப்புறமாகத்தான் ஏற வேண்டும்! அதாவது குகையின் வாசலைப் பார்க்கத் திரும்பி நின்று கொண்டு, பின்புறமாகக் காலை வைத்து ஒவ்வொரு படியாகப் பின்னோக்கி ஏறவேண்டும்! வளைந்த உடம்பை நிமிர்த்தினால் மேலேயுள்ள குகையின் மேல் தளத்தில் தலை மோதிவிடும்! இந்தப் படிக்கட்டு வரிசையில் ஒரு பர்லாங்கு ஏறுவது ஒரு மைல் ஏறுவது போல! இந்தப் படிக்கட்டுகளிலே ஏறி மேலே சென்றால் எகிப்து மன்னன் ஒருவனின் உடம்பை அடக்கம் செய்திருந்த அறை இருக்கிறது. பெரிய பெரிய கற்களாலானது. அந்த அறைக்குள்ளே காற்றும் வெளிச்சமும் வருவதற்காகச் சாளரங்கள் விட்டிருக்கிறார்கள். இறந்தவரின் உயிர் அந்தச் சாளரத்தின் வழியாக வந்து உடம்பைப் பார்த்துக் கொள்ளுமாம். அதோடு, இறந்தவரின் உயிர் அங்கு வந்து உட்கொள்வதற்காக உணவுகளும் அங்கே கொண்டு வைப்பார்களாம்!

இந்தப் பிரமிட்கள் தவிர அந்தப் பிரதேசத்தில் ஒரு பழைமையான கோவில் இருக்கிறது. இதன் தோற்றமும் சிதைந்துபோன சான்றுகளும் பார்த்தபோது மனத்தில் ஏதேதோ எண்ண அலைகள் பொங்கி எழுந்தன! ஒரு பெரிய மனித சமூகத்தின் தொன்மையான பழக்கங்களும், பழைய நம்பிக்கைகளும், வழிவழியாக வந்த பல ஆசாரங்களும் சடங்குகளும் அந்தப் பிரதேசத்தை நிரப்பி நிற்கின்றன. பொருள் புரியாத பல உருவங்கள், உட்பொருள் நிறைந்த சக்கரங்கள், ஓவிய எழுத்துக்கள், கல்வெட்டுக்கள், உள் அறைகள் என்று பல காட்சிகளை இந்தக் கோவில் வட்டாரத்திலே பார்த்தேன்!

பாலைவனத்தின் எல்லையற்ற வெளியிலே உலவியபோது அந்த மண்ணிலே மறைந்து நின்ற ஒரு பெரிய நாகரிகத்தின் நினைவு உள்ளத்தைத் தாக்கியது. மரணமும் வாழ்வும், மனித மனத்தின் போராட்டமும் ஆயிரம் ஆண்டுச் சரித்திரத்தோடு பின்னிப் பிணைந்து குன்றுகளாகவும், கற்களாகவும், கோவில்களின் சிதைந்த சிலைகளாகவும், பாலைவனத்தின் மணற் துகள்களாகவும் கண்முன் தோற்றம் அளித்தன!

பாலைவனத்திலிருந்து கெய்ரோ நகரத்துக்கு வந்து அங்குள்ள பெரிய 'காட்சிச்சாலை'க்குச் சென்றேன். உலகிலேயே மிகவும் பெரிது

என்று பாராட்டப்படும் சரித்திரக் காட்சி நிலையம் இது! நாட் கணக்கில் இல்லை, மாதக் கணக்கில் இல்லை, ஆண்டுக்கணக்கில் இங்கிருந்து ஆராய்ச்சி செய்த அறிஞர்கள் பலர்! சரித்திர நிபுணர்களுக்கும் புதைபொருள் ஆராய்ச்சியாளருக்கும் இந்தக் காட்சி நிலையமும், பிரமிட் என்ற செய்குன்றுகளும் ஆராய ஆராயப் புதுப் புதுச் செய்திகளை உணர்த்திக் கொண்டே யிருக்கின்றனவாம்!

இந்தக் காட்சிச் சாலையிலே பாடம் செய்யப்பட்ட உடம்புகளும், மறைந்த மன்னர்களின் தங்கக் கல்லறைப் பெட்டிகளும், விலைமதிப்பற்ற அணிகலன்களும் காட்சிப் பொருளாக வைக்கப்பட் டிருக்கின்றன. பழைய எகிப்து மன்னர்கள் எத்தனை செல்வச் செழிப்போடு வாழ்ந்தார்கள் என்பதற்கு இவையெல்லாம் சான்றுகள்! இவற்றின் மத்தியிலே அந்தக் காலத்து மக்கள் வழிபட்ட சக்கரங்கள், மந்திர எழுத்துக்கள், தாயத்துக்கள், பல வடிவங்களிலே தோற்றம் தருகிற ரக்ஷாபந்தனங்கள் முதலியன ஏராளம்! உள்ளத்தில் ஏதேதோ உணர்ச்சிகளை உண்டாக்கக் கூடிய ஜாலப் பொருள்கள், அதிர்ஷ்டக் கற்கள், குறளிப் பொருள்கள் என்று வரிசை வரிசையாக இருக்கின்றன. இவற்றில் சில மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியவை. இத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மனித சரீரத்தில் ரோமம், நகம் உள்பட உடல் முழுதும் அப்படியே அழியாமல் பாதுகாக்கப்பட்டு நிற்பது ஒரு பெரிய விந்தைதான்!

காட்சிச் சாலையின் ஒரு பகுதியிலே பழைய எகிப்து மக்கள் அத்தரும் வாசனைத் தைலங்களும் வடித்து உபயோகித்தார்கள் என்பதற்குச் சான்றாகப் பெரிய பெரிய ஜாடிகள் நிற்கின்றன. இவை தவிர அந்தக் காலத்து மலர்கள், அலங்காரப் பொருள்கள் பலவும் காட்சியிலே பாதுகாக்கப் பட்டுள்ளன! பதம் செய்யப்பட்ட கோதுமை வைத்திருக்கிறார்கள். எத்தனை ஆண்டுகள் ஆனாலும் கெடாமல் இருக்கிறது இந்தத் தானிய மணி! இவற்றை விதைத்தால் மறுபடியும் விளையும் என்று ஒருவர் சொன்னார். இதைப்பற்றிச் சந்தேகம் ஏற்படவில்லை எனக்கு! ஏனென்றால் அந்தக் காட்சிச்சாலையிலே மந்திர தந்திர மகேந்திர ஜாலப் பொருள்கள் அத்தனை பார்த்த பிறகு, இந்த வட்டாரத்தில் எதுவும் நடந்திருக்கும், எதுவும் நடக்கும் என்று ஒரே வார்த்தையில் சொல்லிவிடலாம்!

எகிப்துக் காட்சிச்சாலையிலேயுள்ள காட்சிப் பொருள்களில் மிகவும் முக்கியமானது, சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் அரசாண்ட டூடன் காமன் என்ற அரசனின் கல்லறைப் பொருள்கள்! தங்கச் செருப்பு, தங்க விரல் மூடிகள், தங்கக் கயிறுகள், தங்கப் பெட்டியும் சப்பரமும்!

கெய்ரோவின் இந்தக் காட்சிச்சாலையைச் சுற்றிப் பார்த்து விட்டு, எகிப்தியர்களின் ஓவிய எழுத்துக்களைச் சென்று பார்த்தேன். இந்த எழுத்துக்கள் தமிழ் மொழியோடுநெருங்கியதொடர்புள்ளவை என்று ஏற்கனவே கேள்விப்பட் டிருந்தேன். காலஞ்சென்ற தாயப்ப பிள்ளை என்னும் நண்பர் சென்னைத் தியாகராய நகரில் ஏழு ஆண்டுகளுக்கு முன்பு இந்த எழுத்துக்களைப் பற்றிச் சில ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். இந்த எழுத்துக்களின் மொழி தமிழிலிருந்து எழுந்ததே என்பது அந்த அறிஞருடைய கொள்கை. அவருடைய சொற்பொழிவுகளைக் கேட்டதன் பயனாக, இந்த ஓவிய எழுத்துக்களைக் கெய்ரோவிலுள்ள ஓர் ஆராய்ச்சியாளரோடு சென்று பார்த்தேன். கல்லறைகளில் அடக்கம் செய்யப்பட்டிருந்த மன்னர்களைப் பற்றிய செய்திகளைச் சித்திரங்களாலாகிய எழுத்துக்களிலே எழுதி வைத்திருக்கிறார்கள் அந்தக் காலத்துப் பழைய மக்கள்! எகிப்து நாட்டு மந்திர மாயச் சரித்திரத்தின் பல புதிர்களிலே இந்த எழுத்து முறையும் ஓர் அதிசய அம்சம்.

கெய்ரோவிலும் சில தமிழ் நண்பர்கள் இருக்கிறார்கள். இங்கும் ஒரு 'இந்தியா க்ளப்' இருக்கிறது. இந்த வட்டாரங்களைப் பார்த்து விட்டுத் தாய்நாடு நோக்கிப் புறப்பட்டேன். அப்போது இரவு இரண்டரை மணி!

விமானம் கிளம்பியதும் சாளரத்தின் வழியே பார்த்த போது, நைல் நதியும் அதன் ஒரு கரையில் வளமான நகரத்தின் மின்சாரப் பிரகாசமும், மறு கரையில் பாலைவனத்திலே எழுந்து நின்ற உயரமான பிரமிட் குன்றுகளும் தெரிந்தன! சில விநாடிகளில் அந்தக் காட்சி மறைந்தது. கண் இமைகளை மூடினேன். மனத்தின் முன் இன்பத் தமிழ் நாடு உற்றார் உறவினரோடும் தமிழ் நண்பர்களோடும் நிற்கக் கண்டேன். அந்த விநாடியே தாய் நாட்டுக்கு வந்து விட்டது போல் ஒரு களிப்பு மனத்தில் ஏற்பட்டது.

ஆறு மாதங்கள் இங்கிலாந்திலும் அதைச் சேர்ந்த நாடுகளிலும் ஐரோப்பாவிலும் இருந்து விட்டுத் தாய்நாடு திரும்பியதும் உள்ளத்தில் ஏற்பட்ட உவகையை எப்படிச் சொல்வது! பறவை தன்னுடைய கூட்டுக்குத் திரும்பும்போது எத்தனை உற்சாகமாக இருக்கிறது என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

ஆங்கில மக்களும் மனித ஜன்மமே. மனிதர்களிடம் உள்ள குறைகள் எல்லாம் அவர்க



பீ. பீ. ஸி. கிருஷ்ணமூர்த்தியுடன்

விடமும் உண்டு. ஆனால் வாழ்க்கையை ஒரு கலையாகக் கண்டு, கலையாகவே வளர்த்து, கலையாகவே வாழ்ந்து காட்டுகிற அரிய பண்பு அவர்களிடமிருக்கிறது. கலையை வாழ்வாகக் கொள்கிற உலகிலே, வாழ்வையே கலையாகக் காணுவது ஒரு தனிப் பண்பாகும்! இந்தப் பண்பு அவர்களிடமிருப்பதால், வாழ்வது என்பதையே ஒரு கலையாக வகுத்து, அதற்குரிய திட்டங்களோடு வாழ்க்கை நடத்தக் கற்றுள்ளார்கள் அவர்கள். அந்தக் கலையில் உள்ள குறைபாடுகளைக் காண்பதைவிட அதிலுள்ள சிறப்பியல்புகளைக் காண்பதே பயனுள்ள முயற்சியாகும். பாரத நாடு அவர்களுக்கு ஆன்ம அனுபவத்தைக் கற்றுக் கொடுத்து, அவர்களிடமிருந்து உலக வாழ்வு என்ற கலையின் நல்ல அம்சங்களைப் பயின்று கொண்டால் இரண்டு தேசங்களின் உறவிலும் ஜீவநாதம் ஒலிக்கும் என்பதையே இந்த ஆறுமாத அனுபவத்தில் உணர்ந்தேன். நம்மிடமிருந்து நமது இலக்கியங்களையும் தத்துவப் பண்புகளையும் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் ஆங்கில எழுத்தாளர்களிடம் இன்று நன்கு துலங்குகிறது என்பதில் சந்தேகமில்லை. ஊருக்குப் புறப்படுவதற்கு முன்பு, சிறந்த ஆங்கிலேய எழுத்தாளர்களும் கவிஞர்களும் கூடியிருந்த கவிஞர் கழகம் என்ற புகழ் பெற்ற அகில உலகச் சங்கத்தில் நான் சொற்பொழிவு நிகழ்த்திய போது இந்த ஆர்வத்தை நேருக்கு நேராகப் பார்த்தேன். லண்டனிலிருந்து புறப்பட்டுக் கொண்டிருந்த போது கவிஞர் கழகத்தின் தலைவரான முதுபெரும் புலவர், கவிஞர் ஆம்ஸ்ட்ராங்கிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் உள்ள பெருமை யனைத்தும் நமது புண்ணியத் தமிழ்நாட்டின் அற்புதக் கவிஞர்களான நமது முன்னோர்களின் பெருமைக்கு ஆங்கிலக் கவிஞர்கள் செலுத்திய வணக்கமாகவே கருதி மதிக்கிறேன்.

ராபர்ட் ஆம்ஸ்ட்ராங், நவம்பர் இரண்டு
தலைவர், கவிஞர் கழகம் 1960
லண்டன்

அன்புள்ள சோமு!

நீங்கள் உங்களுடைய தாய்நாட்டுக்குப் புறப்படுகிற சமயத்தில் உங்களுக்கு என் நல்வாழ்த்துக்களை அனுப்புகிறேன். உங்களுடைய முயற்சிகள் அனைத்திலும் உங்களுக்கு வெற்றி உண்டாகுமாக!

முதலில் ஒரு விஷயம் முக்கியமாகக் கூற விரும்புகிறேன் நீங்கள் இங்கு வந்து நிகழ்த்திய "இந்தியக் கவிதையும் தத்துவமும்" என்ற சொற்பொழிவைக் காட்டிலும் சிறப்பான ஒரு வாய்ப்பு எங்கள் கவிக்கழகத்துக்கு இதுவரை கிட்டியதில்லை. எங்கள் ஒவ்வொருவருக்கும் அது ஓர் எதிர்பாராத உணர்வாக இருந்தது.

உங்களைக் கண்டு பேசி நீங்கள் அன்பும் கலையாற்றலும் நிரம்பிய நண்பர் என்பதை ஏற்கனவே தெரிந்து கொண்டிருந்தேன். என்றாலும், உங்களுடைய இயல்பான அடக்கத்துக்குள்ளும் உங்களுடைய நகைச்சுவைக்குள்ளும் உங்களது மேடைப் பிரசங்கத் திறமையை அதுவரை மறைத்து வைத்துக் கொண்டே இருந்தீர்கள்! அன்று சரஸ்வதி மாதவன் அவர்கள் துதிப்பாடல் (மாசில் வீணையும்) பாடிய அந்த விநாடியிலிருந்து, நீங்கள் எங்கள் ஒவ்வொருவரையும் கொள்ளைகொண்டு விட்டீர்கள்! பூதிய மாதுமி மணமகளைக் கவர்ந்த கதையைத்தான் அதற்கு ஒப்பிடுவேன்!

உங்களுடைய சொற்பொழிவை விட உயர்ந்த ஒரு சொற்பொழிவை நான் இதுவரை கேட்டதில்லை. அதை ஒரு சொற்பொழிவு என்றே கூற மாட்டேன். மனம் ஒன்றி முழு நிறைவு பெற்ற ஒரு கவிஞன், தனது உள்ளத்தின் பொருளை உணர்வு, கலை அழகு, களிப்பு இம் மூன்று பண்புகளும் துலங்கும் வண்ணம், மனம் மயங்கிக் கேட்கும் மக்கள் கூட்டத்துக்கு ஒலி வீசினான் என்றே அதைச் சொல்லுவேன்.

உங்களுடைய வனப்பு, மதியாற்றல், உங்களுடைய ஞான நோக்கு இவற்றை நாடி என் இதயம் ஓடியது. உங்களை இந்த நாட்டிலிருந்து அனுப்பவே மனமில்லை. எனினும், இனி இங்கிலாந்தின் கவிஞராகிய நாங்கள் இங்கே என்ன செய்து வருகிறோம் என்பதைத் தெரிவிக்கவும், உங்களுடைய முன்னேற்றத்தைத் தெரிந்து கொள்ளவும் சென்னைக்கு எழுதுவேன். உங்களுடைய பெரு நாட்டுக்கும் எனது நாட்டுக்கும், உங்கள் தமிழ் மக்களுக்கும் பிறருக்கும், கிழக்கு நாடுகளுக்கும் மேற்கு நாடுகளுக்கும் இடையே ஒரு பாலமாகத் திகழ்ந்து நீங்கள் எதிர்காலத்தில் மேலும் பல அரிய சாதனைகளைச் செய்யப் போகிறீர்கள் என்பது உறுதி. உங்களுடைய வரவினால் எங்கள் கவிஞர் கழகத்துக்கு ஒரு புதிய சாளரம் திறந்தது. இனி அதை மேலும் மேலும் பயன்படுத்துவோம். நீங்கள் இனி மேல் இங்கிலாந்துக்கு எப்பொழுது வந்தாலும் எங்கள் கழகத்தின் அருமை விருந்தாளிக்கும் மேலாக விளங்குவீர்கள். நானும் என் மனைவியும் உங்களை ஒரு சகோதரராகவே கருதி வரவேற்போம்.

இனத்திலும், வளர்ப்பிலும், சூழ்நிலையிலும் வேறுபட்டிருந்துங்கூட நமக்குள் ஒரு நேச அலைவரிசையின் இசையொலியைக் கண்டு கொள்ளும் பேறு எங்களுக்குக் கிடைத்தது. உங்களை அறிந்து கொள்ள நேர்ந்ததை ஒரு பெருமகிழ்ச்சியாக மதிக்கிறேன். என் நல் வாழ்த்துக்கள். உங்கள் பயணம் நன்முறையில் அமைக!

என்றும் தங்களுடைய
ராபர்ட் ஆம்ஸ்ட்ராங்

இந்தக் கடிதம் கிடைத்தபோது ஊருக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்த சமயம். ஏற்கனவே என் சுற்றுப் பிரயாணங்களுக்கு மிகுந்த அக்கறையோடு பல உதவிகள் செய்தவரான லண்டன் செய்தித்துறை அதிகாரி க்ராம்டுவெல் கூக் என்ற நண்பர், தமது அன்பைப் பொழிந்து ஒரு கடிதம் எழுதியிருந்தார். அந்த அன்பின் அரவணைப்புக்கு மத்தியில் இந்தக் கடிதமும் வந்தது. ஒரு பெரிய நாட்டின் பெரிய அன்புக்கு என்னைப் பாத்திரமாக்கியவள் தமிழன்னை என்று வணங்கினேன்.

திருவருளின் துணையோடு ஆசி நல்கி என்னை வெளிநாடுகளுக்கு அனுப்பி வைத்த சான்றோர்களுக்கு என் அன்பையும் நன்றியையும் செலுத்துகிறேன். வாசக நேயர்கள் அனைவருக்கும் வணக்கம்! (முற்றும்)

# விரைவான, நிச்சயமான
# கெடுதலில்லாத

இருமலுக்கு
வீட்டிலேயே குணம் அளிப்பது




*Alembic*

# க்ளைகோடின்
# டெர்ப் - வசாகா

களைப்பும், வெறுப்புமூட்டும் வரட்டு இருமலுக்கு
வீட்டிலேயே கெடுதலில்லாத நிச்சய குணமளிக்கிறது.

AAG.278A TAM

# எல்லை இல்லை!

"எதற்கும் ஓர் எல்லை உண்டுடா" என்பார் என் தாத்தா. அவர் அடிக்கடி இப்படிச் சொல்லி வந்ததால் நானும் அதை முற்றிலும் நம்பி வந்தேன். ஆனால் சில மாதங்களுக்கு முன்னால் அவர் கண்களை மூடிய பிறகு எனக்கு அவர் சொன்னதில் நம்பிக்கை ஓரளவுக்குக் குறைந்து தான் போய் விட்டது.

"எதற்கும் ஓர் எல்லை உண்டுதான்; ஒரே ஒரு விஷயத்தைத் தவிர!" என்று நிச்சயமாகக் கூறுவேன் இப்போது. அந்த ஒரே ஒரு விஷயம்தான்—

தற்பெருமை!

தற்பெருமை அடித்துக் கொள்ளாத ஒரு நண்பன் கூட எனக்குக் கிடையாது. தேடித் தேடிப் பார்க்கிறேன் - ஊஹூம். பாதிரிக்கேனும் ஒருத்தன் அகப்பட்டால்தானே?

மைலாப்பூர் டர்மினஸ்க் 'க்யூ' நிற்கும் போது நண்பர்கள் ஆரம்பிக்கும் தற்பெருமைப் படலம், பாரிஸ் கார்னரில் இறங்கி அவரவர் ஆபீஸுக்குள் நுழையும் வரை நீடிக்கும். மீண்டும் மாலையில் தொடரும் கதைதான்!

"நான் அப்படிப் பண்ணுவேன்; நான் இப்படிப் பண்ணுவேன்!"—சதா இதே ஜபம் தான். ஒன்றுமே இதுவரை செய்யாத முழுச் சோம்பேறியாகவே இருக்கட்டும். அவனாவது வாயை மூடிக் கொண்டிருப்பானா? கிடையாது! "நான் அதைச் சாதிப்பேன்; நான் இதைச் செய்து முடிப்பேன்!"...

நான், நான், நான்!—எப்போது பார்த்தாலும், எதற்கெடுத்தாலும் நான்தான்!

அந்த 'நான்' தலைக்கு இடி விழாதா என்று தோன்றும்! ஆனால் அந்த நானுக்குள்ளே நானும் அடங்கியிருப்பதால், அதாவது அடியேனுக்கும் இந்தத் தற்பெருமைப் பழக்கம் தாராளமாக உண்டு என்பதால் இடி விழாமல் அரும்பாடு பட்டு நிறுத்தி வைத்திருக்கிறேன்! என்னே அற்புதமான சாதனை, பாருங்கள்!

இடி விழாமல் காக்கும் திறனைப் பற்றிய இந்தத் தற்பெருமைக்கு இத்துடன் ஒரு முற்றுப்புள்ளி வைத்து விட்டு. (இந்த இடத்தில் நினைத்த மாத்திரத்தில் ஒரு விஷயத்துக்கு 'டக்' கென்று முற்றுப்புள்ளி வைத்து விட என்னால் முடியும் என்று கொஞ்சம் தற்பெருமை ! அடித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது!) நண்பன் ராமசுவாமியைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறுகிறேன்.



அடடா! ராமசுவாமியின் தற்பெருமைக்கு ஈடு இணை உண்டோ? 'இந்திரன், சந்திரன்' என்று தன்னை உயர்த்திக் கொள்வதில் அவனுக்குள்ள சாமர்த்தியம் — எனக்குள்ளதை விடக் கொஞ்சம் குறைவு; அவ்வளவுதான்!

ஒரு நாளைக்கு நான் கொடுத்த விருந்தில் கலந்து கொண்டான் ராமசுவாமி. அடேயப்பா! விருந்தாவது விருந்து! நளபாகம் என்பார்களே, அன்றைக்கு அது தோற்று விட்டது போங்கள். என் வீட்டில் தினந்தோறும் சாப்பாடெல்லாம் விருந்து போலத்தான் இருக்கும். என்றாலும் அன்றைக்குப் பொறுக்கி எடுத்த நண்பர்களுக்கு விசேஷச் சாப்பாடு என்றால் அது தற்பெருமையல்ல, உண்மை!

போகட்டும், கோவிந்தன் என்ற எனது மற்றொரு நண்பனை ராமசுவாமிக்கு, விருந்துக்கு முன் அறிமுகம் செய்து வைத்தேன். "இவர் தான் மிஸ்டர் ராமசுவாமி!" என்றேன்.

"அப்படியா? சந்தோஷம்! நீங்கள் என்ன வேலையில் இருக்கிறீர்கள்?" என்று ஏதோ பேச்சுக்கு வினவினான் கோவிந்தன்.

"என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள்!" என்றான் ராமசுவாமி. "என்னைத் தெரியாது உங்களுக்கு? உலகத்திலேயே மிகச் சிறந்த எழுத்தாளன் நான்தானே ஐயா!!"

இப்படிப்பட்ட மாபெரும் தற்பெருமையைக் கோவிந்தன் எதிர்பார்க்கவேயில்லை என்பது அவன் முகபாவத்திலேயே தெரிந்தது.

ஆனால் நானா ஏமாறுகிறவன்? "டேய் சுவாமி!" என்று ராமசுவாமியைச் சீண்டிக் கொண்டே அழைத்தேன் நான்.

"நீ தற்பெருமை அடித்துக் கொள்வதெல்லாம் சரிதான்! ஆனால் நான் ஒருவன் இருப்பதை மறந்து விட்டுப் பேசுகிறாயே? என்னை எதிரில் வைத்துக் கொண்டே, 'உலகத்திலேயே சிறந்த எழுத்தாளன் நான்தான்' என்று உன்னைப் பற்றிக் கூறிக்கொள்ளலாமா நீ? தப்பு பார்!" என்று கடிந்து கொண்டேன். எப்படி என் சாமர்த்தியம்? கோவிந்தனோ தற்பெருமையின் இந்த எதிர்த் தாக்குதலை வேறு சமாளிக்க முடியாமல் தடுமாறினான்.

"வாஸ்தவம் தான்" என்று ஒப்புக் கொண்டான் ராமசுவாமி. "தற்பெருமையில் இந்த அளவுக்கு நான் போக வேண்டிய அவசியம் இல்லை தான். ஆனால் இதோ பாரு. இதிலே ஒரு சின்ன சங்கடம். 'உண்மையையே இனிமேல் பேசுவது' என்று நேற்றைக்குத்தான் நான் சபதம் எடுத்துக் கொண்டேன். அதனால்தான் அப்படிப் பகிரங்கமாக இந்த உண்மையை உங்களுக்குச் சொல்ல வேண்டியதாகிவிட்டது!"

எங்கள் இந்தத் தற்பெருமைத் தர்க்கத்தைக் கேட்டுக் கோவிந்தன் மூர்ச்சை அடைந்துவிழுந்தான் என்று நான் வெறுமனே தற்பெருமைக்காகச் சொல்லிக் கொள்ளவில்லை என்றால் நீங்கள் நம்பவா போகிறீர்கள்? —ஐராவதம்

# சங்கரன் கோயில் சங்கர நாரணர்

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

கோயமுத்தூர் மாவட்டத்திலே பழைய கோட்டை என்று ஓர் ஊர். பழையகோட்டையில் இருப்பவர் பட்டக்காரர். அவரை விடப் பிரசித்தமானது அவருடைய மாட்டுப் பண்ணை. ஆயிரக்கணக்கான காளைகளும் பசுக்களும் கன்றுகளும் அங்கே இருக்கின்றன. நான் கோவையில் இருந்த போது பட்டக்காரரது பண்ணையைப் பார்க்கச் சென்றேன். பல கண்காட்சிகளில் பரிசு பெற்ற காளைகளையெல்லாம் பார்த்தேன். அங்கே ஓரிடத்திலே பால் கறக்கும் பசுக்கள் நூற்றுக்கு மேலே வரிசையாகக் கட்டி வைக்கப்பட்டிருந்தன. அந்தப் பசுக்களின் கன்றுகளை வேறு ஒரு தனியிடத்தில் பட்டியிட்டு நிறுத்தியிருந்தது. மாலை நாலு அல்லது நாலரை மணி; பால் கறக்கும் நேரம். ஒவ்வொரு பசுவினிடம் ஒரு கறவைக்காரன். பின்னர் பட்டியிலுள்ள கன்றுகளை அவிழ்த்து விட்டு விட்டனர். கன்றுகளெல்லாம் துள்ளிக் கொண்டு வந்தன. ஒவ்வொரு கன்றும் அதனதன் தாய்ப் பசுவை நோக்கி ஓடின; மடியில் முட்டிப் பால் குடித்தன. ஒரு கன்று கூடத் தவறி வேறு தாய்ப் பசுவினை நாடவில்லை. இதே போல் ஆயிரம் பசுக்கள் நிற்கும் இடத்திலும் கன்று ஒன்றை அவிழ்த்துவிட்டால் போதும், அது அத்தனை பசுக்களிடையேயும் புகுந்து சென்று தன் தாய்ப் பசுவைக் கண்டுபிடித்து விடும். இந்தப் பண்ணையில் இந்த அதிசயத்தைப் பார்த்ததும், கவிச் சக்கரவர்த்தி கம்பன் பாடிய பாடல் ஒன்று என் ஞாபகத்துக்கு வந்தது.

> தாய் தன்னை அறியாத கன்றில்லை
> தன் கன்றை
> ஆயும் அறியும், உலகின் தாயாகி
> ஐய! நீ அறிதி எப்பொருளும்

என்று இறைவன் தாய் ஆகி உலக மக்களைப் புரக்கும் அருமையைப் பாடுகிறான் கம்பன். தாய்த் தன்மையிலும் தலைசிறந்த தாய்த் தன்மையாக அவன் கருதுவது பசுவுக்கும் கன்றுக்கும் உள்ள தொடர்பைத்தான். நாம் தான் பார்த்தோமே, ஒரு பசுவின் கன்று தன் தாயை ஆயிரம் பசுக்களிடையே நின்றாலும் கண்டு கொள்வதை. அதே போல் தன் கன்றையும் ஆயிரம் கன்றுகளிடையே நின்றாலும் தெரிந்து கொள்ளும் ஒரு பசு. இது ஓர் அதிசய அறிவுதானே. அந்த அறிவை உடையவள் உலகு புரக்கும் அன்னை. ஆம், அதனாலே ஒரு பெயர் ஆவுடையாள்—கோமதி என்று. பசுக்களாகிய உயிர்களைத் தன் உடைமையாகக் கொண்டு காப்பாற்றுகிறவள் ஆவுடையாள். இந்த ஆவுடையாள் கோயில் கொண்டிருக்கும் தலம்தான் சங்கரன் கோயில். அந்தச் சங்கரன் கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று.

சங்கரன்கோயில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஒரு தாலுகாவின் தலைநகரம். ரொம்பப் பெரிய ஊரும் அல்ல, சிறிய ஊரும் அல்ல. தென்பிராந்திய ரயில்வேயில் விருதுநகர் தென்காசி லயனில் இருக்கிறது. ஆதலால் நேரே அந்த ஸ்டேஷனுக்கு டிக்கட் எடுத்துக் கொண்டு போய் இறங்கி ஒரு மைல் நடந்தால் கோயில் வந்து சேரலாம். இல்லை, காரிலேயே போவதானால் திருநெல்வேலியிலிருந்து 35 மைல் வடமேற்காய்ப் போக வேணும். வடக்கே இருந்து வருவதானால் மதுரை ஸ்ரீவில்லிப்புத்தூர் ராஜபாளையம் ரோடு வழியாய் வரவேணும். எந்த வழி வந்தாலும் நல்ல பஸ் வசதியும் உண்டு. கோயில் வாயிலை ஒரு நல்ல கோபுரம் அழகு செய்கிறது! ஒன்பது தட்டுகளை உடைய இந்தக் கோபுரம் 125 அடி உயரம் இருக்கிறது. இக் கோபுரத்தின் ஒன்பதாவது தட்டிலே ஒரு பெரிய மணி தொங்குகிறது. அந்த மணி அங்குள்ள இயந்திரத்தின் துணைகொண்டு இரண்டு நாழிகைக்கு ஒரு முறை அடித்திருக்கிறது. அதனால் அதனை நாழிகைக் கடிகாரம் என்று வழங்கியிருக்கின்றனர். சென்ற ஐம்பது ஆண்டுகளாகக் கடிகாரம் ஓடுகிறதில்லை. மணியும் அடிக்கிறதில்லை. கோபுரத்தின் முன்பு ஒரு பெரிய மண்டபம். இக் கோயில் மூன்று பெரும் பகுதிகளாக இருக்கிறது. தென்புறத்தில் சங்கரலிங்கர் சந்நிதி. வடபுறத்தில் கோமதி அம்மையின் திருக்கோயில். இருவருக்கும் இடையே சங்கர நாரணர் சந்நிதி. கோபுர வாயிலில் நுழைந்து நடந்தால் நாம் முதலில் சென்று சேர்வது சங்கரலிங்கர் சந்நிதியில்தான். சங்கரலிங்கர் புற்றிடம் தோன்றியவர். ஆதலால் அவரை வன்மீகநாதர் என்றும் அழைப்பர். ஆதியில் இந்த இடம் முழுதும் புன்னைவனமாக இருந்திருக்கிறது. வனத்தைக் காத்து வந்த காவல் பறையன் அங்கிருந்த புற்றை வெட்ட, புற்றில் ஒரு பாம்பும் லிங்கமும் இருந்திருக்கின்றன. இந்தத் தகவலைத் திருநெல்வேலியை அடுத்த மணலூரில் இருந்து அரசாண்ட உக்கிரபாண்டியனிடம் சொல்ல, உக்கிரபாண்டியன் காட்டை வெட்டித் திருத்தி நாடாக்கிக் கோயிலையும் கட்டியிருக்கிறான். காவல் பறையன் சொல்வதற்கு முன்பே உக்கிர பாண்டியனின் பட்டத்து யானையும் கொம்பினால் தரையைக் குத்தியிருக்கிறது. அந்த இடத்திலிருந்து மண் எடுத்து வந்தே திருவிழா எல்லாம் நடத்தியிருக்கிறான் பாண்டியன். யானை கொம்பால் குத்திக் காட்டிய இடமே பெருங்கோட்டூர் என்று வழங்குகிறது. காவல் பறையனுக்கும் ஊரின் தென் கோடியில் ஒரு சிறு கோயில் இருக்கிறது. அந்தக் கோயில் இருக்கும் தெருவே காப்பறையன் தெரு என்றும் இன்று வழங்குகிறது. காவல் பறையன் உக்கிரபாண்டியன் சிலைகள் எல்லாம் கோயிலில் இருக்கின்றன. சங்கரலிங்கர் கோயிலின் வடமேற்கு மூலையில் புற்றும் இருக்கிறது.

புற்றைச் சுற்றிக் கட்டிப் பாதுகாத்து வருகின்றனர். இந்தத் தலத்துக்கு வருவோரது உடற்பிணியெல்லாம் இந்தப் புற்று மண்ணால் நீங்குகிறது. ஆதலால் கோயிலில் பிரசாதமாகவே இப் புற்று மண்ணை வில்லைகளாக ஆக்கிக் கொடுக்கின்றனர்.

இக்கோயிலில் உள்ள சங்கரலிங்கரைவிடப் பிரபலமானவள் கோமதி அம்மையே. முன்னமேயே தெரிந்து கொண்டிருக்கும் தாயாகிய தத்துவமே கோமதியம்மை வடிவில் அங்கு கோயில் கொண்டிருக்கிறது என்று. கிட்டத்தட்ட இருநூறு வருஷங்களுக்கு முன்பு திருவாவடுதுறையில் பத்தாவது குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்தவர் வெலப்ப தேசிகர். அவர் சங்கரன் கோயிலுக்கு வந்து, கோமதியம்மையின் அருளைத் துணைக்கொண்டு, குட்டம், குன்மம் முதலிய தீரா நோய்களையும் தீர்த்தருளி யிருக்கிறார். அவர் கோமதியம்மையின் சந்நிதியில் ஒரு மந்திர சக்கரத்தைப் பதித்திருக்கிறார். அந்தச் சக்கரத்துக்குக்கோமதியம்மை தந்தருளிய சக்தியினாலே அங்கு ஆடாத பேயும் ஆடுகிறது; தீராத நோயும் தீர்கிறது. ஆதலால் கோமதி அம்மையின் பிரபாவம் நாளும் வளர்ந்தோங்கி வருகிறது. கோமதியின் சந்நிதிக்கெதிரே தான் நாககனித்தீர்த்தம் இருக்கிறது.

சங்கரலிங்கரும் கோமதியும்தான் ஆதியிலேயே தோன்றிய சந்நிதிகள். இடையில் தோன்றியவர்தான் சங்கர நாராயணர். உலகில் உள்ள மக்களுள் சிவனை வழிபடும் சைவர்கள் உண்டு. விஷ்ணுவை வழிபடும் வைஷ்ணவர்கள் உண்டு. இவர் ஏதோ அவரவர்களின் இஷ்ட தெய்வத்தை மட்டும் வழிபட்டார்கள் என்று இல்லை. ஒருவர் மற்றவரைக் குறை கூறுவது. அவர்களோடு வாதிடுவது என்று நெடுகிலும் வைத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். அரன் அதிகன் என்று சைவர் சொன்னால், இல்லை உலகளந்த அரி அதிகன் என்றே வாது செய்திருக்கிறார் வைஷ்ணவர். ஆலம் உண்டான் எங்கள் நீலகண்டன் என்று சைவர் விருப்புக் கூறினால் வைஷ்ணவரும் விட்டுக் கொடுக்காமலேயே அண்டம் உண்ட போது அந்த ஆலம் உண்ட கண்டனையுமே கூட உண்டிருக்கிறான் எங்கள் மால் என்று பேசி யிருக்கிறார். மக்களில் மாத்திரம் அல்ல நாகர்களிலும் இச்சைவ வைஷ்ணவச் சண்டை நடந்து வந்திருக்கிறது. சங்கரன், பதுமன் என்று இரண்டு நாகர்கள்; சங்கரன் சிவபக்தன், பதுமன் விஷ்ணு பக்தன். இவர்களுக்குள்ளும் இந்த வாதம். இப்படிப் பலர் வாதிட அன்னை கோமதிக்கே, ஆம், பார்வதிதேவிக்கே சந்தேகம் வந்து விடுகிறது. இருவரும் ஒருவரே தாமா, இல்லை வேறு வேறு நபர்கள் தாமா என்று. இதைக் கேட்டிருக்கிறாள் அவள் இறைவனிடம். அவர் என்ன அவ்வளவு எளிதில் விடை சொல்லி விடுவாரா? மண்ணுலகத்தில் புன்னை வனத்தில் சென்று தவமிருக்கச் சொல்லியிருக்கிறார். அப்படியே அன்னையும் அங்கு வந்து தவம் கிடக்கிறாள். ஆடி மாதம் பௌர்ணமி அன்று சங்கரனார் சங்கர நாராயணர் உருவில் வந்து அம்மைக்குக் காட்சி கொடுத்திருக்கிறார். சங்கரன் கோயிலில் சிறப்பாக நடைபெறும் ஆடித் தவசு உற்சவம், இந்தச் சங்கரநாராயணர் காட்சியை விளக்க எழுந்ததே. இந்தச் சங்கர நாராயணர் கோலத்தைத்தானே பொய்கை ஆழ்வார்,



சங்கரநாராயணர்

அரன் நாராயணன் நாமம்
    ஆன்விடை புள் ஊர்தி
உரைநூல் மறை ; உறையும்
    கோயில் - வரைநீர்
கருமம் அழிப்பு அளிப்பு
    கையில் வேல் நேமி
உருவம் கார் மேனிஒன்று

என்று பாடிப் பரவி யிருக்கிறார். இதனால் அரி, அயன், அரன் எல்லோரும் ஒன்றே, அயனும் அரியும் அரனார் திரு உருவில் அடங்கினவரே என்ற உண்மை நிலைபெற்றிருக்கிறது. ஆம்! அம்பிகை கோமதி மாத்திரம் அல்ல, சங்கரனும் பதுமனுமே இச் சங்கர நாராயணர் காட்சியைக் கண்டு உண்மையை உணர்ந்து கொண்டிருக்கின்றனர்.

ஐய ! நின் கூறே மாலும்
அயன்முதல் தேவும் என்னும்
மெய்யுணர்வே எஞ்ஞான்றும்
விளைவுற வேண்டும்

என்று நாமெல்லாம் சேர்ந்து பாடவும் தெரிந்து கொண்டிருக்கிறோம். இந்தச் சங்கர நாராயணரே, அத்தன் சங்கரலிங்கருக்கும் அம்மை கோமதிக்கும் இடையில் எழுந்தருளி யிருக்கிறார். மூலவர் கம்பீரமான வடிவர். அதிலும் பகுதி பகுதியாகக் காப்பிட்டுக் காட்டும் போது இரண்டுருவும் ஒன்றாய் இணைந்து நிற்கிற கோலம் பேரழகு.

இந்தச் சங்கர நாராயணரைப் பற்றி ஒரு சுவையான வரலாறு. கி.பி. 1711–ல் திருமலை நாயக்கரது தானாதிபதியாக இந்த வட்டாரத் தில் இருந்தவர் பொன்னம்பலம் பிள்ளை. அப் போது நாயக்கரது தளவாயாக இருந்தவர் ஆறை அழகப்ப முதலியார். சங்கரர் கோயில் சங்கரநாராயணரைச் செண்பகக் கண்ணு பட்டர் என்பவர் திருடிக் கொண்டு போய் உத்தர கோச மங்கையில் அடகு வைத்து விட்டார். ராமநாதபுரம் சேதுபதி விஜய ரகுநாதத் தேவர் அத்திருவுருவைக் கோயில் மூர்த்திகளுடன் வைத்துப் பூசை செய்ய உத்தரவிட்டிருந்தார். இத்தகவல் அறிந்து ஆறை அழகப்ப முதலியார் பொன்னம்பலம் பிள்ளையை அனுப்பித் திருவுருவை மீட்டு வரச் சொல்லியிருந்தார். பொன்னம்பலம் பிள்ளை உத்தர கோச மங்கை சென்று திருவுருவைக் கண்டு, ஒரு பாட்டுப் பாடினார்:

புற்றெங்கே ! புன்னை
வனம் எங்கே ? பொற்கோயில்
சுற்றெங்கே நாக
சுனை எங்கே ?-இத்தனையும்
சேரத்தான் அங்கிருக்கத்
தேவரீர் தான்தனித்தித்
தூரத்தே வந்ததென்ன சொல்.

உடனே பெருமாளும்,

வின்னுவமோ சிராசை
விடுவிட்டுக் காடுதனில்
நள்ளிருளில் செண்பகக்கண்
நம்பியான் —மெள்ளவே
ஆடெடுக்கும் கள்ளனைப்போல்
அஞ்சாது எமைக் கரிசல்
காடுதொறும்மே இழுத்ததக்கால்

என்று பாடியிருக்கிறார். இவ்விஷயம் சேதுபதி காதில் விழ, பொன்னம்பலம் பிள்ளை மூலமே திரும்பவும் மூர்த்தியைச் சங்கரன் கோவி லுக்கு அனுப்பியிருக்கிறார்.

உக்கிரபாண்டியர் கிட்டத்தட்ட ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தக் கோயிலைக் கட்டி யிருக்கிறார். அக்காலத்தே கருவை நகரில் உள்ள பிரகத்குவனு பாண்டியரும் இங்கே பல திருப்பணிகள் செய்திருக்கிறார். இத்தலத் துக்கு ஒரு புராணம் சிவலமாற பாண்டியன் பாடியிருக்கிறார். அவர் இவ்வூரில் ஒரு குளம் வெட்டியிருக்கிறார். அது சிவலப்பேரி என்ற பெயரில் உடைகுளமாக இருக்கிறது. அவர் பெயராலேயே சிவலராயன் ஏந்தல் என்ற ஊரும் எழுந்திருக்கிறது.

மூவர் முதலிகள் இக்கோயிலுக்கு வந்து பதிகங்கள் பாடியதாக வரலாறு இல்லை. அன்பர் ஒருவர் சங்கர சதாசிவமாலை என்று ஒரு நூல் இயற்றியிருக்கிறார். எல்லாப் பாடல் களும் கிடைக்கவில்லை. அன்னையின் அருள் சக்தியை உணர்ந்த திருநெல்வேலி அழகிய சொக்கநாத பிள்ளை பாடல்கள் பிரசித்த மானவை. அதில் ஒரு பாட்டு, அன்னைக்கே சவால் விடும் பாட்டு.

கோடாய் வரும் நமனைக்
கிட்ட வராதே தூரப்
போடா, எனவோட்டி உன்
பொற் கமலத்தாள் நிழற்கீழ்
வாடா என அழைத்து
வாழ்வித்தால் அம்ம ! உனைக்
கூடாதென்று ஆர் தடுப்பார் ?
கோமதித்தாய் ஈசுவரியே !

என்பது பாட்டு. எவ்வளவு உறுதியான உள்ளத்தில் இருந்து பிறந்திருக்கிறது. யம னையே தூரப்போடா என்று ஓட்டி, தன்தாள் நிழலுக்கு வாடா என அன்னையால் அழைக்க முடியாதா என்ன? ஆம்! அப்படி அழைப்பாள் என்று நம்புறான் கவிஞன். நாமும் அப்படி நம்பிக்கொண்டே வீடு திரும்பலாம்.

உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா ஒன்றே ஒன்று
போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள் • முத்திரையுடன் பாது
காப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா என்று கவனியுங்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா ஒன்றே ஒன்று
முத்திரையுடன் பாதுகாப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா
என்று கவனியுங்கள் • போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள்.

# நீங்கள் பாதுகாப்பீர்கள்

உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா ஒன்றே ஒன்று
போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள் • முத்திரையுடன் பாது
காப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா என்று கவனியுங்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக ஒன்றே ஒன்று
முத்திரையுடன் பாதுகாப்பு அ டி இருக்கிறதா
என்று கவனியுங்கள் • பே கொள்ளாதீர்கள்.




உண்மையான பிலிப்ஸ் மி ா ஒன்றே ஒன்று
போலிகளை ஏற்றுக் கெ ரையுடன் பாது
காப்பு அமைக்கப்பட்ட கவனியுங்கள்.
உண்மையான பிலிப் ஒன்றே ஒன்று
முத்திரையுடன் பா மூடி இருக்கிறதா
என்று கவனியுங் கொள்ளாதீர்கள்.
உண்மையான பி ஸியா ஒன்றே ஒன்று
போலிகளை ஏ முத்திரையுடன் பாது
காப்பு அமை தா என்று கவனியுங்கள்.
உண்மையா க்னீஸியா ஒன்றே ஒன்று
முத்திரையுட க்கப்பட்ட மூடி இருக்கிறதா
என்று கவனிய ளை ஏற்றுக் கொள்ளாதீர்கள்.
உண்மையான பிலிப ஆப் மக்னீஸியா ஒன்றே ஒன்று

ஒவ்வொரு பிலிப்ஸ் பாட்டிலின் மூடியும் போலிகளை கலக்க முடியாதபடி பாதுகாக்கிறது. இந்த மூடி பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியாவின் ஒவ்வொரு துளியையும் அசல் என உத்திரவாதம் அளிக்கிறது. மலச் சிக்கல் ஏற்படும் பொழுது உங்களுக்கு பத்திரமாகவும், மிருதுவாகவும் பூரண நிவாரணத்தை உறுதியாக்குகிறது.

பிரசித்தி பெற்ற மில்க் ஆப் மக்னீஸியா ஒரே இரவிலே ஆரோக்கிய ஒழுங்கை திரும்ப ஒப்படைக்கிறது. அதி சீக்கிரம் அமிலத்தை சமனப்படுத்தி அதனால் ஏற்படும் வயிற்றுக் கோளாறையும், மார்பு எரிச்சலையும், வாயு உபாதைகளையும் தவிர்க்கிறது.

போலிகளை கலக்க முடியாதபடி மூடி அமைக்கப்பட்டிருக்கும் நீல நிற பாட்டிலா என்று பாருங்கள். எப்பொழுதும் அசல் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியாவையே வாங்குங்கள். 2 அவுன்ஸ் 4 அவுன்ஸ் மற்றும் 12 அவுன்ஸ்களில்-கிடைக்கிறது.




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப மக்னீஸியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா ஒன்றே ஒன்று

பிரத்தியேக விநியோகஸ்தர்கள்: டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்.

ரீடா கூந்தலைப் பாதுகாக்கும்



**தொல்லைகளைத் துரிதமாகவும்
திறமையாகவும் நீக்குகிறது.**

ரீடாவை உபயோகித்து மயிர்க்கால்களுக்
குப் போஷாக்குத் தருவதால் உங்கள்
கூந்தல் நீண்டு வளர்ந்து மிருதுவாகவும்
பளபளப்பான கருமை நிறத்துடனும்
காணப்படும். இதிலுள்ள மருந்துச்சத்துக்
கள், மயிர் கொட்டுதலை நிறுத்தி,
பொடுகைப்போக்கி, நரைக்காமல் பாது
காக்கும். புட்டியிலுள்ள ரீடாவைத்
தேங்காய் எண்ணெய், கடுகு அல்லது
நல்லெண்ணெயில் கலந்து எப்போதும்
உபயோகியுங்கள். காரிருள் போன்ற
கருங்கூந்தல் அழகை நிச்சயம் நீங்கள்
பெறலாம். ரீடாவை உபயோகிப்பதுடன்
உங்கள் நண்பர்களுக்கும் சிபாரிசு
செய்யுங்கள்.



# ரீடா

கவர்ச்சி தரும் கூந்தலின் ரகசியம்

ரீடா கம்பெனி, சென்னை-1.

R.G TM

# படித்துப் பாருங்கள்



## இதய நாதம்

நாதத்தைப் பிரும்மமாக உபாசித்து எத்தனையோ மகான்கள் பேரின்ப வீடு பெற்றிருக்கிறார்கள். இப்புதினத்தில் அந்த உண்மையே அடிநாதமாக விளங்குகிறது. இன்ப வாரிதியில் ஆழ்ந்தும் இசை நாதமே உள்ளடங்கிய நாதமாகப் பெருகி ஓடி மௌனம் என்னும் பெரு நிலையை அடைந்து இதயத்துக்குப் பேரின்பம் அளிக்கிறது.

கிட்டு என்னும் பாலகனுக்கு இசையிலே பெரும் பற்று. அது பரம்பரையாக அவனுக்கு வந்த சொத்து. தன் கணவனுடன் அனுபவித்த துன்ப வாழ்க்கை காரணமாக அவன் தாய்க்குச் சங்கீதம் என்றாலே வேம்பாக இருக்கிறது. அவனைத் தன் வழியில் திருப்ப முயல்கிறாள். அவனோ சொல்லாமல் கொள்ளாமல் ஓடித் திருவையாறு சபேசய்யர் என்னும் சங்கீத மேதையின் சீடனாகிறான். அதன்பின் நாடு புகழும் கிருஷ்ண பாகவதராகிறான். அவனுடைய இல்வாழ்வு அவன் ஆண்டவனின் பரம பாகவதனாகத் துணை புரிகிறது. அவனுக்கு வாய்த்த மனைவி இல்லறம் என்னும் நல்லறத்தை நடத்திச் செல்லப் பொருளைப் பெரிதாகக் கருதுபவள். தன் கணவன் தனது சங்கீத ஞானத்தை உபயோகித்துப் பொருளீட்டக்கூடாதா என்று வருந்துபவள். அவனோ சங்கீதத்தை விலைகூற விரும்பாதவன். இப்படி இருவரும் இரு துருவங்களாக இருக்க, குடும்ப வண்டி ஓடும் அழகை இதன் ஆசிரியர் திரு ந. சிதம்பர சுப்பிரமணியம் வெகு சுவாரஸ்யமாகச் சித்திரித்திருக்கிறார். அப்புறம் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்துக் குடும்பத்தைச் சேர்ந்து நடத்தும் நயத்தையும் நன்கு எழுதியிருக்கிறார்.

உலக நியதியையும், உலகத்தில் வாழ்ந்தவண்ணமே உயர் நிலையை அடைய வாழ்வின் இன்ப துன்பங்கள் எப்படி உதவுகின்றன என்பதையும் இந்த நவீனத்திலே காண்கிறோம். சம்பவங்களையும், சிக்கல்களையும், மோதல்களையும் இப்புதினத்திலே அதிகமாகக் காண முடியாது. ஆனால் இதயநாதம் பெருக்கும் சுகத்தைக் காணலாம்; அந்தச் சுகத்திலே எங்கும் நிறை நாதப் பிரும்மத்தைக் காணலாம். அந்த நாதமே மௌனமாக உருவெடுத்து அளவிலாப் பேரின்பத்தைச் சுரக்கச் செய்வதையும் காணலாம். பெருந்தத்துவத்தைச் சுலபமாகப் புரிய வைக்கும் நற்பணியிலே ஆசிரியர் சிறப்பாக வெற்றி கண்டிருக்கிறார்.

பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேணி, சென்னை - 5; விலை ரூ. 3.

## மாலவல்லியின் தியாகம்

அன்பு, அஹிம்சை, சத்தியத்தைக் கைக்கொண்டு ஆசை, அவா, துவேஷத்தை அழிக்க உபதேசித்தார் புத்தர். ஆனால் இவையனைத்துக்கும் மாறாகச் சில புல்லுருவிகள் பாலில் விஷத்தைக் கலப்பதுபோல் தங்கள் சாம்ராஜ்ய ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளவும், தங்களை இனம் கண்டு கொள்ளாமல் மறைத்துக் கொள்ளவும் புத்த சங்கத்தைத் தங்கள் இருப்பிடமாகக் கொள்ள ஆரம்பித்தனர். இத்தகையதொரு பின்னணியில் எழுதப்பட்டதுதான் இந்தச் சரித்திர நவீனம். நாவலுக்கு விறுவிறுப்பையூட்டிப் படிக்கவேண்டுமென்ற ஆவலைப் பெரிதும் தூண்டியிருக்கிறார் கி. ரா. கோபாலன்.

இந்தக் கதையின் தயாரிப்பிலே ஓர் அரிய சரித்திரம் மறைந்திருக்கிறது. இந்த அற்புதமான நாவலைத் தயாரித்த திரு கி. ரா. கோபாலன் முக்கால்வாசி நாவலை எழுதிக் கொண்டிருக்கும்போதே அமரராகி விட்டார். இந்தத் தருணத்தில் கதை அப்படியே நின்றுவிடுமோ என்ற வாசகர்களின் தயக்கத்தைப் போக்கி ஆசிரியரின் குறிப்புகளை வைத்துக் கொண்டு கதையை நன்கு முடித்துக் கொடுத்தார் கல்கி உதவி ஆசிரியர் திரு சோமாஸ் அவர்கள்.

கங்கநாட்டு இளவரசன் பிருதிவீபதியும் சுகேசியும் மணம்





புரிந்து கொண்டனர். ஆனால் அவர்கள் மனம் அலைபாய்ந்து கொண்டிருந்தது. பிருதிவிபதி யினால் தன் காதலி மாலவல்லியை மறக்க முடியவில்லை. கவேசி தன் கணவன் மீதுள்ள அளவற்ற பாசத்தினால் மாலவல்லிக்கும் தன்னுடன் பிருதிவிபதியின் அன்பைப் பகிர்ந்து கொடுக்க முன்வந்தாள். ஆனால் இரு மாசற்ற உள்ளங்களின் பிணைப்புக்குக் குறுக்கே நிற்க மாலவல்லி விரும்பவில்லை. அவள் உள்ளம் பண்பட்டுப் போதி சத்துவ ரிடம் அல்லவா ஈடுபட்டு விட்டது? அதனால் தன் காதலையும் தியாகம் செய்து, கவேசியின் வாழ்வு வளம்பெற வழிவகுத்து விட்டாள்.

'மாலவல்லியின்' தியாகம் உணர்ச்சியும், கதைப் பண்பும், வீரமும், குண சித்திரமும் சிறப்புடன் அமைந்த நாவல். அங்கங்கே காணும் அச்சுப் பிழைகளை நீக்கியிருந்தால் அழகிய சித்திரங்களோடு கூடிய இந்தப் புத்தகம் பூரணமானதாகத் திகழ்ந்திருக்கும்.

பிரசுரம்: கலைஞன் பதிப்பகம், தியாகராய நகரம், சென்னை—17, விலை ரூ. 7—50.

## பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்

மிக அருமையான பதினைந்து கட்டுரை களால் பழந்தமிழர் வாழ்வையும், வளர்ச்சி யையும், இந்த நூலில் விளக்கியுள்ளார் காலஞ் சென்ற பேரறிஞர் சாமி சிதம்பரனார். தமிழர் கண்ட கடவுளர், தமிழர் கண்ட நல்லறம், தமிழர் உணவுவகை, தமிழ்நாட்டுப் பெண்களின் பண்பாடு முதலிய எல்லாத் தலைப்புக்களும் தெரிந்துகொள்ள வேண்டிய பயன் நிறைந்த செய்திகளைக் கட்டுரைகளாகத் தருகின்றன. இந்த நூலுக்கான சான்றுகளும் பழைய தமிழ் நூல்களிலிருந்து வேண்டுமிடங் களில் மேற்கோள்களாகத் தரப்பட்டுள்ளன.

ஒரேயடியாகப் பழமையையே போற்றிப் புதுமையை வெறுக்காமலும், புதுமையையே போற்றிப் பழமையையே வெறுக்காமலும் புதிய கண்ணோட்டத்துடன் பழந் தமிழர் வாழ்வைப் படம் பிடித்தாற்போல் காட்டி விளக்கும் நல்ல நூல் இது. இருநூற்று இருபத் தொன்பது பக்கங்களுள் மிகப் பெரிய தமிழ்ச் சமூகத்தின் பழைய வாழ்வை அழகுறத் தொகுத்து விவரித்த சாதனை வியப்புக்குரியது.

வெளியீடு: என். சி. பி. எச். பிரைவேட், சென்னை—2. விலை ரூ. 3—50.

## இராஜமோகினி

ஈழ நாட்டு வரலாற்றுப் பின்னணியில் ஒரு தொடர்புடைய இரு குறு நாவல் களை வரைந்தளித்திருக்கிறார் திரு கோவி. மணிசேகரன்.

'சிங்கள மன்னர் தேவனும்பியதிசர் முதுமை யில் ஓய்வு பெறும்போது அவர் மகன் குழந் தைப் பருவத்தினனாயிருப்பதால் சகோதரர் மகாநாகரை அரியணை ஏற்றுகிறார். தானே ஆட்சி செய்யப் பேராசையுற்ற ராணி ராஜ மோகினி மகாநாகரைக் கொன்று ஆட்சி யைக் கைப்பற்றக் கருதி விஷமேற்றிய மாங் கனிகளை அவருண்ண அனுப்புகிறாள். அந்த மாம்பழத்தை அவள் மகனே உண்ண நேர்ந்து அவன் இறக்கிறான். மகன் இறந்ததற்கு மகா நாகரே காரணமெனப் பழி சுமத்தி அவரை யும், அவர் மனைவியையும் நாடு கடத்து கிறாள் ராஜமோகினி. மகாநாகர் மனைவி அனுலா போகும்போது, 'நீ இருக்கும் அரி யணையில் வைத்தே உனக்குத் தண்டனை விதிப்பேன்' என்று ராணியிடம் சபதமிட்டுச் செல்கிறாள். பின்பு நாடு கடத்தப்பட்ட அவர்கள் இருவரும் ரோகணத்தை அடை கின்றனர். அங்கே அப்போது ரோகணத் துக்கும் மலைநாட்டுக்கும் போர் நடந்து கொண்டிருக்கிறது. போரில் ரோகணத்துக்கு உதவி வெற்றி தேடித் தந்த மகாநாகர் ரோகண மன்னராகிப் பின்பு ராஜமோகினி யின் ஆட்சிப் பகுதிகளையும் கைப்பற்றுகிறார். நாடு கடத்தப்பட்டபோது மகாநாகரின் மனைவி அனுலா செய்த சபதமும் நிறை வேறுகிறது.'

கதை மாங்கனி, மதங்கினி என்று இரண்டு அதிகாரங்களாகப் பிரித்துக் கொண்டு எழுதப் பட்டிருக்கிறது. இயன்றவரை சுவையாகவும், நன்றாகவும் எழுதப்பட்டிருக்கிறது.

வெளியீடு, வள்ளுவர் பண்ணை, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 2.

## தேவதாத்யாய ப்ராஹ்மணமும் ஸம்ஹிதோபநிஷத் ப்ராஹ்மணமும்

(ஸம்ஸ்க்ருதம்)

தேவதாத்யாய ப்ராஹ்மணம் எல்லா யாகங்களிலும் உபயோகப்படும் ஸாமங்களின் தேவதைகளைப் பற்றியும், காயத்ரீ முதலிய சந்தங்களின் வர்ணங்கள், காயத்ரீ தேவதை யிடம் மற்ற தேவதைகளின் அடக்கம், காயத் ரீயைப் பற்றிய மற்ற விவரங்கள் ஆகிய வற்றைப் பற்றியும் கூறுகிறது. ஸம்ஹிதோப நிஷத் ப்ராஹ்மணம், ஸப்த ஸ்வர லக்ஷணம், ஆசாரிய சிஷ்ய லக்ஷணம், அத்தியயன முறை, பக்தி லக்ஷணம், தான லக்ஷணம் முதலிய வற்றைக் கூறுகிறது. இவ்விரண்டின் மூல மாகவும் ஸாம வேதத்தின் பெருமை நன்றாக விளங்குகிறது. இவற்றை ஸம்ஸ்க்ருதத்தில் ஸாயண பாஷ்யத்துடனும், த்விஜராஜபட்டர் பாஷ்யத்துடனும் குறிப்புரை சேர்த்து வேதாந்த சிரோமணி மாயூரம் ஸ்ரீராமநாத தீக்ஷிதர் வெளியிட்டிருக்கிறார். ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரிய சுவாமிகளுடைய ஸ்ரீமுகம் இந் நூலை அலங்கரிக்கிறது.

சாந்தோக்யோபநிஷத்து கூறுவது போல் மந்திரங்களின் கருத்தை அறிந்தவர்களும் அறி யாதவர்களுமாகிய இரு வகையாரும் கருமங் களைச் செய்தபோதிலும், அறிவும் அறியாமை யும் முற்றும் வேறுகையால், அர்த்த ஞானத் துடனும் சிரத்தையும் முறை பிறழாமலும் எது செய்யப்படுகிறதோ அதுவே வீரிய முடையதாகும். ஆதலால் வைதிக மந்திரங் களின் அர்த்தஞானம் பரவும் பொருட்டுப் பிரகசிக்கப்படும் இது போன்ற நூல்களை ஆஸ்திகர்கள் அன்புடன் வரவேற்று ஆதரிப் பார்கள் என்பதில் ஐயமில்லை.

கிடைக்குமிடம்: தேசிய உயர்நிலைப் பள்ளி, மன்னார்குடி. விலை: ரூ. 1—25.

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor. T. Sadasivam.



வாடாத இளமையழகு
வாராதோ
விரலசைந்தால்!
அன்றாடம் ஹிமாலயா புக்கே ஸ்நோ பூசிக்கொள்ளுங்கள்: உங்கள் சருமம் மென்மையுடனும், புது மலர்ச்சியோடும் மாறாத இளமையோடும் சோபிக்கும்!
முகப்பருக்களும், சுருக்கங்களும், வரட்சியும் ஏற்படாமல் பாதுகாக்கிறது ஹிமாலயா புக்கே ஸ்நோ. மாறாத இளமைப் பொலிவுக்கு உபயோகியுங்கள் ஹிமாலயா புக்கே ஸ்நோ.
எடுப்பான புது ஜாடி
மேக்கான புது அட்டைப்பெட்டி
Himalaya Bouquet Snow
Himalaya Bouquet Snow
ஹிமாலயா
புக்கே
ஸ்நோ
HBS.21-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

